# கல்கி

30.5.2004


"தொலைச்சுப் போடுவேன், தொலைச்சு...!" 16





இணைப்புப் புத்தக
ட்டை படம்: ஸ்ரீஹரி

"ஆளை விடுங்க சாமி!" 76



செய்தார்கள். பணிக்கு நிறைய தண்ணீர் தேவை என்பதால், வாட்டர் டேங்க் ஒன்றை மாடியில் கொண்டு வைத்தார்கள். மணல், சிமெண்ட் குழைக்கவும், செங்கல் நனைக்கவும், கைகால்கள் கழுவவும் தொழிலாளிகளுக்கு மிகவும் வசதியாக இருந்தது. இந்தச்

# இரண்டு மூனு

**"எங்களுக்கும் எழுதறதுக்கு கொஞ்சம் வாய்ப்புக் கொடுங்கப்பா" என்று ஏராளமான வாசகர்கள் நம்மைத் துளைத்தெடுக்க, இந்தப் பக்கங்களை வாசகர்களுக்கென விட்டுவிட்டது ஆசிரியர்குழு. இது உங்க ஏரியா. ஜமாய்ங்க வாசகர்களே!**



### யோசனை சொல்லுங்க!

கேரள மாநிலத்தில் திரூர் அருகில் பொன்முண்டம் கிராமப் பஞ்சாயத்து ஆபீஸ் உள்ளது. இந்த பஞ்சாயத்து ஆபீஸ் கட்டடத்தின் மேல், ஒரு மாடி கட்ட முடிவு

சந்தோஷத்தில் ஜன்னல் வைத்து மதில் கட்டி, கதவு போட்டு, மேலே சார்புக் கூரை அமைத்து, சுவர்களுக்கு வெள்ளையும் அடித்துவிட்டார்கள்.

வாட்டர் டேங்க் அறைக்குள் இருந்ததை மறந்துவிட்டார்கள். டேங்கை வெளியே எடுக்கலாம் என்றால், அறையின் கதவு டேங்கை விடச் சிறியதாக இருக்கிறது. டேங்க் அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும் என்றால், 'ஆபீஸ் அறைக்குள் பாதி இடத்தை அடைத்துக் கொண்டு, வாட்டர் டேங்கா?' என்ற கேள்வி எழுகிறது. வாசகர்களுக்கு ஏதாவது யோசனை தோன்றுகிறதா?

- திருவனந்தபுரம் எஸ்.எஸ். மணி

### கண்டேன் சுந்தரியை..

சக்தி பீடங்களைத் தரிசிக்க வேண்டும்




* திரிபுரசுந்தரி அம்மன் என்பது என்னுடைய வெகுநாள் ஆசை. சமீபத்தில் ஒரு குழுவாக கல்கத்தா, மற்றும் வடகிழக்கு மாநிலங்களில் உள்ள சக்தி பீடங்களுக்கு யாத்திரை சென்று வந்தோம். திரிபுராவில் அமைந்துள்ள திரிபுர சுந்தரி அம்மனின் தரிசனம், எங்களை மெய்சிலிர்க்க வைத்தது.

கௌஹாத்தியில் இருந்து ரயிலில் லூம்டிங் என்ற ஊருக்குச் சென்று, அடுத்து பதர்ப்பூர் சென்றோம். அங்கிருந்து பஸ்ஸில் குமார்காம் சென்று அடைந்தோம். அடுத்து மறு நாள் ஜீப்பில் அகர்தலாவுக்குக் கிளம்பினோம். குமார் காமிலிருந்து தெளிய மூர்ரா என்ற ஊர் வரை, நம்முடன் பாதுகாப்பாக இராணுவத்தைச் சேர்ந்தவர்கள் ஜீப்பில் கூடவே வந்தனர்.

அம்பாள் சிலை வடிவில் பக்தர்களுக்குக் காட்சி அளிக்கிறாள். அம்பாளின் உறுப்புகள் பாரதநாடு முழுவதும் சிதறிவிழுந்ததாக ஐதீகம். இது அம்பாளின் கணுக்கால் விழுந்த இடம். கோவிலுக்கு எதிரே மிகப் பெரிய குளம் இருக்கிறது. குளத்தில் மீன்கள், ஆமைகள் நிறைந்துள்ளன. தீவிரவாதம் காரணமாக, யாத்ரீகர்களின் வரவு குறைந்துவிட்டதாக கோயிலிருந்த பூஜாரி தெரிவித்தார்.

- பி. ராஜகுமாரி, சிதம்பரம்

## பேஸ்ட் வேணாம், டேஸ்ட் போதும்!

கரும்பு, ஜூஸாகக் குடிப்பதைவிட, மென்று சுவைக்கும்போது சுவையோடுகூட, பற்கள் இயற்கையாகவே, நன்கு சுத்தம் செய்யப்படுகின்றன.

## உப்பிட்டவரை...

குழந்தைகள் விரும்பிச் சாப்பிடும் 'சிப்ஸ்' மற்றும் எளிதாகச் சமைத்து உண்ண முடிகிற நூடுல்ஸ் போன்றவற்றில், உப்பு அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளது. சைனீஸ் ரெஸ்டாரண்ட், ஃபாஸ்ட்ஃபுட் கடைகளில் விற்கப்படும் உணவுகளிலும் அதிக அளவு உப்பு சேர்க்கப்படுகிறது. அதனால் இது போன்ற உணவு வகைகளைத் தவிர்ப்பது நல்லது.

உடல் பருமனுக்கும், உப்பிற்கும் அதிகத் தொடர்பு உள்ளது. உப்பைக் குறைவாகச் சேர்ப்பதால், உடல் நலம் பாதுகாக்கப்படுவதுடன், உடல் பருமனையும் கட்டுப்படுத்தலாம்.

- சங்கரி வெங்கட், சென்னை




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் : சீதா ரவி

ஆசிரியர் குழு : செ. ஏக்நாத் ராஜ், அனுராதா சேகர், ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்

தொலைபேசி : 22345622, 23, 24
தொலைநகல் : 044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

காங்கிரஸ் கட்சியின் தலைமைப் பொறுப்பில் இருந்து கொண்டு மன்மோகன் சிங் போன்ற ஒரு நடுநிலையாளரை சோனியா காந்தி, பிரதமராக முன்நிறுத்த வேண்டும்.

**- கல்கி நீண்ட காலமாகக் கூறி வரும் இந்தக் கருத்தையொட்டியே இயங்கியிருக்கிறார் சோனியா.**

**பிரதமரின் பிரதமர் ஆகியிருக்கிறார் மன்மோகன் சிங்! 1997ல் கல்கி சுதந்திரப் பொன்விழா மலருக்கு மன்மோகன் சிங் அளித்த பேட்டியிலிருந்து...**

**கல்கி** : *விவசாயத் துறையில், பசுமைப் புரட்சியைக் கண்டோம். பால்வளம் பெருக வெண்மைப் புரட்சி (White Revolution) யைக் கொண்டு வந்தோம். கல்வித் துறையைப் பொறுத்தவரையில் நாம், ஏன் அப்படி எந்த ஒரு பெரும் திட்டத்தையும் செயல்படுத்தவில்லை?*

**ம.மோ. சிங்** : கல்வித் துறையில் ஒரு தேசிய இயக்கம் அவசியம்.

**கல்கி** : *கல்வித் துறைக்கு, அரசு தேவையான அளவு நிதி ஒதுக்கீடு செய்யவில்லை என்பதை ஒரு காரணமாகச் சொல்லலாமா?*

**ம.மோ. சிங்**: நாம் போதுமான நிதி ஒதுக்கீடு செய்யவில்லை என்பதும் ஒரு காரணம்தான். எப்பொழுது நிதிப் பற்றாக் குறை ஏற்பட்டாலும், கல்வி, சுகாதாரம் போன்ற சமூகப் பணிகளுக்கான தொகைகள்



தாம் குறைக்கப்படுகின்றன. இந்த நிலையை நாம் மாற்ற வேண்டும். ஒரு நாட்டுடைய பொருளாதாரத்தின் மூலசக்தி, எஃகு அல்ல, மனிதவளம்தான் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். மக்களின் கல்வித் திறன் உயர்ந்தாலன்றி, நாடு முன்னேற வாய்ப்பில்லை.

**கல்கி** : இப்பொழுது நாம் காணும் தொழில் உற்பத்தியின் பெருக்கம், உயர் மட்டத்தில் உள்ளவர்கள், அதாவது பணக்காரர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதாக அல்லவா இருக்கிறது? வித விதமான ஒப்பனைப் பொருட்கள், பல்வேறு மாடல் கார்கள், எலக்ட்ரானிக் சாதனங்கள்...

**ம.மோ. சிங்** : இவை எல்லாம் இறுதியில், வேலை வாய்ப்புகளை அதிகரிக்க வழிவகுக்கும். நாம் இவற்றைத் தடை செய்தாலோ, அதிக வரி விதித்தாலோ, இப் பொருள்களின் கடத்தல் அதிகமாகும். போலிப் பொருள்களையும் மக்கள் உபயோகிப்பார்கள். எல்லாமே சரியான விகிதத்தில் இருக்க வேண்டும். வெறும் ஆடம்பரப் பொருள்களின் உற்பத்திக்கே நமது முதலீடுகள் செல்வதை அனுமதிக்க முடியாது. நமது விவசாயத் துறை அடிப்படைகளை (base) இன்னும் பலப்படுத்த வேண்டும்; மக்களுக்கு உணவுப் பாதுகாப்பு மிக முக்கியம். நமது வாழ்க்கைக்கு அத்தியாவசியமான துணிமணியின் உற்பத்திக்கும், அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும். அதே சமயத்தில், அழகு சாதனங்கள் மற்றும் ஆடம்பரமான நுகர்வோர் பொருள்களின் உற்பத்தியை நோக்கியும், ஓரளவிற்கு நமது முதலீடுகள் சென்றால், அதைப் பற்றி நாம் அதிகம் கவலைப்படக் கூடாது.

**கல்கி** : விவசாயத் துறையின் மேம்பாட்டுக்காகத் தாங்கள் என்னென்ன வழிகளைப் பரிந்துரை செய்கிறீர்கள்?



**ம.மோ. சிங்**: நாம் விவசாயத் துறையில் அதிகமாக முதலீடு செய்ய வேண்டும். நான் நிதி அமைச்சராக இருந்த பொழுது, Rural Development Infrastructure Fund ஒன்றை அமைத்தேன். விவசாயத் துறையில் நீர்ப்பாசன வசதி, ஆராய்ச்சி, பயிற்சி மற்றும் செயல் திறன் விரிவாக்கம் (Agricultural Extension) இவற்றுக்கு அதிகம் நிதி ஒதுக்கீடு செய்ய வேண்டும். விவசாயத் துறையில் புதிய அணுகுமுறை வேண்டும். டாக்டர் சுவாமிநாதன் கூறியது போல், சிறு விவசாயிகளின் உற்பத்தியைப் பெருக்கி, அவர்களுக்குத் தடங்கல் இல்லாத நிலையான வருமானத்தைத் தரும் விதத்தில், விவசாயத் துறையில், புதிய செயல்முறைகளை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**கல்கி** : நாட்டில் கணிசமான மக்கள் வறுமைக்கோட்டிற்குக் கீழ் வாழ்கிறார்கள். வறுமையை ஒழிப்பதற்காக நாடு அமல்படுத்திக் கொண்டிருக்கும் திட்டங்கள், அந்த மக்கள் வறுமைக் கோட்டைத் தாண்ட உதவவில்லையே?

**ம.மோ. சிங்** : சில திட்டங்கள் நல்ல விளைவுகளை உண்டாக்கியுள்ளன. சில உண்டாக்கவில்லை. நாம் இந்தப் பிரச்னையை இருதரப்பிலிருந்தும் அணுக வேண்டும். நாட்டின் பொருளாதார வளர்ச்சியை இன்னும் வேகப்படுத்த வேண்டுமானால், வேலை வாய்ப்புகளையும், தொழில் வளத்தையும், விவசாய வளத்தையும் பெருக்குகிற அதே நேரத்தில், அந்த வாய்ப்புகளைப் பயன்படுத்தி தாங்களும் வளரும் அளவுக்கு மக்களின் கல்வியறிவையும், உடல் ஆரோக்கியத்தையும், வளர்க்க வேண்டும். அப்போதுதான் கீழே உள்ளவர்கள் மேலே வர முடியும்.

அட்டை, படங்கள்: ஸ்ரீஹரி

# மனித வளமே மூல சக்தி!

**கல்கி வாசகர்களுக்கு சென்னை மைலாப்பூர் B.M. சில்க் சாரிஸின் பணிவான வணக்கங்கள்!**

**உண்மை, உழைப்பு, நேர்மை** ஆகிய இம் மூன்றுக்கும் ஈடு இணை ஏதும் இல்லை. ஏனென்றால் இம்மூன்றையும் கொள்கையாக கொண்டு யார் ஒருவர் வாழ்க்கையிலோ அல்லது வியாபாரத்திலோ பின்பற்றி வருவார்களேயானால் அவர்கள் முதலாவது இடத்தில் மிக உன்னதமான நிலையை அடைந்து அவரை சார்ந்து உள்ளவர்களால் போற்றப்படுபவர்.



ஏ. சந்திரசேகரன்

# தரமே தாரக மந்திரம்!

அதே போல் வியாபாரியாக இருந்தால் மேலே குறிப்பிட்டுள்ள மூன்று கொள்கைகளுடன் **தரம், நாணயம், நம்பிக்கை** ஆகிய மூன்றையும் தாரக மந்திரமாக பின்பற்றினால் இப்பொழுது உள்ள கவர்ச்சிகரமான ஆடம்பரமான தள்ளுபடி மற்றும் விளம்பரம் ஆகியன நிறைந்துள்ள இந்த நேரத்திலும் வாடிக்கையாளர்களை அவர்களிடம் இருந்து பிரிக்க முடியாது என்பது அனுபவ பூர்வமான உண்மை. இந்த கால மக்களின் பல்வேறுபட்ட ரசனைகளை புரிந்து கொண்டு அதற்கு ஏற்றாற்போல் நாங்கள் ரூ.4,000 முதல் 10,000 வரை உள்ள சேலைகளின் டிசைன்களை ரூ.300 முதல் 2,500 விலை உள்ள சேலைகளில் எங்களது ஒப்பந்த தறியின் மூலம் தயார் செய்து அனைத்து தரப்பினரும் பயன்பெறும் வகையில் விற்பனை செய்வது தனி சிறப்பு. மற்றும் ஒரு தனிப்பட்ட சிறப்பு என்னவென்றால் எங்களிடம் வாங்கும் எந்த விலை உள்ள சேலைகளுக்கும் ***Money Back Guarantee*** கொடுக்கிறோம்.

எங்களது நோக்கம் : Genuine Silk, Fair Price, Money Back Guarantee

Step in and feel the difference

முக்கிய குறிப்பு : எங்களிடம் சேலைகளின் தரத்தையும், நியாயமான விலையும் தவிர வேறு எந்த பரிசு பொருட்கள் கிடையாது என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்பொழுதுதான் நம் மக்கள் தள்ளுபடி என்ற மாயையிலிருந்து சற்று விலகி நியாயமான விலையில் தரமாக உள்ளதா என்று அலசி பார்த்து வாங்க ஆரம்பித்து உள்ளார்கள். அதற்கு தகுந்தாற்போல் அலசி பார்த்து வாங்க வரும் மக்களின் தன்மையை புரிந்து கொண்டு அதற்கு ஏற்றாற்போல் கடந்த 14 ஆண்டு காலமாக சென்னை மைலாப்பூர் நெ.5 வடக்கு மாடவீதியில் உள்ள **B.M. சில்க் சாரிஸ்** என்ற நிறுவனம் நிரந்தர வாடிக்கையாளர்களின் ஆதரவினால் நடைபெற்று வருகின்றது. அவர்களுக்கு விளம்பரம்,

கவர்ச்சிகரமான தள்ளுபடி போன்றவற்றில் நம்பிக்கை இல்லை, ஏனென்றால் ஒவ்வொரு நிரந்தர வாடிக்கையாளர்களும் தினந்தோறும் அவர்களது உறவினர்களையோ, நண்பர்களையோ, அவர்களுக்கு அறிமுகப் படுத்துகிறார்கள். அவர்கள் **B.M. சில்க் சாரீஸ்** சென்றவுடன் அங்கு உள்ள கணக்கிலடங்கா டிசைன்களையும், நியாயமான விலையையும், எல்லாவற்றுக்கும் மேலாக, அங்கு பணி புரியும் விற்பனையாளர்கள் கொடுக்கும் விளக்கங்கள், ஆகியவற்றால் அவர்கள் முழுத் திருப்தியுடன் நிரந்தர வாடிக்கையாளர்களாக ஆகிவிடுகிறார்கள் என்பதே உண்மை.

ஒருமுறை எங்களது ஷோரூமிற்கு வருகை தந்து சேலை எடுத்தவர்கள் அதை உபயோகித்து **மனத் திருப்தி** அடைந்தவுடன் உறவினர்கள், நண்பர்கள் என்று அனைவரையும் எங்களுக்கு சிபாரிசு செய்வது என்பது எங்களது ஷோரூமின் தனிச் சிறப்பு. இதனால் எங்களின் வாடிக்கையாளர்களே விளம்பரமாக இருப்பதால் எங்களுக்கு செலவுகள் குறைந்து விலை குறைவாக விற்பனை செய்ய முடிகிறது என்பதை மீண்டும் ஒருமுறை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

வாடிக்கையாளர்களின் பரிபூரண திருப்தியே எங்களது குறிக்கோள்.

இதற்கு சான்று : ஒரு சில வாடிக்கையாளர்கள் எழுதிய குறிப்பு :

Name R. Ramani
Address [illegible]
Chennai [illegible]

Comments Reasonable rate. Good quality. To be worn and tested. [illegible] good shop for purchase

Dt. [illegible]

***Very good collection and nice varieties at reasonable price.***

Mrs. Viji Shankar, 35A, Raaji Flats,
Canal Bank Road, Adyar,
Chennai - 600 020.

# B.M. Silk Sarees,

**5, North Mada Street, Mylapore, Chennai - 600 004.**
**(Government Approved Shop No.3148/95-3) Ph : (044) 24612799**

ADVT

"பொன்னியின் செல்வன் படிச்சிருக்கீங்களா?" என்று கேட்டேன் சோனியாவிடம்.

முகத்தில் கேள்விக் குறி தேக்கினார்.

"தமிழ் நாட்டில் ரொம்பப் பிரபலமான எழுத்தாளர் 'கல்கி'. எங்க பத்திரிகையை ஆரம்பிச்சு வெச்சு, தமது புனை பெயரையே அதற்குச் சூட்டியவர். அவர் எழுதின சரித்திர நாவல் பொன்னியின் செல்வன்..."

"ஐ ஸீ!"

"ஐந்தாம் பாகத்துக்குத் தலைப்பு: 'தியாக சிகரம்!'"

சோனியாவின் முகத்தில் கேள்விக் குறி மாறி, சிவப்பேறிப் புன் சிரிப்பு மலர்ந்தது.

"ஆங்கில மொழிபெயர்ப்பு கூட வந்திருக்குங்க, நீங்க படிச்சுப் பார்க்கலாம்..."

"சரி, அதைப் பற்றி இப்ப என்ன?"

"பக்கம் 729- புதிய வானதி பதிப்பு- மனப்பாடமா இருக்கு. சொல்றேன். கேட்டுக்குங்க!

"தந்தையே! விஜயாலய சோழர் முதல் நம் முன்னோர்கள் அணிந்து வந்த இந்த மணி மகுடத்தைத் தாங்கள் எனக்கு அளிக்க உவந்தீர்கள். சாமந்தர்கள், தளபதிகள், கோட்டத் தலைவர்கள், பொது மக்கள் அனைவரும் அதை அங்கீகரித்தார்கள். ஆகையால் இந்தக் கிரீடம் இப்போது என் உடைமை ஆகிவிட்டது. என் உடைமையை நான் என் இஷ்டம் போல் உபயோகிக்கும் உரிமையும் உண்டல்லவா? என்னை விட இந்தக் கிரீடத்தை அணியத் தகுந்தவர் ஒருவர் இங்கே இருக்கிறார். என்னை விட பிராயத்தில் மூத்தவர். இந்த சோழ ராஜ்யத்துக்கு என்னைவிட அதிக உரிமை அவருக்கு நிச்சயமாக இருந்த போதிலும், அதை அவர் கோரவில்லை. நான் முடி சூட்டிக் கொண்டு சிங்காதனத்தில் அமர்வதைப் பார்த்து மகிழச் சித்தமாக இங்கு வந்திருக்கிறார். அவரை விடச் சிறப்பான காரியம் எதுவும் நான் இதுவரை இந்த நாட்டுக்குச் செய்தேன் இல்லை. ஆகையால் இந்த மணி மகுடத்தை மதுராந்தகத் தேவர் தலையில் சூட்டுகிறேன்!"



• சோனியா



• ராகுல்

இவ்விதம் பொன்னியின் செல்வர் சொல்லிக் கொண்டே மதுராந்தகர் அருகிலே சென்று, அவர் சிரஸில் கிரீடத்தை வைத்தார்...

"இதுல மதுராந்தகத் தேவர் என்பதற்குப் பதில் மன்மோகன் சிங்குன்னு மாத்திக்குங்க; பொன்னியின் செல்வர் என்பதற்குப் பதில் சோனியா காந்தின்னு எழுதிக்குங்க..."

"போதும், போதும்! ரொம்பப் புகழாதே!"

"புகழ்ச்சிக்காக சொல்லலை மேடம், History repeats itself என்பதற்காக. உண்மையிலேயே உங்களை எப்ப புகழ்வேன், தெரியுமா?"

"எப்ப?"

"கொள்கைகளை வகுப்பதில் மட்டும் மன்மோகனுடன் ஒத்துழைத்து விட்டு, அப்புறம் நிர்வாகத்தில் தலையிடாமல் இருந்தீங்கன்னா, அப்ப!"

"I will do my best!"

## செய்திகள்

"பார்ப்போம்! Pressure வரும். நாலா பக்கத்திலிருந்தும் நிறைய வரும். எதிர்த்து நிற்கணும். நீங்க நல்வழி காட்டினா, எல்லா காங்கிரஸ்காரங்களும் ஆட்சியில் தலையிடாம கட்சி வேலையைக் கவனிப்பாங்க."

"யெஸ்... கரெக்ட்..." என்று சோனியா கூறும் போதே...

ராகுல் உள்ளே நுழைந்தார். "என்ன கரெக்ட்?"

"நீங்க மந்திரி பதவி வேணாம்னு சொன்னது கரெக்ட். அந்த முடிவை மாத்திக்காம திடமா இருங்க. கொஞ்சம் அனுபவம் வரட்டும். தொகுதி மக்களோடு அதிகம் பழகி, அவர்களுடைய உணர்வுகளை, தேவைகளைப் புரிஞ்சுக்குங்க. அவர்களுக்கு சேவை பண்ணுங்க. பதவி அடுத்த தேர்தலுக்குப் பிறகு பார்த்துக்கலாம்."

"ஓகே" என்றார் ராகுல்.

செல்லில் தயாநிதியுடன் தொடர்பு கொண்டேன். "உங்களுக்கு ராகுல் வழி காட்டுறாருங்க. அதைப் பின்பற்றுவதும் பற்றாததும்..."

"...கலைஞர் விருப்பம்" என்று முடித்தார் தயாநிதி.

"அவருக்கும் சேர்த்துத்

• தயாநிதி மாறன்





தும் வெற்றி!"

"அது எல்லாமே அந்த நாற்பத்தோரு

# திரிப்பது செம்பியன்

தான் இந்த அட்வைஸ்."

"ஃபோனை அவரிடம் தரவா?"

"வேணாங்க, நேரிலேயே வரேன். அதுக்கு அவசியம் இருக்கு" என்று கூறி ஃபினைட் பிடித்தேன்.

"பிறந்த நாள் வாழ்த்துக்கள்! எண்பது பூர்த்தியானா சதாபிஷேகம்னு சொல்வோம். ஆயிரம் பிறை கண்டவர்னு வாழ்த்துவோம்."

"நல்லா வாழ்த்துப்பா. இன்னமும் 'வாழ்த்த வயதில்லை'ன்னு பலபேர் சொல்லிக்கிட்டு இருக்கிறாங்க. அது தப்புன்னு எத்தனை எடுத்துச் சொல்லியும் பயனில்லை!" என்றார் கலைஞர்.

"கூட்டணியின் 41வது வெற்றின்னு நீங்க சொன்னதுல, கொஞ்சம் மாறுபாடு..."

"என்ன?"

"மக்களுடைய வெற்றி, ஜனநாயகத்தின் வெற்றி, வாக்குச் சீட்டின் மதிப்பை உணர்த்

வெற்றிகளுக்குள் அடக்கம்தானே? இவை இல்லாமல் ஒன்று முதல் நாற்பது வரை எதுவுமே இல்லையே!"

"உங்ககிட்ட வாதாடி ஜெயிக்க யாரால் முடியும்? - சோனியா தவிர!"

"ஓ! மந்திரி சபையில் சேர சம்மதித்ததைச் சொல்லுறியா?"

"நானும் இப்ப பிரதமரா இல்லே... அதனால தி.மு.க. அமைச்சரவையில் சேரணும்னு சோனியா கேட்டுக்கிட்டதா சொல்றீங்க... என்ன அர்த்தம்?"

"உன் அர்த்தம் என்னன்னு உன் உள்ளுணர்வு கூறினாலும், அதை வெளியே சொல்லாதே! கிளம்பு!" என்றார் கலைஞர்.

"சொல்லுக சொல்லில் பயனுடைய" குறளை முணுமுணுத்துக் கொண்டே திரும்பினேன். பயனிலாச் சொல் பேசினாலும், பகை வளர்க்கும் சொல் பேசலாமோ!

# ரிமோட்





• எஸ். ஜானகி

## அக்மார்க் சிரிப்பு!

ராஜ் டீ.வி.யில் ஜானகியின் பேட்டி. 'நீங்கள் மிகவும் கஷ்டப்பட்டுப் பாடிய பாடல்கள் எவை' என்ற கேள்விக்கு 'ஒரே ஒரு பாட்டுதான் அப்படி' என்று ஜானகி கூற, 'தொடரும்' போட்டு விட்டார்கள். அடுத்த நாள் பார்க்க முடியவில்லையென்றாலும், அது 'சிங்கார வேலனே, தேவா' என்பதை யூகிக்க முடிந்தது.

காலத்தின் கோலத்தால் வெள்ளைப் புடைவையும், வெறும் நெற்றியுமாகக் காட்சியளித்தாலும், ஜானகியின் அக்மார்க் சிரிப்பு மாறாதது ஆறுதல்.

ரமாடி கிராமத்தில் திருமணத்திற்காகச் சென்று கொண்டிருந்தவர்கள் மீது, அமெரிக்க விமானம் குண்டுகளைப் பொழிந்ததில் நாற்பதுக்கும் அதிகமானோர் இறந்த காட்சியை, பல்வேறு சேனல்களில் விவரமாகப் பார்த்தபோது மனம் கலவரப்பட்டது. ஏற்கெனவே சிறையில் ஈராக் ராணுவக் கைதிகள் மீது நடத்தப்பட்ட அத்துமீறல்கள் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் தாக்கமே மிக அதிகம். எனினும், யுத்தத்தோடு எந்தவிதத் தொடர்பும் இல்லாத அப்பாவிப் பொது மக்கள் மடிவது, மேலும் அதிக சோகம்.

"பிரதமராகும் ஆவலுடன் குடியரசுத் தலைவர் அப்துல்கலாமை சந்தித்து விட்டுத் திரும்பியபோது வாடிய முகத்துடன் காணப்பட்ட சோனியா, அதற்குப் பிறகே தனக்குப் பிரதமர் பதவியில் விருப்பம் இல்லை என்றார்" என்றது 'ஜெயா கருத்துகள்'. சாரி, ஜெயா செய்திகள். என்றாலும், இனி பிரதமர் கனவு நிறைவேறாது என்றதும், தமது எம்.பி. பதவியை ராஜினாமா செய்து விட்டு, உ.பி. முதல்வர் பதவியை கெட்டியாகப் பிடித்துக் கொண்டவர், மந்திரி சபையில் பங்கேற்க மாட்டோம் எனக் கூறிய அடுத்த நாளே மனதை மாற்றிக் கொண்டவர், ஆகியோருக்கு நடுவே முகம் நிறையச் சிரிப்புடன் சோனியா, மன்மோகன் சிங்கை பிரதமராகப் பரிந்துரைத்தது, தற்போதைய அரசியலுக்கு நிச்சயம் புதுமையான எடுத்துக்காட்டுதான்.

ஜோதிகா குறும்பாகச் சிரித்தால் கூட எரிச்சல் தோன்றுமா? அது படத்தைப் பொறுத்தது. சன் டீ.வி.யில் 'லிட்டில் ஜான்" ஆங்கிலத்தில் எடுக்கப்பட்ட படம். மனோஜ் சியாமளன், மீரா நாயர், சேகர் கபூர் போன்றவர்கள் எங்கெங்கோ போய்க் கொண்டிருக்க, இன்னமும் பாம்பு, குகை, மந்திரவாதி என்று விட்டலாச்சாரியா ஃபார்முலாப்படியே இந்தியாவைச் சித்திரிக்க முயற்சிக்கிறார்களே, என்பதால் எழுந்த பெரும் எரிச்சல் அது.

– ஆதர்ஷ்



# சாயா பண்ணும் மாயா!

**க**ண் விழித்து இரவு பூரா படிக்கணுமா பிளாஸ்கில் டீ, ரொம்ப களைப்பாக இருக்கிறதா, கடச்கட டீ, குளிருகிறதா? கதகதப்பிற்கு டீ, அரட்டைக் கச்சேரியா, கையில் டீ, விறுவிறுன்னு வேலை செய்ய டீ, ஆக டீ என்பது மலிவு விலையிலான உற்சாக பானம்!



• இன்ஃபின்டீ அழகு!





டீ, சாயா, தேநீர்... என்று பல பெயர் கொண்டிருந்தாலும் இது ஒரு ரோடுஸைட் பானம். பெங்களூரில் 'பை-டு' கல்சர். ஒரு டீ வாங்கி அதை இரண்டு, நான்காக கூட ஷேர் பண்ணிக் கொள்வார்கள்.

பார்த்தார், பெங்களூரில் இருக்கும் இருபத்தி நான்கே வயதான மெல்பர்னில் கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் படித்த கௌரவ் ஸாரியா, பொங்கி எழுந்து விட்டார். தேநீருக்கு உரிய மரியாதை, கௌரவம் கிடைக்கவில்லை. இதையும் விலைமதிப்புள்ளதாக ஆக்க வேண்டும், ஸ்டேட்டஸ் தர வேண்டுமென்று... சூடாக ஆரம்பித்து விட்டார் 'இன்ஃபின்டீ' (INFINTEA).

இந்தியாவிலேயே தேநீருக்கெனவே பிரத்யேகமாக இயங்கும் டீ-பார்தான் இன்ஃபின்டீ.

"தேநீரை சுவைத்துக் குடிப்பது ஒரு சுகானுபவம். எங்களிடம் தொண்ணூறு வகையான தேநீர்கள் கிடைக்கும். அவரவர் டேஸ்ட், சாய்ஸ்படி குடிக்கலாம். சிலர் நல்ல நிறம் எதிர்பார்ப்பார்கள், சிலருக்கு அபாரமான மணம் வேண்டும். மிக உசத்தியான வகை என்றால் டார்ஜிலிங் மற்றும் அஸ்ஸாம் தேயிலைகளைச் சொல்லலாம். நாங்கள் இங்கு டீ ஸர்வ் பண்ணுவதே ஒரு கலை நயத்துடன்தான்... பலவிதமான க்ராக்கரிகள் உண்டு. தேநீருக்குத் தகுந்தாற்போல் கப்-ஸாஸர், டீ - பாட்டுகளும் மாறும்" சொல்கிறார் கௌரவ்.

இன்ஃபின்டீயில் ஒரு கோப்பைத் தேநீரின் விலை சுமார் முப்பத்தொன்பது ரூபாயிலிருந்து, எழுபத்தொன்பது ரூபாய் வரை!

"டீ உடலுக்குக் கெடுதல் செய்வது இடையாது. கொலஸ்ட்ரால், டயபடிஸ் உள்ளவர்களும் அருந்தலாம். செரிமான சக்தி அதிகரிக்கும். இதய நோயாளிகள் ஆர்டரியில் அடைப்பு உள்ளவர்கள் கூட, தைரியமாக டீ குடிக்கலாம். இங்கு வருபவர்களுக்கு டீ போடுவது எப்படி என்றும் சொல்லித் தருகிறோம். தேவைக்கேற்றாற்போல் அவரவர் விருப்பப்படி தேயிலையும் வாங்கிச் செல்லலாம்..." என்கிறார் கௌரவ்.

சுமார் நூறு வருடங்களாக தேயிலை எஸ்டேட் வைத்து நடத்தி வரும் குடும்பத்திலிருந்து வந்த கௌரவ், கணினியின் முன் உட்கார விரும்பவில்லை. 'சூடான' பிஸினஸ் செய்வதையே விரும்புகிறார்.

எல்லாம் அந்த சாயா பண்ணும் மாயா...!

**- லதா சேகர்**

படம் : ஸ்ரீஹரி

ரிவர்ஸ்லே போய்ப் பார்க்கலாம்...

மக்கள் விரோத நடவடிக்கைகள்

தேர்தல் முடிவுகள்

## சோனியாவின் சரியான முடிவு!

**கா**ங்கிரஸ் எம்.பி.க்களும் செயற்குழு உறுப்பினர்களும் நடத்திய போராட்டம், ரசனைக்குறைவான நாடகமாக முடிந்திருக்கிறது. பிரதமர், பதவியை ஏற்பதில்லை என்ற சோனியா காந்தியின் முடிவை ஏற்க மறுத்து அவர்கள் மேற்கொண்ட பிடிவாதம், கட்சியின் இமேஜை பாதித்துள்ளதுடன், நாட்டின் நிலைமையையும் விமர்சனத்துக்கு உள்ளாக்கியிருக்கிறது.

சோனியா காந்தியின் உறுதி தளராததை ஏற்கும் அதே வேளையில், மன்மோகன் சிங்கின் உணர்வுகளையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். 'சோனியாவே தலைவி' என்று சூளுரைத்த காங்கிரஸ் செயற்குழுவும், எம்.பி.க்களும், மன்மோகன் சிங்கை தர்மசங்கடத்தில் ஆழ்த்தியது அநீதி. அதே நேரத்தில், தாங்கள் மதித்துப் போற்றும் தலைவியையும் அவர்கள் துன்பத்துக்குள்ளாக்கினர். சோனியாவை அன்னையென மதிப்பதாகக் கூறுபவர்கள், அவருடைய உள்ளுணர்வுகளை மதித்து, கண்ணியமாக நடந்து கொண்டிருக்க வேண்டும். இத்தகைய குழப்பங்களைத் தவிர்ப்பதற்காகத்தான் தேர்தலுக்கு முன்பாகவே சோனியா வேறொருவரைப் பிரதமராக முன் நிறுத்த வேண்டும் என்று சொல்லிவந்தோம். ஆனால், அவ்வாறு செய்திருந்தால், காங்கிரஸுக்கு இவ்வளவு பெரிய வெற்றி கிட்டாமல் போயிருக்கக் கூடும். பாமர மக்களை சோனியா கவர்ந்த அளவுக்கு, மன் மோகன் சிங் கவர்ந்திருக்க மாட்டார். எனவே, சோனியாவின் இந்த நடவடிக்கை, அரசியல் ரீதியாக சாமர்த்தியமானது என்றே கொள்ளலாம். இதைப் புரிந்து கொள்ளாமல், புதிதாகத்




**கல்கி**



**2004** மே **30**
தாரண வைகாசி 17
மலர் : **62**
இதழ் : **44**




தேர்ந்தெடுக்கப்பட்ட காங்கிரஸ் எம்.பி.க்களும், செயற்குழு உறுப்பினர்களும், சோனியாவைப் பிரதமர் பதவி ஏற்குமாறு நிர்பந்தித்து வதைத்தது, அர்த்தமற்றது. தமக்குப் பிரதமர் பதவியில் நாட்டமில்லை என்பதையும், பதவிக்காகத் தாம் தேர்தல் களத்தில் இறங்கவில்லை என்பதையும் சோனியா தொடக்கத்திலிருந்தே கூறி வந்திருக்கிறார்.

இந்திய மக்களும், என்னதான் வோட்டுப் போட்டு சோனியாவை ஜெயிக்க வைத்துவிட்டாலும், உணர்வு ரீதியாக இத்தாலியப் பிரதமரை ஏற்க இயலாமல் தவித்துக் கொண்டுதானிருந்தனர். ஆகவே, மக்களைப் பொறுத்தவரை, சோனியாவின் முடிவுக்கு எதிர்ப்போ, ஆட்சேபணையோ பெரிதாக இல்லை. கட்சி மட்டத்திலான ஆட்சேபணையும் விரைவில் அடங்கிப் போய், மன்மோகன் சிங் தலைமையில் புதிய அமைச்சரவை இந்தியாவுக்குப் புதிய பெருமைகள் சேர்க்க வாழ்த்துவோம்.

பெரிய அளவில் அரசியல் ஆளுமை அற்ற ஒரு பொருளாதார - நிர்வாக நிபுணரைப் பிரதமராக முன்னிறுத்தியது, சோனியாவின் துணிச்சலான முதல் முடிவு. உள்நாட்டவருக்கு மட்டுமின்றி, என்.ஆர்.ஐக்களுக்கும் இம் முடிவு மகிழ்ச்சியைத் தரும். இந்தியப் பொருளாதார முன்னேற்றம் குறித்து நம்பிக்கை பிறக்கும்.

தி.மு.க. தலைவரை அமைச்சரவையில் சேரும்படி கேட்டுக் கொண்டு, அவரது சம்மதத்தையும் பெற்றது சோனியாவின் மற்றுமொரு சிறந்த நடவடிக்கை.

பிரதமர் பொறுப்பை சோனியா மறுத்ததற்குப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன : பாதுகாப்பின்மை, குடும்பத்தினர் வலியுறுத்தல், பா.ஜ.க. மற்றும் பரிவார் அமைப்பினரின் ரசக்குறைவான எதிர்ப்பு... இவற்றுள் எதையும் காரணமாக்காமல், தமது உள் மனத்தின் குரல்படி நடப்பதாக சோனியா பெருந்தன்மையுடன் தெரிவித்துள்ளார். அந்தக் குரலை மதிப்பதும், புதிய பிரதமரை ஏற்பதும், ஒத்துழைப்பதும்தான், இன்று நமது முதல் பணி ஆகிறது. மக்கள், அரசுத் துறை, காங்கிரஸ் கட்சி, அதன் கூட்டணிக் கட்சிகள், எதிர்க் கட்சிகள் என அனைத்துத் தரப்பினரும் தங்கள் கடமையைச் சரியானபடி செய்ய வேண்டும்.

**அவசர முடிவு : அதிரடி வாபஸ்!**

முகத்தில் அறைவது போன்ற தேர்தல் முடிவுகள் வெளியான கையோடு, தமிழக முதல்வர் அதிரடியான முறையில் தமது மக்கள் விரோத நடவடிக்கைகளை ரத்து செய்திருப்பது ஒன்றும்




ஆச்சரியமில்லை. சற்றும் முன்யோசனையின்றி காரியங்கள் செய்வதும், பின்னர் அவற்றை ரத்து செய்வதும் ஜெயலலிதா ஆட்சிக்குப் புதிதல்ல.

மாணவர்களுக்கு இனி இலவச பஸ் பாஸ் உண்டு, ரேஷன் கார்டில் 'ஹெச்' முத்திரை என்றொரு பிரிவு இனி கிடையாது. அரசு ஊழியர்கள் மீதான நடவடிக்கைகள் ரத்து, பத்திரிகைகள் பேரிலான அவதூறு வழக்குகள் ரத்து... இவையெல்லாம் மகிழ்ச்சி தரும் விஷயங்கள் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால், இவ்வாறு துக்ளக் தர்பார் நடத்துவதால், நிர்வாக இயந்திரமும், மக்களும் எத்தனை இன்னல்களுக்கு ஆளாவார்கள் என்பதைச் சிந்திக்க வேண்டும்.

அவதூறு வழக்குகளுக்காக கோர்ட்டில் ஆஜராவதில் செலவிடப்பட்ட நேரமும், பணமும் திரும்பி வருமா...? அவதூறே இழைக்காதவர்கள் நீதிமன்றத்துக்கு இழுக்கப்பட்டதன் மூலம் இழைக்கப்பட்ட அநீதிக்கு எவ்வாறு ஈடு செய்யப் போகிறார்கள்? மணியார்டர் மூலம் விவசாயிகளுக்கு மின் கட்டணம் அனுப்ப எடுக்கப்பட்ட அபத்த முயற்சிகளில், தொலைந்த நேரமும் பொருளும் எவ்வாறு ஈடு செய்யப்படும்? 'ஹெச்' முத்திரையினால் பல லட்சம் குடும்பங்கள் கண்ட இழப்பு, இழப்பு தானே!

மக்களின் வாழ்க்கை முறை, மாதாந்திர பட்ஜெட், அரசு இயந்திரத்தின் பணி என்று யாவற்றையும் போட்டுப் பந்தாடுவதோடு, மக்களின் உணர்வுகளையும் பந்தாடுகிறது தமிழக அரசு. கோயில்களில் பலியைத் தடை செய்யும் சட்டம்; பின்னர் அது ரத்து. மதமாற்றத் தடைச் சட்டம்; பின்னர் அதுவும் ரத்து, என்று சிறுபிள்ளைத்தனமாக இயங்குகிறது.

எல்லாவற்றையும் விடப் பெரிய கொடுமை, இந்த ரத்து நடவடிக்கைகள் யாவும் மக்கள் நலப் பணிகள் போல் பெரிதுபடுத்தப்படுவதுதான்; அவையெல்லாம் முதல்வருடைய பெருந்தன்மையால் நிகழ்ந்ததாகச் சித்திரிக்கப்படுவதுதான்! தவறு இழைத்துவிட்டதாக ஒப்புக் கொண்டு ரத்து செய்வது வேறு; இவ்வாறு திரித்துக் கூறி தவறுகளை மறைப்பது வேறு.

எஞ்சியுள்ள இரண்டாண்டு ஆட்சிக் காலத்தில் இதுபோன்ற ஏமாற்று வித்தைகளைத் தவிர்த்து, 'எடுத்தேன் கவிழ்த்தேன்' நிர்வாகத்தைக் கைவிட்டு, முதல்வர் நிதானமாய்ச் சிந்தித்து, தமிழகத்தின் சீரான வளர்ச்சிக்கும் மக்களின் மகிழ்ச்சிக்கும் வழிவகுக்கட்டும்.



"நான் மிஸ் கொச்சின் என்று தெரிந்தும் இப்படிக் கேள்வி கேட்டால் என்ன அர்த்தம்?" என்று அழகாய் கோபப்பட்ட ப்ரணதி, இப்போது ஆர்.சுந்தர்ராஜன் இயக்கி வரும் 'உயிரெழுத்து' படத்தில் பிஸியாக நடித்துக் கொண்டிருக்கிறார். "நான் மலையாளத்தில் நடித்த 'ஃபார் தி பிப்பிள்' படம், வெறும் எழுபது லட்ச ரூபாய் செலவில் தயாரிக்கப்பட்டது. நான்கு கோடி வசூலை அள்ளியது.



எனக்கு மலையாளத்தில் வசூல் நாயகி என்ற பெயரே உண்டு" என்று பெருமை பேசியவரை உசுப்பி விட நினைத்து, தயாரிப்பாளரிடம், "வசூல் நாயகி தானா?" என்றோம். அடுத்த கணம் கம்பீரம் படத்தில் அவர்

# "தொலைச்சுப் போடுவேன், தொலைச்சு...!"

'கம்பீரம்' பட நாயகி ப்ரணதியிடம் தென்னிந்தியச் சாயல் தெரிகிறதே என்ற நம்பிக்கையில், "மீ ஊரு எதி?" என்று தெலுங்கில் கேட்டோம். மௌனம் காத்தார். "நிம்ம ஊரு யாவுது?" என்று கன்னடத்தில் கேட்டதற்கும் மௌனம். கடைசி சாய்ஸாக "எதாணு நிங்கள்ட நாடு" என்று மலையாளத்தில் கேட்டதும் "கொச்சின்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.



பேசும் "தொலைச்சுப் போடுவேன், தொலைச்சு..." வசனத்துடன் நம்மைப் பார்த்து விரலை நீட்ட, விட்டோம் ஜூட்!

- ஜெய்

படங்கள்: சங்கர் சத்தியமூர்த்தி



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப்படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

முதிய பருவத்தில் மறதி நோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

Charitable Trust (Reg)

# 50 / 88, Panchali Amman Kovil Street, Arumbakkam, Chennai - 600 106.
(Near Panchali Amman Temple) Tel. Off: 044 - 2475 5700, 2475 6700, 2475 7777, 2475 5799
e-mail:svhome@vsnl.net

# சிறுநீரகக் கோளாறுக்கு

## மூலிகைச்சாறு கிசிச்சை

**பக்க விளைவே இல்லாத பரம்பரை வைத்தியம் !**

**பயனடைந்தோர் பலர் !**

**கா**ரைக்குடி, பிப்ரவரி 1-

சிறுநீரகக்கல் மற்றும் சதை அடைப்புக்கு பரம்பரை பரம்பரையாக மூலிகை வைத்தியம் செய்து வரும் டாக்டர் அந்தோணி காணிக்கை ராஜ் குடும்பத்தினர் இயற்கை வைத்தியத்தை சேவையாக செய்து வருகின்றனர்.

### சிறுநீரகக்கல்

சிறுநீரகக்கல் அடைப்பு ஏற்பட்டு வலியால் துடியாய் துடிக்கும் நபர்களுக்கு மூலிகைச் சாறு கொடுத்து 35வது நிமிடத்தில் வலியை அறவே நின்று விடச் செய்கின்றனர். 3 நாட்கள் தொடர்ந்து காலையில் மூலிகைச் சாறு கொடுத்து வந்தால் உடனடியாக சிறுநீர் வழியாக கல் வெளியே வந்து விழும் சக்தி அந்த மூலிகைச் சாறுக்கு உள்ளது.

### சிறுநீரக பாதுகாப்பு

நமது சித்த மூலிகை மருத்துவம் எந்தவித பக்க விளைவையும் ஏற்படுத்தாது. அதே நேரத்தில் சிறுநீரக கோளாறுகளை பாதுகாப்புடன் அவைகளில் ஏற்படும் கோளாறுகளை முற்றிலும் குணமாக்கும் சக்தியைக் கொண்டது. இது போன்ற மூலிகைகளை உலகமே ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறது.

### பித்தப்பை கல்

அறுவைச் சிகிச்சை இல்லாமல் பித்தப்பைக் கல்லை கரைத்து வெளியேற்றும் சக்தி கொண்ட அற்புத மூலிகைச் சாறு சிகிச்சை நடைபெறுகிறது.

### மையம்

குளோபல் ஹெல்த் கேர் டிரஸ்டின் மூலம் தொடங்கப்பட்டுள்ள இந்த குளோபல் கிட்னி ஸ்டோன் சென்டர் மற்றும் ஆராய்ச்சி மையம் காரைக்குடி கம்பன் மணி மண்டபம் அருகே எண்.16/14, தமிழ்த்தாய் கோவில் சாலையில் சிறப்பாக செயல்பட்டு வருகிறது.

Ph: (04565) 232519, 224364
Cell: 98424 - 14959

### குளோபல் கிட்னி ஸ்டோன் சென்டர்,

Dr. K. ஜெயலெட்சுமி B.S.M.S, M.D
19 - நவநீதம்மாள் தெரு,
ஷோபா கல்யாண மண்டபம் அருகில், சாலிக்கிராமம்,
சென்னை - 600 093
**Ph: (044) - 23763461**
**Cell: 98424 - 14959**

**ஞாயிற்றுக்கிழமைகளில் இலவச ஆலோசனை உண்டு.**



# கச்சட்டி எக்ஸ்பிரஸ்!

*பொதுமக்களின் உணவுப் பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைப்பது பற்றி, நம் தலைவர்கள் கலந்துரையாடினால் எப்படி இருக்குமென கற்பனை செய்து பார்த்தோம்.*

**வாஜ்பாய் :** செவிக்கு உணவு இல்லாத போது சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும்னு சொல்லியிருக்காங்க. பொது மக்களின் காதுக்கு விருந்து படைத்த நாம், வயித்துக்கும் ஏதாவது செய்தாக வேண்டும்! உருப்படியான யோசனை ஏதாவது சொல்லுங்க.

**சோனியா :** ஆறு வருஷமா ஆட்சியில இருந்துட்டு, உருப்படியா ஒண்ணுமே செய்யலை! பொது மக்கள் வயிறு எரியறாங்க.

**பிரமோத் மகாஜன் :** அடடே, முன்னமே சொல்லாமல் போயிட்டீங்களே? 'வயிறு ஒளிர்கிறது'ன்னு பிரமாதமா விளம்பரப்படுத்தி கலக்கியிருப்போம்ல.

**சோம்நாத் சாட்டர்ஜி :** தத்துப் பித்துன்னு எதையாவது பேசி வைக்காதீங்க! பீ சீரியஸ்.

**ஜெயலலிதா :** நீங்க இப்படி தத்துவப் பச்சோந்திகளாக திரிஞ்சுட்டு இருக்கிங்களே! இது மட்டும் நல்லாயிருக்கா?

**மன்மோகன் சிங் :** ஓ, நோ! நோ பாலிடிக்ஸ். கூல் டௌன், மேடம். நாம இப்ப பொது மக்களின் வயித்துக்கு என்ன செய்யறதுன்னு கலந்துரையாடிக்கிட்டிருக்கோம்.

**சோம்நாத் சாட்டர்ஜி :** பட்டினிச் சாவை முறியடிக்கறதுக்கு ஒரே வழி, அரசு தானியக்கிடங்குகளில் புழுத்து வேஸ்டா விட்டு இருக்கற தானியங்களை ஏழை, எளிய மக்களுக்கு எடுத்து விநியோகிப்பதுதான்.

**ஓ. பன்னீர் :** பட்டினிச் சாவா? எங்கள் ஆட்சியிலா? கிடையவே கிடையாது.

**சோம்நாத் சாட்டர்ஜி :** நீங்க உணவு சம்பந்தமா உருப்படியா ஏதாவது யோசனையை மட்டும் சொல்லுங்க.

**பிரமோத் மகாஜன் :** இந்த முறை குடியரசு தின விழாவின் போது, பிரதமர் வீட்டு சமையல்காரருக்கு பத்ம ஸ்ரீ விருது கொடுத்து கௌரவிக்கலாமே. இதுதான் என் யோசனை.

**கருணாநிதி :** ஹூம். 'ராமருக்கு கோயில்'னு சொல்லி வோட்டு வாங்கினீங்களேன்னு பார்த்தால், நீங்களே இப்படி சாப்பாட்டு 'ராமர்'களாக இருக்கிறீர்களே.

**இளங்கோவன் :** அடாடா. எத்தனை இலக்கியத் தரமாக நையாண்டி செய்கிறார் பார்த்தீர்களா, நம்ம கலைஞர்.

**சுஷ்மா ஸ்வராஜ் :** ஆமாங்க. உணவுப் பிரச்னையைத் தீர்க்க, ஐடியா தரச் சொன்னால், பாலிடிக்ஸ் பேசி 'உனக்கும் பெப்பே, உங்கப்பனுக்கும் பெப்பே'ன்னு பேசிட்டிருந்தா எப்படி?

**பிரமோத் மகாஜன் :** ஹை! 'பெப்பே'ன்னு சொன்னவுடனேதான் ஞாபகம் வந்துடுச்சு.



**சோனியா :** என்னது? உணவுப் பிரச்னையைத் தீர்க்க புது ஐடியாவா?

**பிரமோத் மகாஜன் :** ஊஹூம். இங்க ஏதோ ஒரு ஹோட்டலில் 'பூஃப்பே'யாம். இஷ்டத்துக்கும் வெட்டலாமாம். அப்ப நான் வரட்டுமா? (உனக்கும் பூஃப்பே, உங்கப்பனுக்கும் பூஃப்பே' என உற்சாகமாகப் பாடியபடி வெளியேறுகிறார்)

(அனைவரும்) : ஹேய், பிரமோத் வெயிட். வெயிட். நாங்களும் வர்றோம். பசி வந்துட்டா பத்தும் பறந்துடும்னு சும்மாவா சொன்னாங்க!

- பாஸு



# எம்.டி.ஆர். ஆம்பளைங்க ஆயுதம்!

பெங்களூரில் விதான் சௌதா, லால்பாகிற்கு அடுத்த படியாக மக்களை அதிகமாக ஈர்த்திருப்பது, எம்.டி.ஆர். ரெடி இன்ஸ்டன்ட் உணவு வகைகளினால் நம் நாட்டில் மட்டுமல்லாது, ஐரோப்பா, பிரான்ஸ் மற்றும் அமெரிக்காவில் கூட எம்.டி.ஆரின் பரம பக்தர்கள் லட்சக்கணக்கில்!

எம்.டி.ஆர். ரெடிமேட் உணவு வகைகள் எங்கே, எப்படித் தயாராகிறது என்பது போன்ற கேள்விப் பசி நம்மை வாட்டி எடுக்க, படையெடுத்தோம்...

பெங்களூர் புறநகர்ப் பகுதியில் எலக்ட்ரானிக் சிட்டியையும் தாண்டி பொம்மஸாந்த்ராவில், சுமார் பத்து ஏக்கர் அளவில்



விரிந்து இருப்பது எம்.டி.ஆர் ஃபுட்ஸ் லிமிடெட்.

இன்முகத்துடன் வரவேற்றுப் பேசுகிறார், மானேஜிங் டைரக்டர் சதானந்தமையா.

"மாவல்லி டிஃபன்ரூம் என்ற எம்.டி.ஆர்., என் அப்பா யக்ஞநாராயணமையாவினால் 1924ல் ஆரம்பிக்கப்பட்டது. சவுத் கனராவின் பாரம்பள்ளி கிராமம் தான் எங்கள் சொந்த ஊர். பொதுவாகவே உடுப்பி, சவுத் கனரா, சைவ உணவிற்குப் பெயர் பெற்றது. 1951ம் வருடம் என் அப்பா ஐரோப்பா டூர் போனார். அங்கிருக்கும் பனிச் ஹோட்டல்கள், அங்கு கடைப்பிடிக்கப்படும் தூய்மை இதெல்லாம் அவரைப் பெரிதும் கவர... இங்கு வந்த உடனேயே அதைக் கடைப்பிடிக்க ஆரம்பித்தார். இந்தியாவிலேயே எங்கள் எம்.டி.ஆரில் தான் முதன் முதலாக ஸ்டெரிலைஸ் செய்யப்பட்ட (வெந்நீரில் கழுவுதல்) பினேட்டு தம்ளர்களை உபயோகித்தோம். அன்றிலிருந்து எங்கள் தாரக மந்திரமே 'சுத்தம், சுகாதாரம்' என்றானது... கஸ்டமர்களிடமும் பயங்கர வரவேற்பு. 68ல் என் அப்பா இறந்து போனார்." கடந்த கால நினைவுகளில் மூழ்குகிறார் சதானந்தா.

எலக்டிரிகல் என்ஜினீயரான சதானந்தா, ஐந்தே ஐந்து நாட்கள் மட்டும் வேறிடத்தில் வேலை பார்த்து மனம் ஒப்பாமல், தந்தையின் பிஸினஸைக் கவனித்துக் கொள்ள ஹோட்டலுக்கு வந்து விட்டார்.

"எல்லா வேலைகளையும் கற்றுக் கொண்டேன். முகம் சுளிக்கவில்லை. தோசை வட்டமாகச் சுடுவதற்குத் தான் மிக அதிகமாக சிரமப்பட்டேன்... இங்கு ஒரு விஷயம் சொல்லியே ஆகணும். சீனியர் சரக்கு மாஸ்டர், ஹெட் குக் போன்றோர்கள் எல்லாவற்றையுமே நமக்குக் கற்றுத் தர மாட்டார்கள். மிக முக்கியமான சமையல் உத்திகளை வெளியே விட மாட்டார்கள். நானும் விடாமல் சமையல், ஸ்வீட், மளிகை தரம் பார்த்து வாங்குதல், அக்கவுண்ட்ஸ்... என சகலத்தையும் கற்றுத் தேர்ந்த பிறகே, கல்லாவில் உட்கார்ந்தேன். 'ராஜா மாதிரி அனுபவிக்கணும்னா, முதலில் இடுப்பொடிய உழைக்கணும்'னு என் அப்பா சொல்லுவார். நாளைக்கே என் மகன் என்



பின்னலை கவனிக்க வேண்டுமென்றாலும் கூட, முதலில் அவன் சமைக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்" என்கிறார் சதாநந்தா.

இரண்டாம் உலகப் போரின் சமயம் நம் நாட்டில் அரிசி பற்றாக் குறை. அப்போது 'ரவே இட்லி'யைக் கண்டுபிடித்தது சதா நந்தாவின் தந்தைதானாம்.

"94ல் நான் இத்தாலியில் 'படவர்' என்ற ஊருக்குப் போயிருந்தேன். 10 நாளைக்கு சாலட்ஸில் இருந்தேன். 10 கிலோ வெயிட் இறங்கி விட்டது. நான் சைவம். அங்கு கிடைக்கும் எதையும் சாப்பிட முடிய வில்லை. அப்போதே தீர்மானித்தேன். தனி யாக இருந்து சாப்பாட்டுக்கு அல்லல் படு பவர்களுக்கு, டக்கென்று உடனே எடுத்துச் சாப்பிடுவது போல் ஏதேனும் செய்ய வேண்டுமென்று... எனக்கே ஏகப்பட்ட ரெஸிபிகள் தெரியும். ஒவ்வொன்றும் தீவிர பரிசோதனை, ஆராய்ச்சிக்கு உட்படுத்தப் பட்ட பிறகே மார்க்கெட்டுக்கு வரும். தூய்மை ஒரு கண் என்றால், குவாலிடி மறு கண். ஜனங்களுடைய ஆதரவும் இருந்ததால் எங்களால் இந்த இடத்தைப் பிடிக்க முடிந்தது" என்கிறார்.



* சதாநந்தமையா

கடந்த வருடம் எம்.டி.ஆரின் பிசினஸ் டர்ன் ஓவர் நூற்றி இருபத்திரண்டு கோடி. இந்த வருடம் நூற்றியறுபது கோடியாம்.

நேரடியாக ஒவ்வொரு ப்ளான்டுகளாக விஸிட் அடித்தோம். தலைக்கு ப்ளாஸ்டிக் குல்லா. காலுக்கும் ப்ளாஸ்டிக் கவசம். நம்முடன் கோகர்ணாவிலிருந்து தேன் சப்ளை செய்து வரும் அன்பர்களும் கலந்து கொண்டனர். சுமார் இரண்டு மணி நேரம் பயணம்.

முதலில் நாம் போனது 'ரெடி டு ஈட்' டிவிஷனுக்குள். அதாவது பாக்கெட்டை வெந்நீரில் ஒரு ஐந்து நிமிடம் முக்கி வைத்து, கத்தரித்து பிளேட்டில் கொட்டி, பிறகு டைரக்டாக வயிற்றினுள் இறக்க வேண்டி



யதுதான். ஆனால் நம்முடைய ஐந்து நிமிட வேலைக்கு, இங்கு சுமார் எழுபத்தைந்து ஊழியர் கள். சுமார் ஐம்பதாயிரம் பாக் கெட்டுகள் தினமும் தயாரா கின்றனவாம்!

அடுத்தபடியாக ஸ்பைஸ் டிவிஷன். வாசனை மூக்கைத் துளைக்கிறது. ஆஃப்கானிஸ்தானி லிருந்து வரவழைக்கப்பட்ட பெருங்காயத்தைக் காண்பிக் கிறார். (வாசனை ஆறு மாதத் திற்கு மூக்கிலேயே இருக்கும்.) கூடவே வரு கிறார் ஹெப்பார். இவர் எம்.டி.ஆரின் சீனியர் சிப்பந்தி...

ஒரு நிமிடத்திற்கு அறுபது பாக்கெட்டு



கள் சீல் போடப்பட்டு தயாராகின்றன. மஞ்சள், மிளகாய், தனியா, மிளகு, ரசப்பொடி, சாம்பார் பொடி... என மாஜிக் போல் தயாராகின்றன, கண் சிமிட்டுவதற்குள்.

வாசனையில் நாம் ஒரு மாதிரி மந்திரித்தாற் போல் ஆக, ஹெப்பார் நம்மை frozen food plant-ற்குள் அழைத்துப் போனார். முதலில் பார்த்தது ஐஸ் கிரீம். சுமார் இருபதாயிரம் லிட்டர் ஐஸ் கிரீம் தயாராகிறதாம். பிறகு வேறு ஓரிடத்தில் சூடாக பொன்னிற வடைகள், சமோசாக்கள் தயாராகி கொண்டிருந்தன. ஒரு பெரிய..........ய கடாயில் நூற்றுக்கணக்கான வடைகள். எல்லாம் ஷேப், சைஸ், கலர் ஒன்று போல..... மசாலா தோசைகள், சட்னி தடவி... அது ஒரு பக்கம். ஒரு நாளைக்கு இருபதாயிரம் தோசைகளாம். (நாட்டிலே தின்பதைத் தவிர வேறு வேலையே இல்லையா?) இவை எல்லாமே கூல் செய்யப்பட்டு, டீப் ஃப்ரீஸ் செய்யப்படுகின்றன. மைக்ரோவேவ் ஓவனில், அல்லது தவாவில் ஒரு டு மினிட்ஸ் சூட வைத்தால் போதும். அவ்வளவே! நாம் நம் லெட்டர் பேடை ஒரு பத்து நிமிடம் ஒதுக்கி விட்டு, டேஸ்ட் பார்க்கலாமா என்று துறுதுறுத்ததை ஹெப்பார் கரெக்டாகக் கண்டுபிடித்து, நம்மை சேமியா பிளான்டிற்குள் அழைத்துச் சென்றார்.

அசுர சைஸில் இயந்திரம். இங்கு எல்லாமே ஆட்டோமேட்டிக். ஒரு நாளைக்கு முப்பத்தைந்து டன் சேமியா தயாராகி பாயஸமாகவும், உப்புமாவாகவும் நம் கிச்சனில் லோல்பட வருகிறது. குங்குமப்பூ காஷ்மீரிலிருந்து வரவழைக்கப்படுகிறது. விலை அதிகமல்ல, கிலோ ஒன்லி நாற்பத்தைந்தாயிரம் ரூபாய் தான்! காஷ்மீரின் சீதோஷ்ண நிலையிலேயே இங்கும் தனியான ஸ்பெஷல் குளிர்சாதனப் பெட்டியில் வைக்கப்பட்டிருக்கிறது.

**க**டைசியாக நாம் வந்தது ஊறுகாய் பகுதி. அடடா, என்ன மணம், என்ன ருசி! பெரிய பெரிய ராட்சத பிளாஸ்டிக் டிரம்களில் மாங்காய், எலுமிச்சை, ஆவக்காய், தக்காளி என கண்ணைக் கவரும் செக்கச் செவேர் நிறத்தில், (பெடிகே மிளகாய்) எண்ணெய் மிதக்கும் பளபளா ஊறுகாய்கள்...

சுமார் இரண்டு மணி நேர சுற்றுப் பயணத்தில் நாம் பார்த்தது, இடைவிடாது கண்ணும் கருத்துமாக வேலை செய்யும் ஊழியர்கள். ஷிஃப்ட் முறையில் அறுநூற்றைம்பது பேர். சாப்பாடு, காபி இலவசம். முதலில் சாப்பிட்டு விட்டுத்தான் வேலையை ஆரம்பிப்பார்களாம். (கொடுப்பினை!) உணவு சம்பந்தப்பட்ட வேலை என்பதால், ஊழியர்கள் கண்ணும் கருத்துமாக இருப்பது அவசியம். அதுவும் தனிப்பட்ட குடும்பப் பிரச்னைகள் ஏதும் இருக்கக் கூடாது என்று நினைத்து, நிர்வாகம் அடிக்கடி அவர்களுக்கு கவுன்சிலிங் செய்கிறது.

இங்கு எம்.டி.ஆர். ஃபாக்டரி இவ்வளவு சுத்தமாக இருப்பதற்கு முக்கியக் காரணம், ஒரு நாளைக்கு நாற்பது முறை துடைப்பது தானாம்!

ஊருக்கெல்லாம் நூற்றுக்கணக்கான ரெஸிபிக்களைத் தயாரிக்கும் சதாநந்தாவிற்கு பிடித்த தமிழ்ச் சாப்பாடு - வற்றல் குழம்பு தானாம்!

கடைசியில் நமக்கு நுனி இலையில் சேமியா பாயசம், குலாப் ஜாமுடன் மணக்க மணக்கச் சாப்பாடு... அம்புட்டு ரகமும் அம்புட்டு ருசி! புகுந்து விளையாடி விட்டோம்.

மொத்தத்தில் எம்.டி.ஆர். பெண்களை சோம்பேறியாக்குகிறது. இத்தனை நாளாக பெண்கள் கணவனுடன் சண்டை போட்டு விட்டுப் பிறந்தகம் போய் விடுவார்கள். 'நான்கு நாள் பட்டினி இருந்தால், தன்னால சரண்டராகி அழைத்துப் போவான் கணவன்' என்று வீம்பாக இருப்பார்கள். இனி அது நடக்காது. ஆண்களுக்குக் கிடைத்திருக்கும் மிகப் பெரிய ஆயுதம் எம்.டி.ஆர்.!

- லதா சேகர்

# ஊட்டா ஆய்த்தா!


• எஸ்.எம்.கிருஷ்ணா


• தேவ கௌடா

**க**ர்நாடகாவில் இருவர் சந்தித்தால் முதலில் கேட்பது "ஊட்டா ஆய்த்தா?" (சாப்பிட்டாச்சா) என்பதே. தேவ கௌடாவும் எஸ்.எம்.கிருஷ்ணாவும் சந்தித்தால் சீட் பற்றி பேச மாட்டார்கள். ஊட்டா கேள்விதானாம் முதலில்!

- லதா



# சக்ஸஸ் சபோல்ஸ்!

மூன்று பெண்மணிகள் சேர்ந்தால் என்ன பண்ணுவார்கள்? குடும்பப் பிரச்னைகளைக் கொட்டித் தீர்ப்பார்கள்; புடைவை, நகை, டி.வி. சீரியல் பற்றி விவாதிப்பார்கள்; அல்லது அக்கம், பக்கம் குறித்து வம்பு பேசுவார்கள். இதுதானே வாடிக்கை? ஆனால் கொங்கு மண்ணின் புதல்விகளான ஷீலா செந்தில், வித்யா மோகன், புபாஷிணி ரமேஷ் மூன்று பேரும் வித்தியாசமாகச் சிந்தித்து பிசினஸுக்கு ஐடியா கொடுத்து, அதற்கு தங்களது கணவர்களையே முதலீடு செய்ய வைத்து விட்டனர். இன்று சுத்திகரிக்கப்பட்ட குடிநீர் மார்க்கெட்டில், நெம்பர் ஒன் சுதேசிக் கம்பெனி என்ற இடத்தைப் பிடித்துவிட்டது, இவர்களது சபோல் குடிநீர்!

அது என்ன சபோல்ஸ் (SABOL)?



சர்வீஸ் அண்டு பிசினஸ் ஆர்கனைசேஷன் லிமிடெட், என்கிற நிறுவனத்தின் சுருக்கம்தான் சபோல்ஸ். 1997 கோவையில் சிறிய அளவில் ஆரம்பிக்கப்பட்ட நிறுவனம். ஆரம்பக் காலத்தில் தினமும் வெறும் ஐம்பது கேன் தண்ணீர் மட்டுமே விற்றார்கள். இன்று சென்னை நகரில் மட்டும், தினம் ஆயிரத்துச் சொச்சம் கேன்கள் மளமளவென்று விற்பனையாகின்றன.

எந்த ஊரில் சபோல்ஸ் வாங்கி அருந்தினாலும், ஒரே மாதிரி இருக்க வேண்டும் என்பது இவர்களது லட்சியம். "அதனால்தான் கோவையில் உள்ள இவர்களது சுத்திகரிப்பு நிலையத்தில் சுத்திகரிக்கப்படும் தண்ணீரை, மாநிலம் முழுமைக்குமாக, நாங்களே டிரான்ஸ்போர்ட் செய்து, விற்பனை செய்தோம்" என்கிறார் சபோல்ஸ் மார்க்கெட்டிங் மேனேஜர் ஜெயராம்.

"கோவையில், சிறுவாணி மலையடிவாரத்தில் ஐந்நூறு அடி போர் போட்டு, தண்ணீரை எடுத்து சுத்திகரிப்பு செய்கிறோம். அதைத்தான் தமிழ்நாடு முழுமைக்கும் விற்பனை செய்தோம். சென்னையில் விற்பனை அதிகரிக்க, அதிகரிக்க, டிரான்ஸ்போர்ட் செலவு அதிகரித்தது. ஸ்ரீபெரும்புதூர் அருகில் எங்கள் தேவைக்கு ஏற்றபடி இடம் கிடைத்தது. குடிநீர் ஒரே மாதிரி இருக்க வேண்டும் என்ற லட்சியத்துடன், அதி நவீன தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி சுத்திகரிப்பு செய்கிறோம்" என்கிறார், சபோல்ஸ் பொது மேலாளர் மோகன்.

"நல்ல குடி நீர் வழங்குவது என்பது அத்தனை சுலபமான காரியமில்லை. அடிப்படையான விஷயங்களில் காம்ப்ரமைஸ் எதுவும் இல்லாத தயாரிப்பு எங்களுடையது. ஐ.எஸ்.ஐ. தரச்சான்று பெற்றிருப்பது ஒரு பக்கம் என்றால், இங்கு தயாரிக்கப்படும் ஒவ்வொரு பேட்ச் குடிநீரின் சாம்பிளும், தரக்கட்டுப்பாட்டுப் பரிசோதனை செய்யப்பட்ட பிறகே விற்பனைக்கு அனுப்பப்படுகின்றன. சபோல்ஸ் முழுக்க முழுக்க ஒரு சுதேசி நிறுவனம்.

"நிலத்தடி நீரை எப்படி சுத்திகரிப்பு

செய்து, பாட்டில்களிலும், கேன்களிலும் நிரப்பி விற்பனைக்கு அனுப்புகிறீர்கள்?"

இந்நிறுவனத்தின் நீரியல் துறை நிபுணரான பிரேம்குமார் விளக்குகிறார்:

"நிலத்தடி நீரில் மனிதனுக்குத் தேவையில்லாத ஏகப்பட்ட மினரல்களும், நோய் வரச் செய்யும் பாக்டீரியா கிருமிகளும் இருக்கும். இன்றைய சூழ்நிலையில் அந்தத் தண்ணீரை அப்படியே குடிப்பது உசிதமில்லை. எனவே தான் வடிகட்டுதல், மென்னீராக்குதல் முதல் பல்வேறுபட்ட ஒன்பது நிலைகளில் நிலத்தடி தண்ணீர் சுத்திகரிக்கப்படுகிறது."






• சபோல்ஸ் தொழிற்சாலை...

"அதேபோல, சுத்திகரிக்கப்பட்ட குடிநீரை பாட்டில்களிலும், கேன்களிலும் அடைப்பதிலும் நாங்கள் அதிக கவனம் செலுத்துகிறோம். தண்ணீர் நிரப்பும் பகுதி முழுவதுமே தொழிலாளர் கைபடாமல், தானியங்கித் தொழில் நுட்பத்தில் இயங்குபவை. ஒவ்வொரு காலி கேனும் முதலில் சோப்புத் தண்ணீரால் கழுவப்பட்டு, அந்தத் தண்ணீர் வடிந்தபின், வென்னீரால் கழுவப்படும். அதன் பிறகு குளோரினில் கழுவப்பட்டு, கடைசியாக குளிர்ந்த தண்ணீரில் கழுவப்படும். அதே நேரத்தில் கேனின் வெளிப்புறமும் சுத்தம் செய்யப்படும்" என்கிறார் பிரேம்குமார்.

"சிறந்த முறையில் தண்ணீரை சுத்தப்படுத்தி விட்டால் மட்டும் போதுமா? விற்பனை செய்ய புதுப்புது யுக்திகளைக் கையாள வேண்டாமா?" இந்தக் கேள்விக்கு பதிலளித்தார் ஜெயராம். "தண்ணீர் கேன்களை நேரடியாக வீடுகளுக்கே கொண்டு போய் விற்பனை செய்தோம். விளம்பரம் கிடைத்தது. புதுப்புது கஸ்டமர்கள் நிறைய அளவில் சபோல்ஸ் வாங்கிப் பயன்படுத்த ஆரம்பித்தார்கள். இன்று வரை, அதே விற்பனை பாணியைத்தான் கையாளுகிறோம்.




அடுத்து, எங்கே பெரிய அளவில் கண்காட்சிகள் நடைபெற்றாலும், அங்கே ஸ்டால் போட ஆரம்பித்தோம். அங்கே 'அங்கீகாரம் பெற்ற குடிநீர் வழங்குபவர்கள்' ஆனோம். பல்லாயிரம் பேருக்கு இலவசமாகத் தண்ணீர் விநியோகம் செய்தோம். ஒருமுறை 'ராஜஸ்தான் மேளா' ஒன்று கோவையில் நடைபெற்றது. அங்கே இலவசக் குடிநீர் வழங்கினோம். எங்கள் சபோல்ஸ் குடிநீரைக் குடித்த ஏராளமான ராஜஸ்தான் மாநிலத்தைச் சேர்ந்த கோவைவாசிகள், எங்களுக்கு ரெகுலர் வாடிக்கையாளர்களாகி விட்டார்கள்.

இன்று முந்நூறு மில்லி சிறு பாட்டில் முதல், இருபது லிட்டர் பப்பின் டாப் எனப்படும் கேன் வரை, பல்வேறு அளவுகளில் கிடைக்கிறது சபோல்ஸ். அனைத்துக்குமே நல்ல வரவேற்பு!

\- மௌலி



# அஜினோமோட்டோ

பண்பலை வானொலியைத் திருகினால் அஜினோமோட்டோ! பத்திரிகைகளைப் புரட்டினால் அஜினோமோட்டோ! அஞ்சால் அலுப்பு மருந்து போல, இது அஜீரணத்தைப் போக்கும் மருந்தோ, என்று பலருக்கும் பலவிதமான சந்தேகம். அஜினோமோட்டோ இந்தியா லிமிடெட் நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் மனோகரனைச் சந்தித்தோம்.

"சுமார் நூறு ஆண்டுகளாக, உணவுப் பொருள்கள் தயாரிப்பில் ஈடுபட்டு வரும் பாரம்பரியம் மிக்க ஜப்பானிய நிறுவனத்தின் பெயர்தான், 'அஜினோமோட்டோ'. இந்த நிறுவனம் கடந்த 1907ஆம் ஆண்டு 'மோனோசோடியம் குளுடமேட்' என்ற சுவை கூட்டியைத் தயாரித்து, 'அஜினோமோட்டோ' என்ற தனது பிராண்ட் பெயரில் உலகெங்கிலும் விற்று வருகிறது. மோனோ சோடியம் குளுடமேட்டை, ஆலைக் கரும்பு மற்றும் மரவள்ளிக் கிழங்கு போன்ற உணவுப் பயிர்களை பயன்படுத்தி, பெர்மன்டேஷன் எனப்படும் புளிக்க வைத்தல் முறையில் தயாரிக்கிறார்கள். இது நூறு சதவிகிதம் சைவ சுவை கூட்டியாகும். கடந்த ஆண்டு முதல், சென்னையைத் தலைமையிடமாகக் கொண்டு, இந்தியாவிலும் அஜினோமோட்டோ விற்பனையைத் தொடங்கி இருக்கிறோம். ஒரு ரூபாய் சாஷே பாக்கெட்டில் கூட அஜினோமோட்டோ கிடைக்கிறது.

**அஜினோமோட்டோ பற்றி பல அச்சமூட்டும் தகவல்கள் உலா வருகின்றதே?**

அஜினோமோட்டோ அமெரிக்காவில் அறிமுகமானபோது, அங்கேயும் பல தவறான கருத்துக்கள், ஆதாரமற்ற தகவல்கள் உலா வந்தன. ஆனால் இவற்றுக்கு அறிவியல் பூர்வமாக எந்த ஆதாரமும் கிடையாது. அமெரிக்காவின் எஃப்.டி.ஏ. நிறுவனம் உப்பு, சர்க்கரை, மிளகு போன்று அஜினோமோட்டோ பாதுகாப்பானது




# ஆபத்தானதா?

என்று அறிவித்துள்ளது. உலக சுகாதார நிறுவனமோ இந்தப் பொருளை உணவில் பயன்படுத்த எவ்வித வரையறையும் கிடையாது எனக் கூறியுள்ளது. எனவே அவரவர் விரும்பும் சுவையின் அளவுக்கு ஏற்ப, உணவில் சேர்த்துக் கொள்ளலாம்.

**சீன உணவுகளுக்கு மட்டுமே அஜினோமோட்டோவை உபயோகித்து வந்திருக்கிறார்கள். இப்போது இந்திய உணவு வகைகளில் இதைப் பயன்படுத்தலாமா?**

சைனீஸ் உணவகங்கள் மூலம் அஜினோமோட்டோ புழக்கத்திற்கு வந்ததால் இப்படி நினைக்கிறோம். இது தவறு. உலகில் உள்ள எல்லா உணவு முறைக்கும் இதனைப் பயன்படுத்தலாம். குறிப்பாக, அரிசி கொண்டு செய்யப்படும் உணவு வகைகள், காய்கறி உணவுகள், சைவ, அசைவ உணவுகளின் சுவையை பல மடங்கு அதிகரிக்கச் செய்யும். நமது உணவுப் பழக்கங்கள் மாறிக் கொண்டு வரும் இன்றைய கால கட்டத்தில், சுவையான உணவு என்பது அனைவரும் எதிர்பார்க்கும் ஒன்று. பல நூறு செலவு செய்து ஹோட்டல்களில் கிடைக்கும் சுவை, ஒரு ரூபாய் செலவில் வீட்டிலும் கிடைத்தால், யார்தான் விரும்பமாட்டார்கள். மேலும் இது இயற்கையானது மட்டுமல்ல, பாதுகாப்பானது என்றும் நிரூபிக்கப்பட்டுள்ளது.

**அஜினோமோட்டோவை உணவில் எந்த அளவு பயன்படுத்தலாம்? எப்படிப் பயன்படுத்த வேண்டும்?**

ஒருவருக்கு ஒரு சிட்டிகை போதுமானது. உணவு அடுப்பில் இருக்கும் போதும் போடலாம். இறக்கி வைத்துப் பரிமாறும் போதும் சேர்த்துக் கொள்ளலாம்.

**அஜினோமோட்டோ சேர்க்கப்பட்ட உணவை குழந்தைகளுக்குக் கொடுக்கலாமா?**

பன்னிரண்டு மாதத்திற்கு உட்பட்ட குழந்தைகளுக்குப் பயன்படுத்த கூடாது என்று இந்தியாவில் தடை உள்ளது. ஆனால் மைசூரில் உள்ள மத்திய உணவு ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி நிறுவனம், அஜினோமோட்டோவை ஆராய்ந்து குழந்தைகளுக்கும் கொடுக்கலாம் என்று பரிந்துரை செய்திருக்கிறது. இந்த பரிந்துரையைக் கொண்டு, மத்திய அரசின் தடையை நீக்க முயன்று வருகிறோம்.

**அஜினோமோட்டோவில் போலிகள் உண்டா?**



* மனோகரன்

நிறைய. இது நான் வரை தைவான், சீனா நாடுகளில் இருந்து இறக்குமதி செய்து, இங்கே ரீபேக் செய்து அஜினோமோட்டோ என்ற பெயரில் விற்று வந்தவை அத்தனையும் போலிகள். எங்களைத் தவிர வேறு யாரும் அஜினோமோட்டோ என்று அச்சிட்டு விற்க, சட்டபூர்வத் தடை பெற்றுள்ளோம். அஜினோமோட்டோ என்ற பெயரில் சிவப்பு நிற ஜாடி முத்திரை பொறிக்கப்பட்டு விற்கப்படுவதே எங்கள் தயாரிப்பு. இதை நுகர்வோர் கவனித்தாலே, போலிகளிடமிருந்து தப்பிக்கலாம். தமிழகத்தில், கரும்பும், சர்க்கரை வள்ளிக் கிழங்கும் அதிகம் பயிரிடப்படுவதால், அஜினோ மோட்டோவை, இங்கேயே தயாரிக்கவும், வேலை வாய்ப்பு அளிக்கவும் முயற்சி மேற்கொண்டுள்ளோம். இங்கேயே தயாரிக்கும்போது, இன்னும் விலை குறைவாகத் தர முடியும்.

சந்திப்பு : ஸ்ரீ

# 'ஆய்த' ரத்னம்!

**இரண்டு வருட இடைவெளிக்குப் பிறகு மீண்டும் மணிரத்னம்! இவரது தயாரிப்பில் தமிழில் 'ஆய்த எழுத்து'ம் 'இந்தியில் 'யுவா'வும் ஒரே நேரத்தில் வெளியாகியிருக்கின்றன. ஒரு மழை நாளில் மணிரத்னத்தின் அலங்கார அலுவலகத்தில் சந்தித்தோம்!**

*ஏன் இரண்டு வருஷ இடைவெளி?*

தொழில் நுட்ப ரீதியில் சினிமா இன்று முன்னேறி விட்டது. இதனால், படப்பிடிப்புக்கு முன்பும் சரி, போஸ்ட் புரொடக்ஷன் வேலைகளும் சரி, கணிசமாக அதிகரித்து விட்டன. இப்போது கூட, ஒரு படம் என்றால், அறுபது அறுபத்தைந்து நாட்களில் ஷூட்டிங்கை முடித்துவிட முடிகிறது. என்றாலும், முழுமையாக எல்லா வேலைகளும் முடிந்து ரிலீஸ் பண்ண நாளாகிறது. அதுவும் இந்தப்படம், தமிழ் மற்றும் இந்தியில் தனித்தனியே எடுக்கப்பட்டதும் ஒரு காரணம்.

*அது என்ன ஆய்த எழுத்து?*

ஆய்த எழுத்து என்பது மற்ற எழுத்துக்களைச் சார்ந்த ஓர் எழுத்து. இது மூன்று வெவ்வேறு இளைஞர்களைப் பற்றின கதை. சமூகத்தில் ஒவ்வொரு வரும் எவ்வளவு தூரம் மற்றவர்களைச் சார்ந்து வாழ வேண்டி இருக்கிறது. அதுதான் கதை.

சுமார் பத்து வருடங்களுக்கு முன்பு நான் நிஜமாக சந்தித்த ஒரு கேரக்டர், என் மனதில் ஏற்படுத்திய பாதிப்பில் உருவானது இந்தக் கதை. நாளடைவில் அது வளர்ந்து ஒரு ஷேப் கிடைத்தது இப்போதுதான்.





*தமிழில் ஆய்த எழுத்து; இந்தியில் அதுவே தான் 'யுவா'. இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?*

இதற்கு முன் எடுத்த ரோஜா, பம்பாய் போன்ற படங்களில் எல்லாம், தமிழில் எடுத்து, இந்தியில் 'டப்' பண்ணினேன். அதில் ஒரு சின்ன பிரச்னை உண்டு. உதாரணமாக ரோஜா படத்தில், திருநெல்வேலியைச் சேர்ந்த பெண், காஷ்மீருக்குப் போய், மொழி தெரியாமல் திண்டாடுவது, இயற்கையாக இருக்கும். ஆனால் அதை இந்தியில் கொடுக்கிறபோது, அவ்வளவு சரியாக இருக்காதில்லையா? அப்படி அட்ஜெஸ்ட் பண்ணவேண்டிய அவசியம் இல்லாமல், ஒரே கதையை தமிழிலும், இந்தியிலும் தேவைக்கு ஏற்ப சிற்சில மாற்றங்களைச் செய்து, இரண்டு படங்களாக எடுத்திருக்கிறேன். ஆய்த எழுத்து தமிழ் நாட்டில் நடக்கிற கதை, யுவா கொல்கத்தாவில் நடக்கிற கதை, இரண்டு படங்







வைப்பதுதான் என் வேலை. அதை விட்டுவிட்டு, புது முகங்களை அறிமுகப்படுத்த வேண்டிய அவசியம் என்ன வந்தது?

ஷூட்டிங்கின்போதே நேரிடையாக வசனங்களை நான் ஒலிப்பதிவு செய்வதால், அந்தந்த மொழியினை நன்கு பேசக் கூடிய ஆர்டிஸ்ட்கள் தேவைப்படுகிறார்கள். எனவேதான் வெவ்வேறு நடிக, நடிகையர்களை நடிக்க வைத்தேன்.

*இயக்குனர் பாரதி ராஜாவை நீங்கள் இயக்கியிருக்கிறீர்கள்...*

அந்த வில்லன் கேரக்டருக்கு வழக்கமான முகம் வேண்டாம் என்று நினைத்தேன். பாரதிராஜாவைக் கேட்டேன். வில்லன் ரோல்! 'ஆட்சேபணை உண்டா?'என்றேன். சம்மதித்தார். நடிக்க வைத்து விட்டேன். மற்ற நடிகர்களை எப்படி நடிக்க வைத்தேனோ, அப்படித்தான் பாரதிராஜாவையும் நடிக்க வைத்தேன். பிரமாதமாக நடித்திருக்கிறார்.



*மணிரத்னம் படங்கள் என்றாலே பெரும்பாலும் சீரியஸான படங்களாகவே இருக்கிறது, என்ன காரணம்?*

கன்னத்தில் முத்தமிட்டால் ஒரு எழுத்தாளரைப்பற்றின கதை. அதை சீரியஸாகத்தானே சொல்லியாக வேண்டும்? 'திருடா திருடா' படம் சீரியஸ் படம் இல்லை. அக்னி நட்சத்திரம் படம் கூட சீரியஸ் படம் என்று சொல்ல முடியாது.

*உங்கள் படங்களிலும் கூட கமர்ஷியல் விஷயங்களான சண்டைக் காட்சிகள், பாடல்கள் எல்லாம் இருக்கிறதே. இவற்றைத் தவிர்க்க முடியாதா?*

கமர்ஷியல் ஃபிரேமுக்குள் படம் எடுத்தாலும், கலை நயத்துடன் படத்தைக் கொடுக்க முடியும். நல்ல விஷயங்களைச் சொல்ல முடியும் என்பது என்னுடைய கருத்து.

*ஏறத்தாழ இருபது வருடங்களாக சினிமா உலகில் இருக்கிறீர்கள். இந்தக் கால கட்டத்தில், சினிமா உலகில் ஏகப்பட்ட மாற்றங்கள் வந்து விட்டன. இந்த மாற்றங்கள் உங்களை எந்த அளவுக்கு பாதித்துள்ளன?*

ஏகப்பட்ட மாற்றங்கள் நிகழ்ந்திருப்பது உண்மைதான் என்றாலும், அவை எல்லாம் தொழில்நுட்ப

களுக்கும் இன்னொரு முக்கியமான வித்தியாசம், இரண்டிலுமே வெவ்வேறு மூன்று ஜோடி ஹீரோக்கள், ஹீரோயின்கள்.

*எதற்காக இப்படிச் செய்தீர்கள்? தமிழ்ப்பட ஹீரோக்கள், ஹீரோயின்களையே இந்தியிலும் அறிமுகப்படுத்தி இருக்கலாமே?*

நான் என் கதையை சினிமாவாக எடுக்கிறேன். அதுதான் எனக்கு முக்கியம். அந்தக் கதைக்கு ஏற்றபடி நடிக, நடிகைகளைத் தேர்ந்தெடுத்து நடிக்க

ரீதியிலான மாற்றங்கள். அன்று பேனாவில் ஸ்கிரிப்டை எழுதினோம். இன்று கம்ப்யூட்டரில் எழுதுகிறோம். மாற்றங்களைத் தொடர்ந்து கவனித்தாலே, அதற்கேற்ப நம்மையும் மாற்றிக் கொள்ளுவது எளிது.

*மக்கள் ரசனையும் மாறிக் கொண்டு வருகிறதே!*

நான், என்றைக்கும், என்னையும் மக்களையும் தனித்துப் பார்ப்பது கிடையாது. என்னை அவர்களில் ஒருவனாகத்தான் நினைக்கிறேன். அதனால் அவர்கள் மத்தியில் ஏற்பட்டுள்ள மாற்றம் எனக்குப் புரிகிறது.

*மக்களுக்கு என்ன பிடிக்கும் என்பது தானே யாருக்கும் பிடிபடாத ஒரு விஷயமாக இருக்கிறது? அவர்கள் திருடா திருடியையும் ரசிக்கிறார்கள்; ஆட்டோகிராபையும் ரசிக்கிறார்களே?*

என் படத்தை மக்கள் நிறையப் பேர் பார்க்க வேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பமும். ஆனால், முதலில் நான் எடுக்கிற படம் எனக்குப் பிடித்ததாக இருக்க வேண்டும். பிடிக்காத ஒன்றை மக்களுக்குப் பிடிக்கும் என்பதற்காக, நான் படம் எடுக்கத் தயாரில்லை.

*அப்படியானால், உங்களுக்குப் பிடித்து நீங்கள் எடுக்கிற படம், மக்களுக்குப் பிடிக்காமல் போகிற ஆபத்து இருக்கிறதில்லையா?*

ஆமாம்! எனக்குப் பிடித்து, எடுக்கிற படம், மக்களுக்கும் பிடித்துப் போய் படம் வெற்றி பெறுகிறபோது, அதை ஏற்றுக் கொள்ளுகிறோமில்லையா? அதேபோல, மக்கள் ஏற்றுக் கொள்ளாத போது, அதையும் ஏற்றுக் கொண்டுதானே ஆகவேண்டும்?

*ஆக, உங்கள் படங்களின் தோல்வியால் நீங்கள் பாதிக்கப்படுவதில்லை. அப்படித்தானே?*

தோல்வியை அப்படியே ஏற்றுக் கொண்டு, எங்கே தப்பு செய்ததால் தோல்வி அடைந்தது என்று அலசிப் பார்த்து விட்டு, அடுத்த வேலையைப் பார்க்கப் போக வேண்டியதுதான்.

*இன்று சினிமா உலகை பாதிக்கிற பெரிய பிரச்னையாக திருட்டு வி.சி.டி. பேசப்படுகிறதே! அதற்குத் தீர்வுதான் என்ன?*

இன்றைக்கும் மக்களுக்கு சினிமா பார்க்கப் பிடிக்கிறது. தியேட்டருக்கு வந்து பார்க்கத்தான் பிடிக்கவில்லை. திருட்டு வி.சி.டியில் பார்த்து விடுகிறார்கள். அது தொழில் நுட்ப வளர்ச்சி காரணமாக வந்துவிட்ட பெரியதொரு பிரச்னைதான். அதனை ஒழிப்பது அத்தனை சுலபம் கிடையாது. கடுமையான சட்டதிட்டங்கள் வேண்டும். அரசாங்கம் கடுமையான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். மேற்கத்திய நாடுகளில் அதைத்தான் செய்திருக்கிறார்கள்.

*'பொன்னியின் செல்வன்' நாவலை படமாக எடுக்க விருப்பம் என்று சொன்னீர்களே! இன்னமும் அதைச் செய்ய ஆர்வமாக இருக்கிறீர்களா?*

ஆர்வமாகத்தான் இருக்கின்றேன்.

*ஹாலிவுட் கனவு காணும் தமிழ் சினிமா உலகம், ஆஸ்கர் விருது பெறும் அளவுக்கு எப்போது உயரும்?*

(சிரிக்கிறார்) நம் ஊர் பி அண்ட் சி ஆடியன்ஸ் பார்க்க வேண்டும். கமர்ஷியலாக வெற்றி பெறும்படி படம் எடுக்க வேண்டும் என்று ஒரு பக்கம் சொல்லிக் கொண்டிருக்கிறோம். இன்னொரு பக்கம், இதே படங்களுக்கு ஆஸ்கர் விருது கிடைக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். இரண்டும் எப்படி ஒரே நேரத்தில் சாத்தியமாகும்?

**- எஸ். சந்திரமௌலி, ஏக்ஜி**

படங்கள்: ஸ்ரீஹரி

''ரௌடி வீட்டில் பொண்ணு கட்டுனது தப்பாப் போச்சு.''
''ஏன்... என்னாச்சு?''
''பொண்ணு கழுத்திலும் சைக்கிள் செயினையே போட்டு அனுப்பிட்டாரு!''
- எம். அசோக் ராஜா



யால் இயக்குனரின் மனதிலும் மழை பெய்ய, இப்போது ஜல தோஷம்.

**கோ**டம்பாக்கத்தில் காணாமல் போனவர்கள் பட்டியலில் இருந்த கார்த்திக், உடலைக் குறைத்துக் கொண்டு மீண்டு(ம்) வந்திருக்கிறார். அதிலும் ஹீரோ, வில்லன் என்று இரட்டை வேடம். இயக்குனர் பாசிலிடம் உதவியாளராகப் பணி புரிந்த மகேஷ் இயக்கும் 'மனதில்' படத்தில் தான், கார்த்திக் இப்படி ரீ என்ட்ரி கொடுக்கிறார். தெய்வ மகன் சிவாஜியைப் போல, வில்லன் பாத்திரத்திற்குப் பாதி முகம் தீயில் கருகியது போன்ற கெட்-அப்பில் நடிக்கிறாராம். பொடிப்பசங்க பயந்துடப் போறாங்க!

• 'ராமகிருஷ்ணா' - ஜெய் ஆகாஷ், ஸ்ரீதேவிகா



**கா**தல் கோட்டை படத்துக்காகத் தேசிய விருதைத் தட்டி வந்த முதல் தமிழ் இயக்குனர் அகத்தியன். அன்னார் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று விசாரித்ததில், 'ஜலதோஷத்தின் பிடியில் சிக்கித் தவித்துக் கொண்டிருக்கிறார்' என்று தகவல் வந்தது. அகத்தியன் இப்போது இயக்கிக் கொண்டிருக்கும் 'ராமகிருஷ்ணா' படத்தில், "பெய்யும் மாலம்மா மழை" என்று ஒரு பாடல். இதை, தேவா பதிவு செய்தபோது, சென்னையில் எதிர்பாராத முதல் கோடை மழை. பிறகு ஃபயர் எஞ்ஜின் கொண்டு செயற்கை மழையில் இந்தப் பாடலை படம் பிடிக்க நாகர்கோவிலுக்குப் போனபோது, அங்கேயும் ஒரு வாரம் தொடர்ந்து அடை மழை பெய்ய, நிஜ மழையில் நனைத்தபடியே படம் பிடித்து விட்டுத் திரும்பினாராம் இயக்குனர். பிறகு பாடலை எடிட் செய்து திரையில் போட்டுப் பார்த்தபோது, மறுபடியும் சென்னையில் மழையாம். இந்த மழை



• ரத்னவேலு

# மனதில்

**'சே**து' தொடங்கி 'பேரழகன்' வரை பட்டையைக் கிளப்பியிருக்கும் ஒளிப்பதிவாளர் ரத்னவேலு, தெலுங்குப் பட உலகில் முதன் முதலில் அடியெடுத்து வைத்து, 'ஆர்யா' படத்திற்குப் பணியாற்றினார். படம் அங்கே சூப்பர் டூப்பர் ஹிட். படத்தின் ஹீரோ அல்லுஅர்ஜுன்,

வேண்டும்" என்று நெத்தியடியாக நிபந்தனை விதித்ததில் ஆடிப் போன சிரஞ்சீவி, ரத்னவேலுவின் கொள்கைப் பிடிப்பைப் பாராட்டியிருக்கிறார்.



* 'நோ எக்ஸிட்' குறும் படத்தில்

**கா**ன் திரைப்பட விழாவில் ஒரு தமிழ்ப் படம் கூடப் பங்கு பெறாத சோகம் இருந்துவிட்டுப் போகட்டும்!

அமெரிக்காவின், ஃப்ளோரிடாவில் நடைபெற்ற நேபில்ஸ் 2004 உலகத் திரைப்பட விழாவில், மணிரத்னத்தின் 'கன்னத்தில் முத்தமிட்டால்' திரைப்படத்தோடு, காரைக்குடி தமிழ் இளைஞர் ஆனந்த் அழகப்பன் இயக்கிய 'நோ எக்ஸிட்' என்ற ஏழு நிமிடக் குறும்படமும் கலந்து கொண்டு பாராட்டுக்களை அள்ளி வந்திருக்கிறது.

அமெரிக்காவில் வசிக்கும் ஒரு இந்தியப் பெண், ஷாப்பிங் போய் விட்டு வீட்டுக்கு வருகிறாள். வந்தவள், தனது அட்டையின் கிரெடிட் நிலவரத்தைத் தெரிந்து கொள்ள, கடன் அட்டை நிறுவனத்தின் வாடிக்கையாளர் சேவைக்குத் தொலைபேச, பல விளம்பரங்களை ஒலி பரப்பி நேரத்தைத் திருடும் அவலத்தை, நெத்தியில் அடித்த மாதிரி படம் பிடித்திருக்கிறார். ஆனந்த் அழகப்பன், தமிழ் சினிமாவை கதி கலக்காமல் விடுவதில்லை என்று, அமெரிக்க ஹார்டுவேர் என்ஜினியர் வேலையை விட்டுவிட்டு, சென்னைக்கு வந்துவிட்டார். நல்ல படமா எடுங்க ஆனந்த்!

**- ரவுண்ட்ஸ்பாய்**

தெலுங்கு சூப்பர் ஸ்டார் சிரஞ்சீவியின் மருமகன். படத்தைப் பார்த்த சிரஞ்சீவி, ரத்ன வேலுவைக் கட்டிப் பிடித்துப்

# பெய்த மழை!

பாராட்டியதோடு, "எனக்கு ஒரு படம் பண்ண முடியுமா?" என்று கேட்க, "கதை பிடித்தால் ஒப்புக் கொள்வேன். அதுவும் புதுமுக இயக்குனராக இருக்க



'மனதில்' கார்த்திக், கௌசல்யா

"பிராமண சமூகத்தில் திருமணம் என்றால் ஏழு நாள் வைபவம். இன்றைய கணிப்பொறி யுகத்தில், ஏழு ஐந்தாகி, ஐந்து மூன்றாகி, மூன்று நாள் திருமணம் ஒரே நாளாகிவிட்டது. என்றாலும், பெரும்பாலான அன்பர்கள் மூன்று நாட்கள் திருமணத்தையே பெரிதும் விரும்புகிறார்கள்" என்கிறார் சுபம் கணேசன். மண்டபத்தில் கோலம் போடுவதில் தொடங்கி, தாம்பூலப் பை கொடுத்தனுப்புவது வரை, மொத்தத் திருமணத்தையும் அக்ஷர



• சுபம் கணேசன்

# கல்யாண வீட்டில்

சுத்தமாக நடத்தித் தருவதில் கரை கண்டவர் இந்த கணேசன். மூன்று நாள் திருமணத்தில் அறுசுவை விருந்து பெரும் முக்கியத்துவம் பற்றியும், அதில் குறைவிருந்தால் ஏற்படும் குழப்பம் பற்றியும், தமது அனுபவங்களை விவரிக்கிறார்.

"முதல் நாள் திருமணத்தன்று மாலை, ஜானவாசம் எனப்படும் மாப்பிள்ளை அழைப்புதான் முக்கிய அம்சம். ஜானவாச டிபன் மிகவும் விசேஷமானது. காரணம், மாப்பிள்ளை வீட்டார் முதன் முதலில் கை நனைக்கிறார்கள். அவர்கள் திருப்தி அடையும் வகையில் டிபன் இருக்க வேண்டும். ஜானவாச டிபனை எங்கள் சமையல் குழுவினர் 'எஃப்.ஐ.பி.ஐ' ரெடியா? என்று சங்கேத பாஷையில் அழைப்பார்கள். ஃபர்ஸ்ட் இம்ப்ரஷன் ஈஸ் பெஸ்ட் இம்ப்ரஷன் என்பதன் சுருக்கம்தான் இந்த எஃப்.ஐ.பி.ஐ. அதாவது மாப்பிள்ளை வீட்டாரை எடுத்த எடுப்பிலேயே கவர்ந்துவிட வேண்டும். மதியம் லஞ்ச் முடிந்து இரவு மாப்பிள்ளை அழைப்பு - டின்னர்.

இங்குதான் பிரச்னையே வரும். மண்டபம் எங்கே அமைந்திருக்கிறது, நகரின் உள்ளேயா, புறநகர்ப் பகுதியிலா என்பதைப் பார்த்து, டின்னர் விஷயத்தில் கவனமாக இருக்க வேண்டும். மண்டபம் எளிதில் அடைந்துவிடக் கூடிய இடத்தில் இருந்தால், இருநூறு பேரை எதிர்பார்த்த இடத்தில் ஐந்நூறு பேர் வந்துவிடலாம். அதேபோல மாலை ஏழு முப்பது மணி வரை மண்டபத்திற்கு வந்துவிடும் உறவினர், நண்பர் கூட்டத்தைப் பார்த்து, எவ்வளவு சமைப்பது என்று முடிவு செய்துவிடுவோம். அதையும் மீறி அதிக எண்ணிக்கையில் குவிந்துவிட்டால், ஆபத்பாந்தவனாகி கைகொடுப்பது சாம்பார் சாதமும், தயிர் சாதமும்தான். சாம்பார் சாதத்தைத் தேவைக்கேற்ப கூடுதலாகச் செய்து கொள்ள, எப்போதும் இரண்டு கிலோ துபருப்பை வேகவைத்து ரெடியாக வைத்திருப்போம். கூட்டம் வராமல் போய்விட்டால், பருப்பைக் கீழே கொட்டி விடுவோம். தயிரும் கூடுதலா

கவே இருப்பில் இருக்கும். அதிரடியாக அரை மணி நேரத்தில் செய்து முடிக்கக் கூடியவை, உருளைக்கிழங்குப் பொரியலும், கோஸ் கூட்டும்.

"இரண்டாவது நாள் முகூர்த்தத்தன்று மதிய லஞ்ச், பெரிய கௌரவப் பிரச்னை. முகூர்த்த லஞ்ச் மிகவும் கிராண்டாக இருக்கும். பாயசம் முதல் பீடாவரை, குறைந்தது இருபத்து இரண்டு அயிட்டங்கள் இருக்கும். திடீரென்று பெண்





வீட்டார், அயிட்டங்கள் போதாது என்று சொல்லுவார்கள். அடுத்த நிமிஷமே, முப்பது அயிட்டங்கள் தர நாம் தயாராக இருக்க வேண்டும். மாலை நலங்கு ஸ்நாக்ஸ், கடச்கட, சுவையாக இருந்தால் மண்டபத்தில் நகைச்சுவைக்கும், கொண்டாட்டத்திற்கும் குறைவே இருக்காது.

பெரும்பாலும் இரண்டாவது நாள் டின்னர், பஃபேவாக இருப்பதையே விரும்புகிறார்கள். நான் ரொட்டி, ருமாலி ரொட்டி, மலாய்கோப்தா பன்னீர் பட்டர் மசாலா, என்று இளைய தலைமுறை விரும்பும் அயிட்டங்கள்தான் இதில் அதிகம்.

"மூன்றாவது நாள் காலை பாலிகை கரைத்துவிட்டு, புகுந்த வீட்டுக்குப் பெண் புறப்படும் சென்டிமெண்ட் கண்ணீர்க் காட்சி ஒரு புறம் என்றால், பெண் - பிள்ளைக்கு அங்குமணி சாமான்களும், இருவீட்டாருக்கும் கட்டுச் சாதக் கூடைகளும் கொடுத்தனுப்ப ரெடியாக வைத்திருப்போம். போக்குவரத்து இல்லாத காலத்தில், திருமணம் முடிந்து, வண்டிகட்டி பெண்ணை அழைத்துப் போகும்போது, வழியில் சாப்பிட ஏற்பட்டதுதான் கட்டுச் சாதக் கூடை, புளியோதரை, தயிர் சாதம், ஊறுகாய், என்று கொடுத்தனுப்புவது சம்பிரதாயம். இன்று திருமணத்தில் கட்டுசாதக் கூடை போகாவிட்டால் கலாட்டாதான். இப்போது கட்டுசாதக் கூடையில், இட்லியும் இடம்பிடித்துக் கொண்டிருக்கிறது. அங்குமணி சாமான்கள் என்பது, புதுமணத் தம்பதி, உடனே தனிக்குடித்தனம் போனால், ஒரு மாதத்துக்கு சமைத்துச் சாப்பிடத் தேவையான மளிகை சாமான்கள்." எனும் சுபம். கணேசன், "காலம் மாறினாலும் கலாசாரம் மாறவில்லை" என்கிறார்.

# கட்டுச் சாதம்!

- ஜெய்



வி.ஐ.பிகள் சிக்கென்றுதான் இருக்கிறார்கள். அவர்கள் கிச்சன்கள் எப்படியிருக்கிறது என்று எட்டிப் பார்த்தோம். ஒவ்வொரு கிச்சனிலும் ஒவ்வொரு விதமான கமகம!



• கருணாஸ்

# சட்டி சுட்டதடா; சக்தி வந்ததடா!

• கிரேஸ்

• ரமேஷ்

## அசைவப் பிரியர் அன்புமணி

பா.ம.கவின் அமைப்புச் செயலாளராக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள டாக்டர் இரா. அன்புமணி, ராஜா அண்ணாமலைபுரம் கற்பகம் அவென்யூவுக்கு வீடு மாற்றியிருக்கிறார். "இப்போது தான் புது வீட்டில் செட்டிலாகி வருகிறோம்'' என்கிறார் சௌம்யா அன்புமணி.

"என் வீட்டுக்காரர் அசைவப் பிரியர். ஆனால் அவர் செல்லுமிடங்களில் அசைவ உணவை அவர் மீது திணித்து விடுவதால், நான் வீட்டில் வாரத்திற்கு ஒரு முறைதான் அசைவம் செய்வேன். அவருக்கு தினசரிச் சமையலில் முக்கியமாக இருக்க வேண்டியது வாழைத்தண்டு. கீரை, புடலங்காய், கொத்தவரைக்காய், கத்தரிக்காய் என்று நாட்டுக் காய்கறிகளைத்தான் விரும்பிச் சாப்பிடுவார். பீட்ரூட், காரட் எல்லாம் எனக்கும் குழந்தைகளுக்கும் தான். நான் சமையலில் போடும் உப்பை விட, கொஞ்சம் தூக்கலாக அவரே போட்டுக் கொள்வார். எங்கள் குடும்பத்தில் பல டாக்டர்கள். எனவே ஆரோக்கிய உணர்வு அதிகம். எண்ணெய், காரம், உப்பு ஆகிய விஷயங்களில் ரொம்பவும் ஜாக்கிரதையாக இருப்போம்" என்ற சௌம்யா, தாம் விரும்பிச் செய்யும் ஸ்பானிஷ் ஆம்லெட் ரெசிபியைச் சொன்னார்.

*தேவையான பொருள்கள்:* வெங்காயம், உருளைக் கிழங்கு, மற்றும் பச்சை மிளகாய், நான்கு முட்டைகள்.

*செய்முறை:* வெங்காயம், உருளைக் கிழங்கு மற்றும் பச்சைமிளகாயை துண்டுகளாக நறுக்கி, வாணலியில் போட்டு வறுத்துக் கொள்ளவும். முட்டையை உடைத்து மஞ்சள் வெள்ளைக் கருவுடன் தேவையான உப்பு போட்டு, உருளை, வெங்காயத்தைக் கலக்கவும். மிக்ஸியில் போட்டு அடிக்க வேண்டும். பிறகு தவாவை வைத்து முக்கால் அங்குலம் கனத்துக்கு ஆம்லெட் போட வேண்டும். ஒவ்வொரு பக்கமாக மூடி போட்டு, வேக வைத்து எடுக்க வேண்டும். இப்போது

ஸ்பானிஷ் ஆம்லெட் ரெடி.

## உடம்புக்கு நல்லது உளுத்தங் கஞ்சி!

கலை நயத்தோடு தமது கிச்சனை நிர்வகித்து வருகிறார் விஜயலட்சுமி



• விஜயலட்சுமி

ரமேஷ்பிரபா. சன் தொலைக்காட்சியின் சமையல் நிகழ்ச்சித் தயாரிப்பாளர் இவர். நானூறுக்கும் மேற்பட்ட நிகழ்ச்சிகளை நடத்தி முடித்து விட்டார்.

"நகரத்து வாழ்க்கைக்குப் பழக்கப்பட்டு விட்டாலும், ரமேஷ்பிரபா இன்னமும் மனதளவில் கிராமத்து ஆசாமிதான். எனவே எங்கள் வீட்டு உணவுப் பழக்கத்தில் மண்வாசனை அதிகமாகவே இருக்கும். ரொம்பவும் பரிச்சயமாகிப் போனவை உளுத்தங் கஞ்சி, கேழ்வரகுக் கூழ், தொட்டுக் கொள்ள வற்றல் மிளகாய், வெங்காயம். தினசரி துவையல் உண்டு. நான் சுத்த 'வி'. ஆனால் அவர் அசைவம் சாப்பிடுவார். சப்பாத்தி, புல்கா, அதற்குத் தொட்டுக் கொள்ள வகை வகையான வட இந்திய சைட் டிஷ் சமைப்பதில் நான் எக்ஸ்பர்ட். இருந்தாலும் அவருக்காக என்.வி. செய்யவும் கற்றுக் கொண்டு விட்டேன்'' என்கிறார் விஜயலட்சுமி.



• சௌம்யா



• அன்புமணி

நடிகர் கருணாஸ் வீட்டுக் கிச்சனில் ரகம் ரகமாக அடுக்கி வைக்கப்பட்டுள்ள தட்டுகள், ஸ்பூன்கள், கரண்டிகள் ஆகியவற்றுக்கிடையே, நான்கு சிறிய மண் சட்டிகளும் நேர்த்தியாக வைக்கப்பட்டிருக்கின்றன. ''சாதமாகட்டும், குழம்பாகட்டும், சட்டியில் செய்தால் அதன் டேஸ்டே தனி என்று கருணாஸ் சொல்லுவார். அதனால் தான் கிச்சனில் சட்டிகள்'' என்று விளக்கம் சொன்னார் கிரேஸ் கருணாஸ். சட்டிச் சமையல் சக்தியைக் கூட்டுமாம்.

''அவர் பாட்டுக்கு ஒரு பக்கம் அவுட்டோர் படப்பிடிப்பு என்று கிளம்ப, நான் பாட்டுக்கு லைட் மியூஸிக் நிகழ்ச்சி நடத்த ஏதாவது ஊருக்குப் போக, இருவரும் சேர்ந்து வீட்டில் இருக்கும் நாட்கள் மிகவும் குறைவு. அப்படி இருக்கும் பட்சத்தில், கிச்சன் என் ஆக்கிரமிப்பால் களைகட்டிவிடும். கருணாஸ் மீன் வகையறாக்களை விரும்பிச் சாப்பிடுவார். அதுவும் ஏரி, குளத்து மீன்கள் தான் அவரது விருப்பம். ரொம்பக் காரசாரமாக இருக்க வேண்டும் சமையல்''என்ற கிரேஸ், ''பெரும்பாலான பெண்கள் நைட்டி அணிந்து கொண்டுதான் கிச்சனில் வேலை செய்கிறார்கள். அவ்வப்போது கைகளைக் சுத்தம் செய்து கொள்ள இடுப்புப் பகுதியில் துடைத்துக் கொள்கிறார்கள். இதனால் நைட்டியின் இடுப்புப் பகுதி அழுக்காகிவிடுகிறது. இதைத் தடுக்க, துப்பட்டாவையோ அல்லது துண்டையோ இடுப்பில் கட்டிக் கொள்ளலாம்'' என்கிறார்.

- கௌசி



நல்லா ட்ரஸ் பண்ணினால் மட்டும் போதாதுங்க, பார்ட்டி, கெட்-டு-கெதர் என்று போகும் போது, டீஸண்டா சாப்பிடவும் தெரிஞ்சுக்கணும். பரிமாறுவது ஒரு கலை என்றால், சாப்பிடுவதும் ஒரு கலைதான்.

இன்று இலை போட்டு கீழே உட்கார்ந்து சாப்பிடும் சிஸ்டம் அநேகமாகப் போய் விட்டது. டேபிள் சேர்தான். அப்போது டேபிள் மானர்ஸ், அதாவது 'டேபிள் உணவு' கலாசாரத்தையும் கண்டிப்பாகத் தெரிந்து அனுசரிக்க வேண்டும்.



# டேபிள் மானர்ஸ்!

பார்வதி கந்தசாமி



**சரியான போஸ்கள் :** முதலில் நாகரிகமாக உட்காரத் தெரிய வேண்டும். காலால் தாளம் போடுவது, சேரை முன்னும் பின்னும் ஆட்டுவது, காலை பரத்தி உட்காருவது... இதெல்லாம் கூடவே கூடாது.

**வாயில் கவளம், பேச்சில் மௌனம்:** வாய் நிறைய சோற்றை வைத்துக்கொண்டு அரசியல் நிலவரம், சினிமா கிசுகிசு, சீரியல் கதை, ஆபீஸ் வம்பு... பேச வேண்டாம்.. எதிர் சீட் சங்கடப்படும். அவர்கள் மேல் தெறிக்கும்... ஸோ, கேர்ஃபுல்!

**சவுண்ட் ப்ரூஃப் :** ரசத்தை சர்ரென்று உறிஞ்சுவது, சப்சப்பென்று சத்தமிட்டுச் சாப்பிடுவது, அப்பளத்தை சரவெடி பட்டாசு கணக்காக நொறுக்கி பயமுறுத்துவது, பெரிதாக ஏப்பமிடுவது... போன்றவை அராஜகச் செயல்கள். அடக்கி வாசிக்கவும்!

**ஸ்லோமோஷன் :** சாப்பிட்டு விட்டு கையலம்பி, நேராக தில்லிக்குப் போய் பிரதமர் நாற்காலியில் உட்காரப் போவது போல் பரபரவென்று பறக்காதீர்கள். கூட உட்கார்ந்திருப்பவருக்குக் கம்பெனி தரவும். சாப்பாடுத் தட்டை விட்டு



கண்ணை அகற்றாமல், லட்சியமே கபளீ கரம் பண்ணுவதுதான் என்றில்லாமல், மெதுவாகச் சாப்பிட்டுக் கொண்டே பேசலாமே...

**சேஷ்டைக்கு தடா!** : காதைக் குடைவது, தலையை நிமிடத்திற்கொரு தரம் சீப்பால் வாரி விடுவது, மூக்கை... இந்த லீலைகளுக்கு தடா... பொடா எல்லாம் போடலாம்.



**பிளாட்பாரக் கடை** : முருங்கைக் காயை நன்றாக உருவி சாப்பிட்டு சக்கை, குவியல், பிடிக்காத 'தான்'கள், மற்றும் நான்வெஜ் அன்பர்கள் எலும்பு, முள்ளு என்று டேபிள் இளாத்தில் போடாதீர்கள். வார்ஜ் ப்ளேட்டில், ஓர் ஓரமாக வைக்கலாம்.

**புது ஸ்டைல் டேஞ்சர்** : நம் தென்னிந்திய உணவு வகைகளுக்கு எதுக்குங்க ஸ்பூன், ஃபோர்க் எல்லாம்? கைதான் பெஸ்ட்! சப்பாத்தி, பூரியை ஆர்டர் பண்ணி விட்டு, மேற்கூறிய ஆயுதங்களை கையிலெடுத்தால் 'காமெடி டைம்'தான்.




**தாராளமாகப் பாராட்டவும்** : உங்களை விருந்துக்கு அழைத்த 'ஹோஸ்டிற்கு' சாப்பிட்ட பிறகு 'பிரமாதமான சாப்பாடு' என்று நன்றி தெரிவித்துப் பாராட்டவும். "இதைவிட அங்கே அவியல் பிரமாதம், பாஸந்தி சூப்பர். இங்கே சுமார்தான்" ரக பேச்சினால், ஒரு நண்பரை இழக்கிறீர்கள். அவரும், 'உங்களை கோத்ரா ரயிலில் உட்கார்த்தி வைக்காமல் போய் விட்டோமே' என மானசீகமாக வருந்துவார்.

இவையெல்லாம் ஒருசில டிப்ஸ்கள் தான். இதைக் கடைப்பிடித்தாலே 'மானர்ஸ்' திலகம் பட்டம் உண்டு.

---

## சிங் சாங் செளவ்!

**நீ**ங்கள் சீனாவில் இருந்தால் உண வருந்தும்போது கிண்ணத்தை சாப் ஸ்டிக்கால் தட்டி ஒலியெழுப்பாதீர்கள். இது நீங்கள் 'ஹோஸ்டை' இன்ஸல்ட் செய்வதாகக் கருதப்படுமாம். அரிசிச் சோறு கிண்ணத்தில் சாப்ஸ்டிக்கைச் செங்குத்தாக நேராக வைக்கக் கூடாதாம். இது இறுதிச் சடங்கின்போது செய்யப்படும் செயலாம். சீனியர்கள் வருத்தப்படுவார்களாம்.



என் வகுப்பில், கேள்வி - பதில் பகுதியில் மட்டும் எல்லா மாணவர்களும் பங்கு கொள்ள வேண்டும், என்று தீர்மானமாக இருப்பேன். நாற்பது நிமிடங்களுக்குப் பாடம் நடத்திவிட்டு, மீதி இருபது நிமிடங்களுக்கு விவாதம், கேள்வி - பதில் என்று வைத்துக் கொள்ளுவேன். இந்த முறையில், மாணவர்களிடமிருந்து நான் நிறையக் கற்றுக் கொண்டிருக்கிறேன். அவர்கள் கேட்கும் சில கேள்விகளுக்கு, பதில் சொல்ல முடியாமல் திணறியிருக்கிறேன்.

சில வேளைகளில், நான் வகுப்பில் சொல்லும் கதைகள் விவாதத்தில்தான் முடிந்திருக்கின்றன. "ஒரு பிரச்னைக்கு இதுதான் சரியான முடிவு என்று பல சந்தர்ப்பங்களில் உறுதியாகச் சொல்ல முடிவதில்லை. எல்லாமே நீங்கள் எப்படி ஒரு பிரச்னையைப் பார்க்கிறீர்கள் என்பதைப் பொறுத்தது. பிறரைப் பற்றி நாம் என்ன நினைக்கிறோமோ, அதன் அடிப்படையில்தான் நம் தீர்ப்பைப் பெரும்பாலும் அமைத்துக் கொள்கிறோம்", என்றேன் ஒருமுறை.

என் மாணவர்கள் இதை ஏற்க மறுத்து, "எங்கே நிரூபியுங்கள் பார்க்கலாம்!" என்றார்கள் உடனடியாக.

"சரி, நான் ஒரு சின்னக் கதை சொல்லுகிறேன். இது பல நூற்றாண்டுகளுக்கு முன் நடந்தது. ரத்னபிரபா என்ற ஓர் அழகான, பணக்காரப் பெண் இருந்தாள். அவள் தன் படிப்பு எல்லாம் முடிந்ததும், தன் ஆசிரியரிடம் 'நான் உங்களுக்கு குருதட்சிணை

எனவே 'இந்தப் பெண்ணின் தைரியத்தைச் சோதித்துப் பார்த்து விடலாம்' என்று எண்ணி, அவள் நிறைவேற்ற முடியாத அளவுக்கு மிகக் கஷ்டமான நிபந்தனை ஒன்று



# யார் பெரியவர்?

**சுதா மூர்த்தி**

தர வேண்டுமே, எதைத் தர வேண்டும்?' என்று கேட்டாள்.

"உன் தகப்பனார் ஏற்கெனவே கொடுத்து விட்டார். நீ எதுவும் கொடுக்க வேண்டியதில்லை!" என்றார் ஆசிரியர்.

ரத்னபிரபா விடுவதாயில்லை. நச்சரித்துக் கொண்டே இருந்தாள். ஆசிரியருக்கு இது சற்றும் பிடிக்கவில்லை.

போட்டார். அப்புறம் அவள் தன்னைத் தொந்தரவு செய்ய மாட்டாள், பாருங்கள்!

ஆசான் சொன்னார்: "ரத்னபிரபா, சந்திரனே இல்லாத இருட்டான ஒரு

ராத்திரியில், நீ உன்னுடைய விலை மதிப்பற்ற ஆபரணங்களை எல்லாம் அணிந்து

ந்துக்கொள்!



கொண்டு, என் வீட்டுக்குத் தனியாக வரவேண்டும்!''

ரத்னபிரபாவின் வீட்டுக்கும் ஆசிரியரின் வீட்டுக்கும் இடையே ஒரு காடு இருந்தது. சாலையும் மிக மோசமாக இருக்கும். மிருகங்கள் குறுக்கிடலாம். ஓர் ஆற்றையும் கடந்தாக வேண்டும். ரத்னபிரபா ஒரு கணம் யோசித்து விட்டு, அங்கிருந்து புறப்பட்டுப் போய்விட்டாள். 'நல்ல வேளை, ரத்னபிரபாவின் ஆசையை அணைத்து விட்டோம். அவள் வரமாட்டாள்' என்று மகிழ்ந்தார் ஆசிரியர்.

அமாவாசை இருட்டு. அன்று ரத்னபிரபா விலை உயர்ந்த ஆபரணங்களை எல்லாம் அணிந்து கொண்டு, ஆசானின் வீட்டுக்குச் செல்லப் புறப்பட்டாள். இதைப் பார்த்து விட்ட அவள் தகப்பனார், 'எங்கே போகிறாய்?' என்று விசாரித்தார். ரத்னபிரபா விஷயத்தைச் சொன்னதும், அவள் அப்பாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"உன் ஆசிரியர் மிக நல்ல மனிதர் ஆயிற்றே? நீ அவரை மிகவும் வற்புறுத்தி இருப்பாய். அதைப் பொறுக்காமல் அவர் கஷ்டமான காரியம் ஒன்றைச் செய்யச் சொல்லியிருப்பார், உனக்குப் பாடமாக இருக்கட்டும் என்று. அவரை எனக்கு நன்றாகத் தெரியும். நீ உள்ளே போ. அவரைப் பார்த்துச் சொல்லி விடுகிறேன். 'அவர் புரிந்து கொள்ளுவார். நீ அவருடைய பெண் மாதிரி அல்லவா?'' என்றார் அவள் தகப்பனார்.

ரத்னபிரபா அதைக் கேட்கவில்லை. தான் ஆசிரியருக்கு வாக்களித்தபடியே, இருளில், தனியாக, நகைகள் அணிந்து கொண்டு செல்லப் போவதைத் தடுக்க வேண்டாம் என்றாள். எதைப் பற்றியும் பயமின்றி நடக்கத் தொடங்கினாள்.

திடீரென்று திருடன் அவளை வழியில் நிறுத்தினான். அவன் இதுவரை ஒரேயடியாக இத்தனை ஆபரணங்களை ஒரே சமயத்தில் பார்த்ததே இல்லை. எத்தனை பணம் தனக்குக் கிடைக்கும் என்று மகிழ்ந்து போனான். அவளை வழியில் நிறுத்தி, தன் எண்ணத்தைச் சொன்னான்.

ரத்னபிரபா உறுதியாக இருந்தாள்."நான் என் ஆசிரியரிடம் நகைகள் எல்லாம் அணிந்து கொண்டு தனியாக வருவேன் என்று வாக்குக்கொடுத்திருக்கிறேன். இப்போது என்னைத் தடுக்காதே. நான் திரும்பி வரும்பொழுது, நானாகவே எல்லாவற்றையும் உனக்குக் கொடுத்து விடுகிறேன். நான் எப்போதுமே சொன்ன வார்த்தையைக் காப்பாற்று வேன்!"என்றாள்.

திருடனுக்கோ ஆச்சரியம். 'சரி, போ' என்று விட்டு விட்டான். ஆனால் என்ன நடக்கிறது என்று பார்ப்பதற்காக அவளைப் பின் தொடர்ந்தான். ஆசிரியரின் வீட்டையடைந்து ரத்னபிரபா கதவைத் தட்டினாள். கதவைத் திறந்த ஆசிரியருக்கு வியப்பு ஒருபுறம், வருத்தம் ஒருபுறம்.

"நீ விளையாட்டாக எடுத்துக் கொள்ளுவாய் என்றுதான் இப்படிச் சொன்னேன். ஆனால், நீ இப்படி எல்லாத் தடைகளையும் கடந்து வருவாய் என்று நான் நினைக்கவே இல்லை. வீட்டுக்குத் திரும்பிப் போ. உனக்கு என் ஆசிகளும், வாழ்த்துகளும் உண்டு. வாக்குத் தவறாத பெண் நீ!'' என்றார் ஆசான்.

ரத்னபிரபா திரும்புகையில் அந்தத் திருடன் எதிரே

வந்தாள். "என்னுடைய எல்லா நகை களையும் தருகிறேன் என்றேனே? இதோ, எடுத்துக் கொள்!" என்றாள்.

திருடன் புன்னகை செய்தான். "நீ ஓர் அசாதாரணமான பெண்ணம்மா! உன்னிட மிருந்து எனக்கு எதுவும் வேண்டாம். உன் னைப் போன்றவர்களைப் பார்ப்பது அரிது!"

ரத்னபிரபா வீட்டுக்கு வந்தாள். அவள் தகப்பனார் வீட்டு வாசலிலேயே நின்று கொண்டிருந்தார். அவரிடம், நடந்ததை எல்லாம் விவரித்தாள். "நீ தைரியசாலி மட்டுமல்ல. கொடுத்த வாக்கையும் காப் பாற்றி விட்டாய். உள்ளே வந்து ஓய்வு எடுத் துக் கொள். நடந்து நடந்து களைத்துப் போய் இருப்பாய்!" என்று சொன்னார் தகப்பனார்.

**நா**ன் இந்தக் கதையைச் சொல்லி முடித்ததும், சப்பென்றாகிவிட்டது என்




மாணவர்களுக்கு. "என்ன பெரிய தத்துவம் இருக்கிறது இந்தக் கதையில்! மண்டைக் கனம் உள்ள ரத்னபிரபா, முட்டாள்தனமான ஆசிரியர், நம்ப முடியாத திருடன், பொறுப் பற்ற தகப்பனார். இதிலிருந்து நாம் என்ன தெரிந்து கொண்டுவிட முடியும்?" என்றார் கள்.

"பார்த்தீர்களா, இந்தக் கதையை இப் படித்தான் நீங்கள் பார்க்கிறீர்கள். நான் இதை வேறு விதத்தில் பார்க்கிறேன். தைரிய சாலி ரத்னபிரபா, கருணை மனதுள்ள ஆசான், விட்டுக் கொடுத்துவிடும் திருடன், தன் பெண்ணின் வார்த்தைகளுக்கு மதிப் பளித்து நடக்கும் பொறுப்பான தகப்பனார். இவர்களில் யார் பெரியவர்? சொல்லுங் கள்!"

வகுப்பறையில் பெரிய சத்தம். மாணவர்கள் தங்களுக்குள் விவாதம் செய்து கொள்ளத் தொடங்கினார்கள். நான் சிரித்த படி அவர்களையே கவனித்துக் கொண்டி ருந்தேன்.

சிலர் எழுந்திருந்து, "கஷ்டங்கள் இருக் கின்றன என்று தெரிந்தும், தன் மனதை மாற்றிக் கொள்ள விரும்பாத ரத்னபிரபா தான் பெரியவள். அப்பா தடுத்திருக்கிறார், திருடன் பயமுறுத்தி இருக்கிறான், வனத்தில் மிருகங்கள் தொல்லை தருமே என்ற கவலை இருந்திருக்கும்; இருந்தாலும், ஆசானுக்கு குருதட்சிணை கொடுத்தே ஆக வேண்டும் என்பதிலேயே அவள் குறியாக இருந்திருக் கிறாள். நீங்களும் எங்களிடம் இப்படிப் பட்ட குருதட்சிணை எதுவும் கேட்க மாட்டீர்கள் என்று நம்புகிறோம்!" என்ற போது, எல்லோருமே சிரித்தார்கள். நான் பதில் ஏதும் சொல்லவில்லை.

வேறு சில மாணவர்கள் எழுந்திருந்து, "ரத்னபிரபாவுக்கும் அவள் ஆசிரியருக்கும் இடையே ஒரு பிணைப்பு இருப்பது போல, ரத்னபிரபாவுக்கும் அவள் தகப்பனாருக்கும் இடையேயும் ஒரு பிணைப்பு இருக்கிறது. ஆனால் திருடனுக்கோ, இவர்கள் யாருமே சம்பந்தமில்லாதவர்கள். அவன் நகைகளைக் கொள்ளை அடித்துக் கொண்டு போக வில்லை என்கிறபோது, அவன்தான் பெரிய வன்!" என்றார்கள்.

இன்னும் சிலர் எழுந்திருந்து, ஆசிரியர் தான் பெரியவர் என்றனர்.

**ச**த்தமும், விவாதமும் அதிகரிக்கவே நான் தலையிட்டுப் பேச வேண்டியதாயிற்று.

"இந்தக் கதையில் எந்த ஒரு நபரையும் இவர்தான் பெரியவர் என்று சொல்லிவிட முடியாது. அப்படித்தான் ஒட்டு மொத்தமாக இதைப் பார்க்க வேண்டும். அதே போல எந்தப் பிரச்னையையும் நாம் பல கோணங் களில் அணுகி அலசிப் பார்க்கக் கற்றுக் கொள்ள வேண்டும். நாம் எடுக்கும் முடிவுகள் வெவ்வேறாக இருக்கலாம். நாம் இன்னொரு வரைக் குற்றம் - குறை சொல்லுகிறபோது அவருடைய இடத்திலிருந்து பிரச்னையைப் பார்க்க வேண்டும். அப்போதுதான் அவர் ஏன் அப்படி நடந்து கொண்டார் என்பது புரியும். அப்போதுதான் நம்மால் சரியான முடிவு ஒன்றை எடுக்க முடியும்!" என்றேன்.

முழு வகுப்பும் என் பேச்சுக்கு ஆதரவு தந்தது.

(தொடரும்)

# Wanted

## Your Old Furniture

# DEAD OR ALIVE

## Reward

Get the best market value for your Old Sofas, Cots, Dining Sets & Almirahs, irrespective of whatever might be the condition and have it exchanged for Brand New Furniture. At unimaginable prices. And that's not all. Choose from our wide range of Furniture Collections ( Indian & Imported ) at our mega furniture showrooms at Mylapore, Padi & Velachery, measuring more than 20,000 sq.ft.



**Sofa Sets**
Rs. 9,000/- Onwards



**Dining Sets**
Rs. 8,500/- Onwards




**Furniture World**

**Sunday Open**

**Ample Car Parking** | **Easy Instalment Scheme ***

**Free Delivery *** | **Major Credit Cards Accepted ***



**Cots**
Rs. 7,800/- Onwards



**Almirahs** Rs. 4,500/- Onwards

**One of India's Biggest Furniture Showroom**

**Mylapore :** **( 20,000 sq.ft )** New # 139, R H Road, ( Near Sanskrit College ), ( Entrance Brindavan Street ), Ch - 4. **Ph : 2498 2930 / 31 / 2498 3929**

**Padi (Anna Nagar) :** 6, MTH Rd, DABC Bldg., (Opp.to TVS, Padi), Ch-50. **Ph : 26544929 / 5029**

**Velachery :** Paramount Park, 358, Velachery -Tambaram Main Road, ( Next to VijayanagarBus Terminus ), Ch - 42. **Ph : 98410 29293**

* Conditions Apply

* Prices mentioned may not correspond to the product shown.

Cloud 9

# கல்யாண தோசை!

'சென்னையைச் சுற்றி ஒரு ரவுண்டு வந்த போது, 'மாப்பிள்ளை விருந்து', 'ரைஸ் அண்ட் ஸ்பைஸ்', 'கார்டமம்', 'அவியல்', 'ஸ்நாஸீ', 'சைனா டவுன்', 'சாப்பிடவாங்க', 'வாழை இலை', 'சுடச்சுட', 'டிராஃபிக் ஜாம்' என வித்தியாசமான பெயர்களில், உணவகங்கள் கண்ணில் பட்டன.

ஒரு சில ஹோட்டல்களில் நுழைந்து, விசாரித்த போது, ஸ்பெஷல் டிஷ்ஷுடன் சுவையான தகவல்களையும் பரிமாறினார்கள்.

சென்னை, அசோக்நகர் உதயம் தியேட்டர் அருகே உள்ளது 'மாப்பிள்ளை விருந்து' சைவ ஹோட்டல். ''நம்ப வீடுகளிலே மாப்பிள்ளை வந்தாலே தனி மரியாதை தான். அது மாதிரி, எங்க வாடிக்கையாளர்களையும் விசேஷமா சமைச்சு கவனிச்சுக்கறோம்'' என்கிறார்கள் இதன் உரிமையாளர்கள்.




கல்யாண தோசை! மசால், ஆனியன், எள்ளுப்பொடி, கொத்தமல்லி, நெய் என ஐந்து விதமான தோசைகள் அடங்கிய கல்யாண தோசை தருகிறார்கள். விலை இருபதே ரூபாய்தான்!

# மண்சட்டிக் குழம்பும் தங்கக் காசும்!






சென்னை, ஜெமினி மேம்பாலத்துக்கு அருகே, பாம்குரோவுக்கும் கோமளாஸுக்கும் நடுவே இருக்கிறது 'ரைஸ் அண்ட் ஸ்பைஸ்'. இதே பெயரில் சிங்கப்பூரில் பிரபல ரெஸ்டாரண்ட் இருக்கிறது. அதை நடத்தும் பாலசுப்ரமணியம் என்ற தமிழரே, இங்கேயும் கிளை திறந்திருக்கிறார்.

"கொங்கு நாட்டு மண் சட்டிக் குழம்புடன், கொத்தமல்லி மிக்ஸட் வெஜிடபிள் கறி சூப்பர் காம்பினேஷனாக இருக்கும். ஸ்டார்டராக 'வெஜிடபிள் கோல்டு காயின்' தருகிறோம். உடனே அதுக்குள்ளே ஒரு பவுன் தங்கக் காசு இருக்கும்னு நினைச்சுடாதீங்க. காய்கறி எல்லாம் ஸ்டஃப் பண்ணி பொரிச்சு வெள்ளை எள்ளு தூவி, பிரமாதமா இருக்கும்" என்றார் பங்குதாரர் ஜிஎஸ் சக்திபாபு.

இது தவிர, 'இத்தாலியன் கிங்' 'சம்மர் க்வீன்', 'அமெரிக்கன் பனானா பியூட்டி'... இதற்கெல்லாம் கல்லூரி யுவதிகள் ஆசையாக மொய்க்கிறார்களாம். இளம் பெண்கள் விரும்புகிறார்கள் என்றால்... வேறென்ன ஐஸ்க்ரீம்தான்!




## வெஜ் கேஸரோல்; சீசேம் பேபி கார்ன்!

கோட்டூர்புரம், காந்தி மண்டபம் சாலையில் உள்ளது 'ஸ்நாஸீ'. பளிச் சுத்தமும், டீனேஜ் கூட்டமும் நிரம்பிய பெங்காலி ஸ்பெஷல் ஹோட்டல்.

" 'ஸ்நாஸீ' என்ற வார்த்தைக்கு 'நூதனமான' என்று பொருள். இங்கிருக்கும் எல்லா உணவுகளுமே ட்ரெண்டியானவை. அதுதான் இந்தப் பெயர்" என்கிறார் பொது மேலாளர் சுமன் சுவர்ணா.



நார்த் இண்டியன், சைனீஸ், காண்டினெண்டல், தாய் என உணவுப் பிரியர்களுக்கு விதவிதமான தேர்வுகள். குறிப்பாக இளைஞர்களுக்கு... பிரதான சாலையில் இருப்பதால், சில சமயம் கும்பல் அதிகமாகி, டிராபிக்ஜாம் நேருவது உண்டாம்!

கிரிஸ்பி ஃப்ரைட் வெஜ் வித் க்ரீன் சில்லி, தால் மக்கானி, வெஜ் கேஸரோல், சீஸேம் பேபிகார்ன்... இதெல்லாம் தேங்காய்ப் பால் சேர்த்து, மிளகு மணக்கப் பரிமாறுகிறார்கள். எல்லாமே வங்காளி ஸ்டைல்.

## பன்னீர் பஜ்ஜி; சப்போட்டா கேஸரி!

சென்னை, கிரீன்வேஸ் சாலையில் உள்ளது 'அவியல்'.

"கேரள பாணி முகப்புடன், மங்களூர் ஓடுகள் பதிக்கப்பட்டு ஆந்திர மரச் சிற்பங்கள் அலங்கரிக்க, தமிழ்நாட்டு உணவு வகையைப் பரிமாறுவதல், கலந்து கட்டி 'அவியல்' என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது" என்றார் மேற்பார்வையாளர் சத்திய நாராயணா. பிஸிபேளாபாத், வடை கறி முதல் பேல்பூரி, பாப்படி சாட் வரை தென்னிந்திய ருசிகள் அனைத்தும் சுடச்சுட சங்கமம் ஆவதால், ஞாயிற்றுக் கிழமைகளில் கூட்டம் தாளவில்லையாம்!



ஞாயிற்றுக் கிழமை காலை வேளைகளில் ராகி தோசைக்கும், சப்போட்டா பழம் சேர்த்த சீக்கு கேஸரிக்கும் டிமாண்ட் அதிகம்; மாலை நேரத்தில் பன்னீர் பஜ்ஜியும்




கடுபு இட்லியும் தூள் பரத்துமாம்!

- அனு

படங்கள் : ஸ்ரீஹரி



# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்** : மன்மோகன் சிங் போல திடீர் அதிர்ஷ்டம் உண்டு. அரசுப் பணியாளர்கள் மிகுந்த மேன்மை அடைவார்கள். குடும்பத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடும். பூர்வீகச் சொத்து விவகாரங்களில் அனுகூலமான திருப்பங்கள் உண்டு. சுபகாரியங்களில் பங்குகொள்வீர்கள். எடுத்த காரியங்கள் திட்டமிட்டபடி நிறைவேறும். குலதெய்வப் பிரார்த்தனை பலன் தரும்.

**ரிஷபம்** : தேர்தல் அலையில் காணாமல் போன 'எச்' முத்திரை போல, உங்கள் பிரச்னைகளும் மாயமாய் மறையப் போகின்றன. குறிப்பாக உத்தியோகஸ்தர்களுக்கு அலுவலகத்தில் தொடர்ந்து தொல்லை கொடுத்து வந்தவர்கள் தாமாகவே மறைவார்கள். பெண்களுக்கு தெய்வீக வழிபாட்டில் ஆர்வம் உண்டாகும். மாணவர்களுக்கு நல்ல முன்னேற்றமான காலம். சிவ தரிசனம் நன்மை தரும்.

**மிதுனம்** : ஆட்சியாளர்களை ஆட்டம் காண வைத்த காவிக் குடங்கள் போல, உங்கள் ஆரோக்கியத்தை கோள்களின் ஆதிக்கம் ஆட்டம் காண வைத்து விடும். எனவே உடல் நலத்தில் கவனம் தேவை. புதியவர்களிடம் எச்சரிக்கை மிக அவசியம். சுய தொழில் லாபம் தரும். பண நெருக்கடி ஓரளவு குறைந்தாலும், எதிர்பார்த்த அளவுக்கு உதவி வந்து சேராது.

**கடகம்** : எதிரணியில் திரண்ட கூட்டணிக் கட்சிகள் போல, உங்கள் குடும்பத்திலும் ஒற்றுமை நிலவி, புதிய பலம் தரும். சுப மங்களக் காரியங்கள் 'ஜாம் ஜாம்' என்று நிறைவேறும். குருபலம் நிறைந்து இருப்பதால், தொட்டதெல்லாம் பொன்னாகும். எதிர்பாராத பண வரவு வந்து மகிழ்ச்சி தரும். நவக்கிரக சாந்தி, தோஷம் நீக்கும்.

**சிம்மம்** : முலாயம்சிங் யாதவ்வின் கலைந்து போன 'கிங் மேக்கர் கனவு' போல, உங்கள் சுயதொழில் கனவுகளும் கலைந்து போகும். புதிய முயற்சி இப்போது வேண்டாம். பிரபு தனவான்களின் ஆதரவு கிடைத்ததும் தொடங்கலாம். பெண்களுக்கு, திட்டமிட்டபடி காரியங்கள் நிறைவேறும். கலைத்துறைக்காரர்களுக்கு யோகமான காலம். தான தருமம் செய்து வரவும். நல்லதே நடக்கும்!

**கன்னி** : இலேசாகத் தலை துவட்டி விட்டுப் போன புயல் மழை போல, அதிர்ஷ்ட மழை பொழிந்து, உங்களைத் தொப்பலாக நனைக்கும். குடும்பத்தில் அமைதியான சூழ்நிலை ஏற்படும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வரும். பெண்களுக்கு உற்சாகமான வாரம். ரியல் எஸ்டேட் தொழில் அளவான நன்மை தரும். விரோத மனப்பான்மையுடன் இருந்தவர்கள் இணைந்து மகிழ்வார்கள். ஸ்ரீ விஷ்ணு சகஸ்ரநாம பாராயணம் நலமே தரும்.

**துலாம்** : விடுபட்டுப் போன வாக்காளர் பெயர்கள் போல, நீண்ட நாள் மனக் கஷ்டத்திலிருந்து நீங்களும் விடுபடுவீர்கள். இதனாலேயே குடும்பத்தில் அமைதியான சூழ்நிலை உண்டாகும். உத்தியோகஸ்தர்களுக்கும் அருமையான வாரம். பதவி உயர்வு, இடமாற்றம் போன்றவை ஏற்படும். புதிய முயற்சிகள் வெற்றி பெறும். கிரக வழிபாடு நன்மை தரும்.

**விருச்சிகம்** : திடீரென்று தலைமறைவாகி விட்ட ஜக்குபாய் போல, உங்கள் பழைய கடன்கள் காணாமல் போகும். அந்த அளவுக்குச் சில்லறை நடமாட்டம் வெளுத்து வாங்கும். மக்கள் நலனில் அக்கறை அவசியம். எதிர்பாராத இடத்திலிருந்து உதவியும், வெளிநாட்டிலிருந்து நல்ல தகவலும் வந்து சேரும். மாணவர்கள் உழைப்பு வீண் போகாது. விநாயகரை வணங்கினால் விக்னங்கள் அகலும்.

**தனுசு** : ஆள் இளைச்சாலும், அழகாகப் பிழைத்து விட்ட ஜோதிகாவின் மார்க்கெட் போல, உத்தியோகத்தில் சிறு சிறு பிரச்னைகள் உறுத்தினாலும், திட்டமிட்டபடி சாதித்துக் காட்டுவீர்கள். பெண்களின் உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படும். கவனம் தேவை. இரவுப் பயணங்களில் எச்சரிக்கை அவசியம். சட்டம், காவல், இராணுவம் துறையினர் சாதனை படைப்பார்கள்.

**மகரம்** : பாதாளத்தில் போய் புதைக்க வைத்த பங்கு மார்க்கெட் போல, உங்கள் குடும்பப் பிரச்னைகள் மிகவும் வாட்டி எடுத்து விட்டு, பின்பு தானே நல்லபடியாகத் திருப்பம் காணும். குறிப்பாகச் சொத்து விவகாரங்களில் எச்சரிக்கை அவசியம். தாயார் உடல்நலம் கவனம். பெண்களுக்கு சாதாரணமான வாரம். விவசாயிகள் நல்ல பலன் அடைவார்கள். தான தருமம் மூலம் மன அமைதி பெறலாம்.

**கும்பம்** : மிக விரைவில் பறக்கக் காத்திருக்கும் சமையல் எரிவாயு, பெட்ரோல் விலை போல நீங்களும், சுயதொழிலில் எட்டாத இடத்துக்கு உயரப் போகிறீர்கள். பெண்கள் தொட்டதெல்லாம் பொன்னாகும். உத்தியோக சம்பந்தமான பயணங்கள் 'கிளிக்' ஆகும். பொது வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்களின் அந்தஸ்து உயரும்.




**மீனம்** : 'ஜொலிக்குதே ஜொலிக்குதே' ஸ்னேகா போல, நீங்களும் இந்த வாரம் குஷியாட்டம் போட நல்லதொரு சான்ஸ் இருக்கு. குறிப்பா, கல்யாணமாகாதவர்களுக்கு அதற்கான முயற்சிகள் கைகொடுக்க வாய்ப்பிருக்கு. சொத்து விவகாரம் தாமதமாகலாம். தெய்வீகக் காரியங்களில் ஈடுபாடு அதிகரிக்கும். உடன்பிறந்தவர்களால் சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டு, மனக்கிலேசம் உண்டாகலாம். நவக்கிரக வழிபாடு நலம் தரும்.

**மே 26 முதல் ஜூன் 1 வரை**

# சோ எழுதிய மஹாபாரதம் பேசுகிறது

– இரண்டு பாகங்கள்

ரூ. 500/–

## 'சோ'வின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | உண்மையே உன் விலை என்ன | 37.00 |
| 2. | கூவம் நதிக் கரையினிலே - பாகம் - 2 | 45.00 |
| 3. | கூவம் நதிக் கரையினிலே பாகம் - 3 | 27.00 |
| 4. | துக்ளக் படமெடுக்கிறார் | 30.00 |
| 5. | சம்பவாமி யுகே! யுகே! | 30.00 |
| 6. | சாதல் இல்லையேல் காதல் | 41.00 |
| 7. | வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 30.00 |
| 8. | எங்கே பிராமணன்? | 85.00 |
| 9. | துக்ளக் கேள்வி - பதில் - I | 24.00 |
| 10. | துக்ளக் கேள்வி - பதில் - II | 45.00 |
| 11. | சாத்திரம் சொன்னதில்லை | 30.00 |
| 12. | அதிகப்பிரசங்கம் | 32.00 |
| 13. | துக்ளக் தலையங்கங்கள் | 25.00 |
| 14. | யாருக்கும் வெட்கமில்லை | 28.00 |
| 15. | இன்பக் கனா ஒன்று கண்டேன் | 14.00 |
| 16. | இந்தியா எங்கே போகிறது? | 12.00 |
| 17. | மனம் ஒரு குரங்கு | 30.00 |
| 18. | இந்து தர்மம் | 50.00 |
| 19. | காமராஜை சந்தித்தேன் | 33.00 |

## கவிஞர் வாலி இயற்றிய

# புலனடக்கத்தின் பொன்விழா

ஜயேந்திரரின் ஜன்ம சரிதம் - ஜனனம் முதல் ஜகத்குரு வரை

விசிஷ்டாத்வைதியின் பார்வையில்

## அத்வைத மகான்

(ஜெயகாந்தன் முன்னுரையுடன் மிக மிக உயர்தரமான தயாரிப்பு)

ரூ. 100/- மட்டும்

## உலக இலக்கிய வரிசை

தமிழில்: சிவன்

| | | | |
|---|---|---|---|
| 1. | சித்தார்த்தன் | - ஹெர்மன் ஹெஸ் | 35.00 |
| 2. | ஏழை படும் பாடு | - விக்டர் ஹியூகோ | 40.00 |
| 3. | ராபின் ஹூட் | - மேத்யூ ஹூக் | 45.00 |
| 4. | காரமசோவ் சகோதரர்கள் | - தாஸ்தயெவ்ஸ்கி | 35.00 |
| 5. | ராபின்சன் குடும்பம் | - யோஹன் டேவிட் வைஸ் | 32.00 |
| 6. | இலியட் | - ஹோமர் | 45.00 |
| 7. | ஒடிஸி | - ஹோமர் | 30.00 |
| 8. | பிரபு மான்டி கிறிஸ்டோ | - அலெக்ஸாண்டர் டூமாஸ் | 37.00 |
| 9. | டாம்சாயர் | - மார்க் ட்வைன் | 37.00 |
| 10. | அதிசய உலகில் ஆலிஸ் | - கரோல் லூயிஸ் | 45.00 |
| 11. | ராபின்சன் குருசோ | - டேனியல் டீஃபோ | 48.00 |
| 12. | மோபிடிக் | - ஹெர்மன் மெல்வில் | 45.00 |
| 13. | கலிவரின் பயணங்கள் | - ஜோனாதன் ஸ்விஃப்ட் | 40.00 |
| 14. | அன்னாகரெனினா | - லியோ டால்ஸ்டாய் | 35.00 |
| 15. | போரும் அமைதியும் | - லியோ டால்ஸ்டாய் | 32.00 |
| 16. | புதையல் தீவு | - ஆர்.எல். ஸ்டீவென்ஸன் | 42.00 |
| 17. | இழந்த உலகம் | - ஆர்தர் கானன்டாயல் | 32.00 |
| 18. | பிராங்கென்ஸ்டைன் | - மேரி ஷெல்லி | 40.00 |
| 19. | ஹெய்டி | - ஜோஹன்னா ஸ்பைரி | 30.00 |

## பி. ஸ்ரீ. ஆச்சார்யா எழுதிய

| | | |
|---|---|---|
| 1. | ஆழ்வார்கள் வரலாறு (8 தொகுதிகள்) | ரூ. 306.00 |
| 2. | அறுபடை வீடுகள் (6 தொகுதிகள்) | ரூ. 210.00 |
| 3. | திவ்யப் பிரபந்த ஸாரம் | ரூ. 60.00 |

மற்றும்

| | | |
|---|---|---|
| 4. | அருணகிரிநாதரின் வாழ்க்கை வரலாறு | ரூ. 30.00 |
| 5. | கந்த புராணக் கதைகள் | ரூ. 40.00 |
| 6. | நாரதர் கதை | ரூ. 25.00 |
| 7. | நவராத்திரியின் கதைகள் | ரூ. 23.00 |
| 8. | ராஜரிஷி விஸ்வாமித்திரர் | ரூ. 30.00 |
| 9. | தசாவதாரக் கதைகள் | ரூ. 32.00 |

| | | |
|---|---|---|
| 1. | மஹரிஷிகள் வரலாறு – A.V. கைலாசேகரன் | – 65.00 |
| 2. | வேதம் வணங்கும் தெய்வங்கள் | – 62.00 |
| 3. | இந்துமத நன்னெறிகளும் சம்பிரதாயங்களும் – கிருஷ்ணசாமி | – 50.00 |

அன்றாட வாழ்வில் பகவத் கீதையின் பயன்பாட்டை விளக்குவது

**கண்ணன் சொற்படி வாழ்வதெப்படி? ரூ. 50/–**

பேராசிரியர் 'பிலானி' வி. கிருஷ்ணமூர்த்தி



## அல்லயன்ஸ் கம்பெனி

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மயிலாப்பூர்
சென்னை – 600 004. ✆: 24941314

சில வாரங்களுக்கு முன் மூட்டி மூட்டு மாற்று அறுவை சிகிச்சை பற்றி எழுதியிருந்ததைப் பார்த்துவிட்டு, நிறைய நண்பர்கள் விவரம் கேட்டார்கள். திருநெல்வேலியிருந்து கல்கி வாசகர் ஜி. கிருஷ்ணமூர்த்தி (வயது 40) தொலை பேசியில் விசாரிக்கும்போது, 'ஸார்...எனக்கு இந்த வயசி லேயே இடுப்பு மூட்டு வலி வந்துவிட்டது. ஆபரேஷன் செய்து கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆனால் டாக்டர் கள் முடிந்தவரை இடுப்பு மூட்டு அறுவை சிகிச்சையைத் தள்ளிப் போடுவதுதான் நல்லது என்கிறார்கள். வேறு வழியே இல் லையா?'' என்று கேட்டி ருந்தார்.





# மெட்டல் பந்து!

இந்த இடுப்பு மூட்டு வலி இப்போது டயாபடீஸ், கேன்ஸர், இருதய நோய் மாதிரி, படு சாதாரணமாக இளைய வயதினரிடையே வந்துவிட்டது. குறிப்பாக, பெண்கள் இதில் பெரும் பாலும் பாதிப்படை வதில்லை. நடுத்தர வயது ஆண்கள்தான் கலபத்தில் சிக்குகிறார்கள்.

முதலில் இந்த வலி இடுப்பின் கீழ் பாகத்தில் தொடங்கும். நடக்கும் தூரம் படிப்படியாகக் குறையும். பிறகு தூக் கத்தின் போதும் இடுப்பில் வலி உண்டா கும். சிலருக்குக் கால் பிடிப்பு ஏற்படலாம். மெல்ல இடுப்பு மூட்டில் தேய்மானம் நடைபெற ஆரம்பிப்பதால், கால்கள் குட்டையாகிவிடும். ஸ்கூட்டர் ஓட்டுவது கஷ்டமாக இருக்கும். டாய்லெட்டில் உட்கார, வலி உயிர் போகும்.

மேற்சொன்ன உபாதைகளால் இப் போது ஒரு கோடிக்கும் அதிகமான மக்கள் அவதிப்படுகிறார்கள். எப்படி வருகிறது இது? சிலருக்கு சிறு வயதில் ஏற்படுகிற காயம் சரியாக சிகிச்சையில் மறையாமல் இருப்பது, மது அருந்துவது, ஆஸ்துமா இருப்பது (அதற்காக கொடுக் கப்படும் ஸ்டீராய்ட்தான் தோட்டா) தவிர, வழக்கமான மூட்டு வாதம் உட்பட, பரம்பரை வழி வருகிற ஜீன்களும் இடுப்பில் முறுக்கிக் கொள்கின்றன. உடல் எடை அதிகம் உள்ளவர்கள், கால்களை சீரற்ற முறையில் வைத்துக்கொண்டு உட்காரு வது போன்ற சில விஷயங்களை கவனமாகப் பார்த்துக் கொண்டால், இடுப்பு மூட்டு வலி வருவதைத் தவிர்க்க லாம்.

இப்படி பெருமளவு மக்களைப் பாதிக்கும் இடுப்பு மூட்டு வலிக்குப் பதில் என்ன என்பதை, சமீபத்தில் அப்பல்லோவில் சந்தித்த டாக்டர் விஜய் சி போஸ் விளக்கினார்.

பர்மிங்ஹாம் இடுப்பு மூட்டு சீர மைப்பு என்பதுதான் அந்தப் புதிய நவீன அறுவை சிகிச்சை.

இதற்கு முன்பெல்லாம் அறுவை சிகிச்சை என்பது, பாதிக்கப்பட்ட இடுப்பு மூட்டை முழுவதுமாக அகற்றிவிடுவது தான். அது இளைய வயதினராக இருந் தாலும் சரி, முதியவர்களாக இருந்தாலும் சரி. முதியவர்கள் என்றால் பிரச்னை இல்லை. இளைய வயதினருக்கு இந்த அறுவை சிகிச்சை கஷ்டம். காரணம்

வஸந்த் செந்தில்

சிகிச்சைக்குப் பிறகு இடுப்பு வலி நின்று விடும். ஆனால் இடுப்புக்கு அசைவு கிடைக்காது. நடக்க சிரமமாக இருக்கும். நாற்பது வயதில் நடக்க முடியாது. ஆனால் வலி நின்று விட்டது என்றால் எப்படி? அதனால் வயது ஆகும் வரை, அந்த நோயாளிக்கு அறுவை சிகிச்சையைத் தள்ளிப் போடுவது டாக்டர்களுடைய வழக்கம்.

ஆனால் டாக்டர் விஜய் சி போஸ் செய்கிற, புதிய பர்மிங்ஹாம் ஹிப் ரிசர்ஃபேஸிங் என்ற இடுப்பு மூட்டு சீரமைப்பு சிகிச்சையில் இந்த பிரச்னை இல்லை. இந்த சிகிச்சைக்குப் பிறகு வழக்கமாக எல்லா வேலைகளையும் செய்யலாம். ஸ்கூட்டர் ஓட்டலாம். நீந்தலாம். புட்பால் அடிக்கலாம். அவ்வளவு பெரிய வரம்!

அப்படி என்ன செய்யப்படுகிறது இந்த சிகிச்சையில்? இதில் பழைய முறை மாதிரி, இடுப்பு மூட்டு முழு மையாக நீக்கப்படுவதில்லை. அதன் இயற்கையான அமைப்பு மாற்றப்படுவ தில்லை. அச்சு அசலாக ஒரு மெட்டல் பந்தும், அது சிரம மில்லாமல் உருள்வதற்கான குழியும் மூட்டின் இடத்தில் பொருத்தப் படுகிறது. இது இடுப்பு மூட்டின் வேலையை நூறு சதவிகிதம் செய்யக் கூடியதாக வடிவமைக்கப்பட்டிருக்கிறது. பழைய அறுவை சிகிச்சையில் பொருத் தப்படும் பாலிஎத்திலீன், நாளாக நாளாக, வேலையின் அளவைப் பொறுத்து செயலிழக்க ஆரம்பித்து விடும். இந்த பர்மிங்ஹாம் பந்து அப்படி ஆவதில்லை.



**வெங்காய நம்பிக்கை!**

பண்டைய காலத்து எகிப்தியர்களுக்கு வெங்காயத்தின் மேல் ஒரு கண்மூடித்தனமான நம்பிக்கை. தீய, மாய, பேய் சக்திகளை விரட்டும் சக்தி வெங்காயத்திற்கு இருப்பதாக நம்பினர். சத்தியப்பிரமாணம் எடுக்கும் போது, கண்டிப்பாக வெங்காயத்தின் மீது ஒரு கை இருக்குமாம்.

- பார்வதி கந்தசாமி

இந்த சிகிச்சை தொண்ணூற்றியொன்பது சதவிகித வெற்றி தருகிறது. சிகிச்சைக்குப் பிறகு மூட்டு நழுவல்கள் நடப்பதில்லை. எதுவும் செய்யலாம். இந்த மூட்டைப் பொருத்திக் கொண்ட ஒரு விளையாட்டு வீரர், 1998ல் நடந்த உலகக் கோப்பைக்கான பிரான்ஸ் அணியில் இருந்தார். இந்த சிகிச்சை செய்து தன் ஜூடோ வாழ்வுக்குத் திரும்பிய டேவிட் வாக்கர் 'I have my life back again, thanks to the Birmingham resurfacing' என்றார். இந்த மூட்டைப் பொருத்திக் கொண்ட மேலும் சில விளையாட்டு வீரர்கள், லண்டன் மாரத்தானிலும், உலக சீனியர் ஸ்குவாஷ் போட்டியிலும் பங்கேற்றார்கள்.

இந்த ஹிப் ரீ சர்ஃபேஸிங் வித்தையை முதன் முதலில் ஆரம்பித்தவர் ஸர் ஜான் சான்லி என்கிற டாக்டர். ஆனாலும் வெற்றி ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு (அவர் 1960ல் முயற்சித்தார்) லண்டன் பர்மிங் ஹாம் ஆர்தோ மையத்தில் தான் கிடைத்தது. இதன் தாரக மந்திரம் 'metal on metal prosthetic articulation' என்பதுதான்.

இப்போது இதை ஆசியாவிலேயே இரண்டே இரண்டு நபர்கள்தான் செய்கிறார்கள். ஒருவர் ஜப்பானில் இருக்கிறார். இரண்டாமவர் தான் அப்பல்லோவில் சந்தித்த டாக்டர் விஜய் சி போஸ், சென்னை மருத்துவத் துறை எவ்வளவு பெரிய திறமைசாலிகளை வைத்திருக்கிறது என்று பாருங்கள்!

அறுவை சிகிச்சை மூன்று மணி நேரத்தில் முடிந்துவிடும். அடுத்த நாள் நடக்கலாம். மூன்றாவது நாள் வீட்டுக்கு வந்துவிடலாம். மூன்றாவது வாரம் வழக்கமான வேலைகளை ஆரம்பித்து விடலாம்.

செலவு? நீங்கள் நடக்க, ஓட, ஆட, விளையாட, நீந்த, குதிக்க என்று எல்லாமும் செய்ய அனுமதிக்கிற ஒரு மெட்டல் பந்துக்கு, கணக்கா பார்க்கப் போகிறீர்கள்?

ஆனால் 'செலவு மிகமிகக் குறைவானது' என்று டாக்டர் விஜய் சி போஸ் உறுதி கொடுக்கிறார்.

(முற்றும்)

காங்கிரஸ் கேட்பதற்கு முன்பாகவே ஆதரவு தெரிவித்தனர் கம்யூனிஸ்டுகள். முலாயமிடம் பேரம் பேச அவசியமே இன்றிச் செய்தார் சுர்ஜீத். சோனியா 'அன்னியர்' என்கிற எதிர்ப்புணர்வு நாடெங்கும் இருந்த காலகட்டத்தில், அவர் தலைமையிலான அரசு அமைய, பாதை சுலபமாக்கப்பட்டது. கம்யூனிஸ்ட் குழுமக் கட்சிகள் இந்த முடிவை எடுத்தது எந்த அடிப்படையில்..?



• டி.கே. ரங்கராஜன்

• வைகோ



• சி.ஆர். பாஸ்கரன்



• ரகுமான் கான்



# கம்யூனிஸ்டுகள் கவிழ்ப்பார்களா?

"தேர்தல் முடிவு மதச் சார்பற்ற அரசு அமைய ஆதரவாக இருந்தது. அதைப் பலப்படுத்தும் வகையில் செயல்பட வேண்டும் என்று தீர்மானித்தோம்..." என்கிறார் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய குழு உறுப்பினர் டி.கே.ரங்கராஜன்.

''கடந்த நான்கு ஆண்டுகளில் பா.ஜ.க. ஆட்சியில் (அதை என்.டி.ஏ. ஆட்சி என்று சொல்வதே ஏமாற்று வேலை!) தாராளமயமாக்கல் கொள்கையால் இந்திய மக்கள் மேலும் ஏழைகளாகியிருக்கிறார்கள். உணர்வுபூர்வமான பிரச்னைகளில் கவனத்தைத் திசை திருப்பி, முக்கியமான துறைகளை உதாசீனப்படுத்தினார்கள்.

"ஒரு பக்கம் பசுவதை தடைச்சட்டம் கொண்டுவர முயன்றார்கள்; மறுபுறம் ஏராளமாகப் பசுத்தோல் ஏற்றுமதி ஆகிக் கொண்டிருந்தது... இது போன்ற முரண்பாடுகள், மத அடிப்படை வாதம் - இவற்றைக் கொள்கை மட்டத்திலேயே எதிர்த்த எங்களுக்கு, மதச்சார்பற்ற ஆட்சியே முக்கியமாகத் தோன்றியதால், உடனடியாக காங்கிரஸுக்கு ஆதரவு தெரிவித்தோம்..." என்கிறார் ரங்கராஜன்.

காங்கிரஸுக்குப் பெரும்பான்மை கிடைத்தால், ஆதரவு தெரிவிக்கும் திட்டம், தேர்தலுக்கு முன்பே இருந்ததா...? என்றால், "இல்லை" என்கிறார் ரங்கராஜன். "திட்டமிட்டு எடுக்கப்பட்ட முடிவு அல்ல இது: சூழ்நிலையை உத்தேசித்து எடுக்கப்பட்டது."

'ஆட்சியில் பங்கேற்காமல், இவ்வாறு நிபந்தனையற்ற ஆதரவு தரும் கொள்கைப் பிடிப்பு நிலைத்திருக்குமா...?' என்று கேட்டால், அதற்கும் பதில் சொல்கிறார் ரங்கராஜன் :

"ஆட்சியில் பங்கேற்கிற அளவுக்கு எங்களுக்குள் எல்லா விஷயங்களிலும் சித்தாந்த ஒருமைப்பாடு கிடையாதே! சர்வதேச பொருளாதாரக் கொள்கையோடு இந்திய பொருளாதாரக் கொள்கையை இணைத்துச் செயல்படுவதால்தான், மக்களுக்கு இழப்புகளும் கஷ்டங்களும் வருகின்றன. மனித நேயத்தைக் கைவிடாமல் பொருளாதார சீர்திருத்தங்கள் நிகழ்த்தப் போவதாக, புதிய பிரதமர் சொல்லியிருப்பது சற்று ஆறுதலாக இருக்கிறது. அரசியல் காரணங்களுக்காக, நிச்சயமாக நாங்கள்

ஆதரவை விலக்கிக் கொள்ள மாட்டோம். அதே சமயத்தில் எங்கள் ஆதரவு ஒரு blank cheque அல்ல. நாடாளுமன்றத்தில் எதிர்க் கட்சிப் பொறுப்பை பா.ஜ.க.விடம் தாரை வார்த்துவிடாமல், அவசியமான கட்டங்களில், ஆக்கபூர்வமான எதிர்க் கட்சியாகவும் நாங்கள் செயல்படுவோம்."

ஒரு கட்டத்தில் காங்கிரஸ், மென்மையான ஹிந்துத்வ கொள்கை (soft hindutva) பக்கம் சற்று சரிந்ததை, (மாநிலத் தேர்தல்கள்) நினைவூட்டினால், ரங்கராஜன் கேரளத்துத் தேர்தல் முடிவுகளைச் சுட்டிக் காட்டுகிறார் : "அங்கே முஸ்லிம் லீக், காங்கிரஸ் கூட்டணியில் இடம் பெற்றபோதிலும் அது வெற்றி பெறவில்லையே, ஏன்...? மதச் சார்பின்மையிலிருந்து கொஞ்சம் பிறழ்ந்தாலும் மக்களே பதிலடி கொடுத்துவிடுவார்கள்! ஆகவே காங்கிரஸ் அவ்வாறு பிறழாது என நம்புகிறோம்."

• பி.சி. கணேசன்

மற்ற கட்சியினரைக் காட்டிலும் கம்யூனிஸ்டுகளை மிகவும் நம்பலாம் என்பது அரசியல் விமர்சகர் பி.சி. கணேசனின் கருத்து.

அவர்களது ஒரே நோக்கம், பொதுத்துறை நிறுவனங்களை, குறிப்பாக, லாபம் வரும் நிறுவனங்களை விற்கக் கூடாது; அதன் பங்குகளை அடிமாட்டு விலைக்கு விற்கக் கூடாது, தொழிலாளர்கள், ஊழியர்கள் பாதிக்கப்படக் கூடாது. விவசாயிகளுக்குத் தக்க நிவாரணம் கிடைக்க வேண்டும் என்பதுதான். இந்த நோக்கங்களுக்கு காங்கிரஸ் எதிரியல்ல, எனவே, எந்தப் பிரச்னையும் வராது. லாபம் ஈட்டும் பொதுத்துறை நிறுவனங்களை விற்கும் ஆபத்தான முயற்சியில், பா.ஜ.க. அரசு இறங்கியது. சில நிறுவனங்களை விற்று, அரசின் வருவாய் கணக்கில் வைத்து பட்ஜெட் பற்றாக்குறையை ஈடுசெய்யப் பயன்படுத்தியது. இது அநியாயம், அப்பட்டமான தவறு.

உலகம் முழுவதும் உள்ள கம்யூனிஸ்டுகள், மாறிவரும் பொருளாதாரச் சூழலுக்கு ஏற்ப தங்களையும் மாற்றிக் கொண்டு வருகிறார்கள். 'உலக வர்த்தக அமைப்பில், 'எங்களையும் சேர்த்துக் கொள்ளுங்கள்' என்று வற்புறுத்திச் சேர்ந்துள்ளது சீனா. மேற்கு வங்கத்தில் நஷ்டத்தில் ஓடிய பொதுத் துறை நிறுவனங்களை, கம்யூனிஸ்டு அரசே மூடிவிட்டது. அந்த மாநில அரசு தாராளமயமாக்கலுக்கு கதவைத் திறந்திருக்கிறது. இது காலத்தின் கட்டாயம். எனவே, கம்யூனிஸ்டுகளின் ஆதரவுக்கு அபாயமில்லை. காங்கிரஸும் சீர்திருத்த வேகத்தில் ஏழை எளியவர்களைப் புறக்கணிக்காது.

காங்கிரஸ் கூட்டணியில் இடம் பெறும் கட்சியினரும், கம்யூனிஸ்டுகளின் ஆதரவை நம்பிக்கையோடு வரவேற்கிறார்கள்.

"மதவாத எதிர்ப்பு என்பது எங்கள் முக்கிய இலக்காக இருந்து வந்திருக்கிறது. கம்யூனிஸ்டுகளின் ஆதரவு இதை பலப்படுத்தவே செய்யும். இந்த அரசு, மதவாத சக்திகளுக்குச் சிம்ம சொப்பனமாக அமையும்" என்கிறார் பா.ம.க. துணைப் பொதுச் செயலாளர் பி.ஆர். பாஸ்கரன்.

"பயணம் தொடரும்" என்பது தி.மு.க. உயர்மட்டக் குழு உறுப்பினர் ரஹ்மான் கானின் நம்பிக்கை. "கடந்த கூட்டணியில் வந்தது போல், அடிப்படைக் கொள்கைகளுக்கு நிச்சயமாக எந்த ஆபத்தும் வராது. மனித நேயம், மத நல்லிணக்கம் என்கிற விஷயங்களில், கூட்டணிக் கட்சிகளோ, வெளியிலிருந்து ஆதரிக்கும் கம்யூனிஸ்டுகளோ முரண்படாத வரையில், ஆட்சிக்கு ஏது அபாயம்!"

"இந்தக் கூட்டணி அரசுக்கு ஆதரவு கொடுப்பதில் ம.தி.மு.க.வுக்கு எந்த நெருடலும் இல்லை" என்கிறார் வைகோ. "இந்த அணியை ஒருங்கிணைத்ததே மதச்சார்பற்ற மத நல்லிணக்கம் என்கிற அடிநாதம் தான்." என்கிறார் அவர்.

சந்திப்பு : **ப்ரியன்**
படம் : **ராஜன்**



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்




72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214


## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 16 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் **ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர்** ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா — நல்லாசியுடன் — A.ராஜூபக்கிரிசாமி MSc., MEd.,

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

# தேர்தலில் யார் போட்டது தப்புக் கணக்கு...?

● எம்.ஏ. அஜீஸ், வானூர்

*? தேர்தலில் யார் போட்டது பயங்கர தப்புக் கணக்கு...?*

! நாற்பது தொகுதிகளிலும் வெற்றி பெறுவோம் என்று சொன்ன ஜனநாயக முற்போக்குக் கூட்டணி தவிர, வேறு யார் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது சரியான கணக்குப் போட்டார்கள்? யாருமே இல்லையே!

● ஸ்ரீ தர்ஷிணி, பாபநாசம்

*? கழுத்தை அறுத்துக் கொலை செய்வதை ரிலே செய்வது எந்த வகையில் ஏற்புடையது?*

! அவ்வாறு கொடூரமாகக் கொலை செய்யும் காட்டுமிராண்டித்தனத்தைக் காட்டிலும் கொடுமையானது.

● எல்.எம். மங்கை, திருவண்ணாமலை

*? மாதவன் தொப்பி 3600, குஷ்பு ஜாக்கெட் 1440, திரிஷா ஆடை 1800, சினேகா டீ ஷர்ட் 1886 என ஏலம் போயிற்றாமே! சினிமா மோக மாயை மாறும் காலம் வருமா?*



! நல்ல காரியத்துக்குத் (முதியோர் இல்லத்துக்கு) தான் என்ற போதிலும், கேவலம். ஆயிரம், இரண்டாயிரத்துக்கு ஏலம் விடத் தேவையில்லை. அந்தத் தொகையை, சம்பந்தப்பட்டவர்கள் நன்கொடையாகவே தந்துவிடலாமே!

● கே.ஆர். தேவேந்திரன், வேலூர்

*? இரட்டை இலைக்குத்தான் வோட்டுப் போட்டேன் என்று ரஜினி கூறியதைத் துணிச்சல் எனலாமா? பிதற்றல் எனலாமா?*



● 'நகரி, நகரு!''

! அவலை நினைத்துக் கொண்டு, உரலை இடிக்கும் தடுமாற்றம் எனலாம்.

● பொன்விழி, அன்னூர்

*? ஈராக்கில் அமெரிக்க ராணுவ வீரர்கள் செய்யும் அக்கிரமத்தைத் தட்டிக் கேட்க ஆள் இல்லையா...?*

! ஏன் இல்லை! அமெரிக்க மக்கள் இருக்கிறார்களே! ஜார்ஜ் புஷ் அடுத்த தேர்தலில் வீட்டுக்கு அனுப்பப்படுவார். பிரிட்டனில் டோனியும் கூட.

● சே. வள்ளி, மோரகனியனூர் ★

*? இந்தியா ஒரு நாட்டுடன் விளையாடித் தோற்றால் கோபப்படும் மனிதன், ஏன் ஐந்தாண்டுகள் ஏமாற்றும் அரசியல்வாதியிடம் எதுவும் கேட்பதில்லை?*

! கோபப்பட்டு, அதை முறையாக வெளிப்படுத்தியும் இருக்கிறானே மேடம்!

● டி. லக்ஷ்மணன், கொணவட்டம்

*? தி.மு.க. கூட்டணியின் அமோக வெற்றிக்கு யார் யார் காரணகர்த்தாக்கள்?*

! முதல் காரண கர்த்தா, தமிழக முதல்வர்; இரண்டாவது, தி.மு.க. தலைவரின் கூட்டணி, பிரசாரம் - இவற்றில் அவரது அனுபவ சாமர்த்தியம். மூன்றாவது, சரியாக வேட்டுப் போட்டு வாக்களித்த மக்கள்.

● ஆர்.அஜிதா, கம்பம்

*? நகரி சட்டமன்றத் தேர்தலில் ரோஜா தோற்றுப் போய்விட்டாரே...?*

! தொகுதி மக்கள் அவரை வாக்குச் சாவடிக்குள்ளேயே நுழைய விடவில்லையே... நாடாளுமன்றத்துக்குள்ளே

எப்படி அனுமதிப்பார்கள்!

● மு. சுந்தரம், சிலமலை

? பாக்தாத் சிறையில் ஈராக்கியர்களை நிர்வாணமாக்கிக் கொடுமைப்படுத்தும் அமெரிக்க இராணுவத்தின் மனித நேயமற்ற செயலுக்கு, கல்கி வாசகர்கள் எவ்வாறு எதிர்ப்புத் தெரிவிக்கலாம்?

! அமெரிக்க அதிபருக்கு ஈ-மெயில் அனுப்பலாம்.

● எஸ். கருணையானந்தம், உசிலம்பட்டி

? ஓர் உளவியல் கேள்வி; மகன் தனிக் குடித்தனம் சென்றால் சந்தோஷப்படும்

● ஏலம் - கேவலம்!

ரூ.100 பரிசு பெறுபவர் :
அ. நரேந்திரன், எச்.52, எல்லீஸ் நகர்,
மதுரை - 625 010

ரூ.50 பரிசு பெறுபவர் :
சே. வள்ளி, தென் கடப்பந்தாங்கல்,
மோரகனியனூர் அஞ்சல்,
(வழி) சேத்பட் - 606 801.
திருவண்ணாமலை மாவட்டம்.

பெண்கள், தன் மகன் அப்படிச் செய்தால் மட்டும் அழுது புலம்புவானேன்?

! பாதுகாப்பின்மை என்பது பிறருக்கு நேர்ந்தால் தெரியாது. தனக்கு நேர்ந்தால் தான் உணர முடியும். அதிலும் ஒரே மகன் என்றால், பயம் அதிகமாக இருக்கும்.

● மாயா சேகர், மும்பை - 90

? "மகத்து மங்கை ஜகத்தில் இல்லை" என 'மகம்' நக்ஷத்திரக்காரர்களின் மகிமையைச் சொல்வார்கள். நம் முதல்வரை இதற்கு உதாரணம் காட்டலாம்தானே? நமக்குப் பெருமை தானே?

! நிச்சயமாக உதாரணம் சொல்லலாம். ஆனால், பெருமைக்குரிய உதாரணம் அல்ல!

● சித்ரா கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்

? 'குடிநீர்ப் பிரச்சனைக்குக் காரணம், ஆள்பவர்கள் அல்ல; ஆண்டவன்தான் என்கிறாரே இல. கணேசன்?








! பாவம்! ஆள்பவர்களுடைய அசட்டுத்தனத்துக்கும், அசிரத்தைக்கும் சேர்த்து, ஆண்டவன் பழியைச் சுமக்க வேண்டியிருக்கு... பழி ஓரிடம், பாவம் ஓரிடம் என்கிறதுக்கு, ஆண்டவன் கூட விதிவிலக்கில்லை. பாருங்க!

● **தமிழருவி, குடந்தை**

***? வாக்காளர் பட்டியலில் வாக்காளர்களின் பெயர்கள் விடப்பட்டிருப்பது குறித்து, தேர்தல் கமிஷனிடம் ஜெ. புகார் அளிக்கப் போகிறாராமே...?***

! "அ.தி.மு.க. அனுதாபிகளின் பெயர்கள்தாம் நீக்கப்பட்டுள்ளன. இது எதிர்க்கட்சிகளின் சதி" என்று முதல்வர் சொன்னது சரியான ஜோக். இது எவ்வாறு சாத்தியம்? பட்டியலின் பொறுப்பு மாநகரங்களில் மாநகராட்சியிடமும், மற்ற இடங்களில் மாவட்ட ஆட்சியரிடமும் அல்லவா இருக்கிறது! அவை மாநில அரசு மேற்பார்வையில்தானே இயங்குகின்றன?

● **அ. நரேந்திரன், மதுரை** ❐

***? ஈராக்கில் எப்போது அமைதி ஏற்படும்...?***

! முதலில் அமெரிக்க ஆக்கிரமிப்பு வாபஸ் பெறப்பட வேண்டும். அப்படியும் ஈராக்கில் முஸ்லிம் பிரிவினரிடையே கலகம் மூண்டு அடங்க வேண்டும். அதன் பிறகு மெய்யான ஜனநாயகம் மலர வேண்டும்... ஆக, அமைதி இப்போதைக்கு இல்லை.

# நகைச்சுவை நாயனார்!

ஒரு மலையாள டி.வி. சேனல், கேரள முதல்வரிடம், பொதுமக்கள் டெலிபோன் மூலம் கேள்வி கேட்கும் நிகழ்ச்சியை ஒளிபரப்பியது. குருவாயூரிலிருந்து ஒருவர் "இங்கே முனிசிபாலிடி ஒழுங்காய் பணிபுரிவதில்லை. ஊரெல்லாம் ஒரே குப்பை" என்று புகார் கூற, முதலமைச்சர் "உங்கள் ஊர் கிருஷ்ணனிடமே இதை சொல்ல வேண்டியதுதானே?" என்றார். நேயர், "எந்த கிருஷ்ணன்?" என்று கேட்க, "அதுதான் குருவாயூர் கோவிலில் வீற்றிருக்கிறாரே அந்தக் கிருஷ்ணன்" என்று நகைச்சுவையாகச் சொன்னார். இப்படி நகைச்சுவை உணர்வு மிகுந்தவர் அண்மையில் மறைந்த கேரள முதல்வர் ஈ.கே. நாயனார்.



இவர் தமது பொது வாழ்க்கையை ஆரம்பித்தது காங்கிரஸ் கட்சியில்தான் என்பது பலருக்குத் தெரியாது. கம்யூனிஸ்ட் கட்சியில் சாதாரண தோழராக ஆரம்பித்து, ஆட்சி மன்றக் குழுவில் இடம் பெறும் அளவுக்கு உயர்ந்தவர். மூன்று முறை பதினோரு வருடங்கள் கேரள முதல்வராக இருந்திருக்கிறார்.

கேரளாவின் காங்கிரஸ் அரசு, அரசியல் மறந்து, நாயனார் மறைவுக்கு விடுமுறை விட்டது குறிப்பிடத்தக்கது.

- **மானஸா**

# அரவிந்த அமுதம்

மனிதனிலிருந்து அதிமனிதன் தோன்றப் போகிறான். பரிணாமத்தின் அடுத்த கட்டம் இதுதான்... மனிதனிடம் உள்ள குறைபாடுகள் அதிமனிதனிடம் இரா... மரணம் என்னும் விதி மாறிவிடும். பசி, தாகம், பாலுணர்ச்சி முதலியவைகளும் மாறும்... உடல் ஜடமயமாக இராமல், ஒளிமயமாக மாறும். இயற்கையின் இந்த எதிர்காலத் திட்டத்தை பகவான் ஸ்ரீ அரவிந்தர் யோக திருஷ்டியினால் கண்டார். ஆனால் இது நிகழ கோடானுகோடி ஆண்டுகள் ஆகலாம். இதை துரிதப்படுத்துவது ஸ்ரீ அரவிந்தரின் யோகமாகும். இதை எப்படித் துரிதப்படுத்துவது? அதற்கு அதிமனம் என்னும் சக்தியை, பூமிக்குக் கொண்டு வர வேண்டும். இதைத்தான் தமது வாழ்நாளில் சாதித்தார்.

*( நீரத்பரன் எழுதி 'அது ஒரு பொற்காலம்' என்ற மொழி பெயர்ப்பு நூலின் முன்னுரையில் விஜயா சங்கரநாராயணன்).*

வண்டிக்காரன் தன் சாட்டையை ஒரு சொடுக்குச் சொடுக்கினான்: குதிரைக்கு உற்சாகம் பீறிட்டது. குதிரை குபீரெனத் துள்ளிப் பாயத் தொடங்கியது. வண்டியில் அமர்ந்திருந்த அரவிந்தர் திகைப்புடன் வீற்றிருந்தார். அவர் இவ்வளவு வேகமாகக் குதிரை வண்டி போய்ப் பார்த்ததே இல்லை வாயு வேகம், மனோ



வேகம் என்பார்களே! அதுபோல் என்ன வேகம் இந்த வேகம்!

பரோடா தெருக்கள் மின்னல்போல் பளிச் பளிச் எனப் பின்னால் பறந்து கொண்டிருந்தன. வழியிலிருந்த மக்கள் பதறி விலகி ஓடினார்கள். எல்லோர் கண்களிலும் மிரட்சி.

'ஏ வண்டிக்காரா! எதற்கு இத்தனை அவசரம்! கொஞ்சம் நிதானமாகப் போ!' சொல்ல நினைத்தார். சொல் வரவில்லை. நாக்கை யாரோ கட்டி விட்டாற்போல் இருந்தது. வண்டியின் வேகத்தால் விளைந்த திகைப்பால், நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும். அல்லது 'உன்னை முழுவதுமாக நான் பொறுப்பில் எடுத்துக் கொண்டிருக்கிறபோது நீ எதற்கு உன்னைப் பற்றிக் கவலை கொள்கிறாய்?' என்று இறைவன் தான் நாக்கைக் கட்டிவிட்டானோ!

'தெய்வமே! ஏதோ பெரும் அபாயம் நேரப் போகிறது. குதிரை தறிகெட்டுப் பாய்கிறதே! வண்டிக்காரனின் கட்டுப்பாட்டிலிருந்து வண்டி விடுபட்டுவிட்டது. வண்டி எந்தக் கணத்திலும் குடை சாயலாம். எங்காவது சரிவில் உருண்டு விடலாம். நாளை என்னைப் பற்றிய அஞ்சலிக் குறிப்பு ஏதாவது பத்திரிகையில் வெளியாகலாம்.

என் தந்தை அதிர்ச்சியில் காலமானார். நான் விபத்தில் காலமாகப் போகிறேன். சுதந்திர இந்தியாவைப் பார்க்க விரும்பினேன். அதைப் பாராமலே என் மரணம் நிகழப் போகிறது. இனி என்ன? நடப்பது நடக்கட்டும்!' ஸ்ரீஅரவிந்தர் தியானத்தில் ஆழ்ந்தார். அப்போதுதான் அந்த விந்தையான அகக் காட்சியைக் கண்டார்.

# கடவுள் என்னும் கருணைக் கடல்...

## திருப்பூர் கிருஷ்ணன்

அரவிந்தரின் இதயம் என்னும் அரவிந்தத்தில் வீற்றிருந்த பரமன், துள்ளி எழுந்தான். உடல் கூட்டை விட்டு விருட்டென்று வெளி வந்தான். இதயக் கோயிலின் மூலவர், இப்போது உற்சவ மூர்த்தியாக வெளியே புறப்பட்டுச் செல்லும் அதிசயக் காட்சி! அரவிந்தர் ஆச்சரியத்தோடு தம்மிடம் நிகழ்ந்த விந்தையைத் தாமே பார்த்துக் கொண்டிருந்தார்.

குதிரையின் கடிவாளத்தைப் பாய்ந்து இறுகப் பற்றினான் பரமன். சடக்கென இழுத்து நிறுத்தினான். குதிரை தூக்கிய கால்களைத் தூக்கியவாறு அப்படியே நிலைகுத்தி நின்றது! எல்லா ஜீவன்களின் சூட்சுமக்



கயிறும், கடவுளின் திருக்கரத்தில்தான் அல்லவா! நிகழவிருந்த பேரபாயம் உடனடியாகத் தடுக்கப்பட்டுவிட்டது. பாரதப் போரில் பார்த்தனுக்குச் சாரதியாகத் தேரோட்டிய பரமனுக்குக் குதிரையைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவது, பழகிப்போன செயல் தானே! மறுபடியும் பரமன் மந்தகாசம் புரிந்தவாறே, அரவிந்த இதயத்தில் வந்து அருள்பொங்க அமர்ந்து கொண்டான். உற்சவர் மீண்டும் மூலவரானார். கவிழவிருந்த கப்பலிருந்து அவரை வேறு கப்பலுக்கு மாற்றி அவரது உயிரைக் காத்த இறைச் சக்தி, மறுபடி அவரைக் காப்பாற்றிவிட்டது. பரமன் அருளில் திளைத்த பரவசத்தில் அரவிந்தரின் விழிகள் பனித்தன.

கடவுள் தம் உள்ளிருந்து எழுந்த இந்த வித்தியாசமான அனுபவம், அரவிந்தரது முக்கியமான இரண்டாவது ஆன்மிக அனுபவம். இங்கிலாந்திலிருந்து வந்து பரோடாவில் கால் வைத்தபோது ஏற்பட்ட பேரமைதி அனுபவத்தைவிட, இது இன்னும் மகத்தானது. 'தம்மைப் பற்றித் தாம் கவலை கொள்வது அபத்தமானது. கடவுள் தக்க தருணத்தில் தம்மை ஓடோடி வந்து காப்பார், ஒரு போதும் கைவிட்டு விட மாட்டார்!' என்ற அடிமனத் தன்னுறுதியை, இந்த அனுபவம் அவருள் ஏற்படுத்தியிருக்க வேண்டும்.

இதுபோன்ற ஒரு சம்பவம் பரமஹம்சர் வரலாற்றிலும் பதிவாகியிருக்கிறது. அவரின் உள்ளே குடியிருந்த பாவபுருஷனை வெளியேற்றி, இறைவன் அவனை அழித்த நிகழ்ச்சி. பஞ்சவடியில் வீற்றிருந்தார் பரமஹம்சர். பல்வேறு கடும் ஆன்மிக சாதனைகளால் உடல் எரிச்சலுற்றிருந்தது. அப்போது அவர் உடலிலிருந்து ஒரு மனிதன் வெளியேறினான். கறுப்பு நிறம், சிவந்த விழிகள், அச்சமூட்டும் விகாரமான தோற்றம். கள் குடித்தவன் போல் தள்ளாடி நடக்க ஆரம்பித்தான். அடுத்த கணம் பரமஹம்சர் உடலிலிருந்து இறைவன் வெளிப்பட்டார். காவியுடை, திரிசூலம் தாங்கிய கம்பீரத் தோற்றம். பாவ புருஷனைத் தம் சூலாயுதத்தால் உக்கிரமாகத் தாக்கிக் கொன்றுவிட்டார். இறைவன் அந்தச் செயலைச் செய்து முடித்த பின், பரமஹம்சரின் உடல் எரிச்சல் தணிந்தது.

அ ரு



தோஷமுள்ளவரிடம் அதை எடுத்துக் காட்ட வேண்டுமானால் நமக்குப் பூர்ண யோக்கியதை இருக்க வேண்டும். நம்மிடமே ஏராளமான தோஷங்களை வைத்துக் கொண்டு இன்னொருத்தருக்கு உபதேசம் செய்தால் அது பிரயோஜனப்படாது. சில சமயங்களில் நாம் சொல்வதாலேயே அவர்கள் முன்னைவிட வீம்பாகத் தங்கள் தவற்றை வெளிப்படச் செய்யவும்

யோக சக்தியின் மேல் அரவிந்தருக்கு நம்பிக்கை ஏற்பட்டது எப்போது? பூரண யோகத்தால் இந்திய சுதந்திரத்தைக் கூடப் பெற்றுவிடலாம், யோகத்தின் மூலமாக சுதந்திரப் போராட்டத்திற்கு உத்வேகம் கொடுக்கலாம் என்று ஸ்ரீ அரவிந்தர் நினைத்தது உண்மைதானா? அலிபூர் சிறையில் அடைக்கப்பட்ட அரவிந்தர் விடுதலையான பின், புதுவைக்குச் சென்று யோக சாதனைகளில் ஈடுபட்டதில் இத்தகைய நோக்கமும் உண்டா? சரியாக அரவிந்தரின் ஜன்ம தினமான ஆகஸ்ட் பதினைந்தாம் தேதியன்று சுதந்திரம் கிடைத்ததே, அந்தப் பொருத்தத்தின் பின்னணி என்ன?

யோக நெறிகளில் அவருக்கு நம்பிக்கை உண்டானது, ஒரு நிதரிசனமான சம்பவத்தின் மூலம். அரவிந்தரின் தம்பி பரீன் கடுமையான காய்ச்சலால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். எத்தனையோ மருந்து மாத்திரைகள் சாப்பிட்டும் குணமாகாத காய்ச்சல். நோய்க்கும், மருந்துகளுக்கும் இடையேயான கடும் போராட்டத்தில் தொடர்ந்து நோய்தான் ஜெயித்துக் கொண்டிருந்தது. இனி என்ன ஆகும்? அரவிந்தர், தம்பியின் வாழ்வு குறித்துக் கவலை கொண்டிருந்த காலம் அது. அப்போது தற்செயலாக ஒரு நாக சன்னியாசியைச் சந்தித்தார். தம்பியின் உடல் சீர்கேடு குறித்து அவரிடம் தெரிவித்தார்.

# ாக்கு

தொடங்கலாம். 'நமக்கு யோக்கியதை இருக்கிறது. ஸ்தானம் இருக்கிறது. நம் வார்த்தை எடுபடும்' என்று நிச்சயமானாலே பிறருக்கு உபதேசிக்கலாம்.

ஒருவரது நல்ல அம்சத்தைக் கொண்டாடுவதால் அவருக்கு மேலும் உற்சாகம் உண்டாகிறது. இந்தக் குணங்களை விருத்தி செய்து கொள்கிறார். ஆனாலும் ஒருவரைப் புகழுவதிலும் நமக்குக் கட்டுப்பாடு இருக்க வேண்டும் ஒரேயடியாக ஸ்தோத்திரம் செய்து ஒருவரை அகங்காரத்துக்கு ஆளாக்கி விடக்கூடாது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

---

ஒரு குவளை தண்ணீர் கொண்டுவரச் சொன்னார் அந்த சன்னியாசி. கையில் ஒரு சிறிய கத்தியை எடுத்தார். ஒரு மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே, கத்தியால் குவளை நீரைக் குறுக்காக ஒரு கீறு கீறினார். பின் ஆறுதல் பொங்கும் முறுவலுடன், தண்ணீரைப் பரீனுக்குப் பருகக் கொடுத்தார். நீரைப் பருகின மறுகணம்... மறுகணம் என்றால் மறுகணமே... என்ன ஆச்சரியம்! படீரென்று காய்ச்சல் விட்டு விட்டது. ஒரே கணத்தில் இந்த அற்புதம் நிகழ்ந்தது. பல நாள் மருந்துகளால் குணமாகாத கடும் நோயிலிருந்து, உடனடி நிவாரணம்! இது எதனால்? அந்த நாக சன்னியாசியின் யோக ஆற்றலால். சன்னியாசி சென்ற பிறகும், யோக சக்தி குறித்த சிந்தனைகள் அரவிந்தர் மனத்தில் சுழன்று கொண்டிருந்தன. ஆலயங்களில் தரப்படும் மந்திர தீர்த்தம், குடங்களில் நிரப்பி ஜெபம் செய்து பின் தெளிக்கப்படும் புனித நீர்... ஆன்மிக விஞ்ஞானத்தின் அடிப்படைகளை ஆராயத் தொடங்கியது அரவிந்தரது மனம்.

பிரம்மானந்தரின் சீடர் ஒருவர் பரோடாவில் இருந்தார். அவர் தொழிலால் ஓர் இஞ்சினியர். பெயர் தேவதார். அவரிடம் தான் அரவிந்தர் யோகத்தைப் பற்றிய தொடக்கப் பாடங்களைக் கற்றுக் கொண்டார். ஆரம்பக் காலத்தில் தீவிரமாகப் பிராணாயாமம் செய்வதை மட்டும் தான் யோகமாகக் கைக்கொண்டார். ஒரு நாளைக்கு, சுமார் ஆறு மணி நேரம் பிராணாயாமத்தில் ஈடுபட்ட காலங்கள் இருந்தன. அதனால் சில உடனடிப் பயன்கள் ஏற்படத் தொடங்கின. அவரைச் சுற்றி ஒரு வகையான மின்சக்தியை அவரால் உணர முடிந்தது. முக்கியமாக, கவிதை அவரிடமிருந்து கொட்ட ஆரம்பித்தது. உரைநடை புதிய உத்வேகம் கொண்டது. தங்கு தடையில்லாத சொற்பெருக்காய் அசாதாரண வேகத்தில் ஜிலுஜிலுவென்று தன்னிடமிருந்து பிரவகித்த எழுத்தை அவரால் நிறுத்த இயலவில்லை. அவர் அடிமனத்திலிருந்து தத்துவக் கவிதைகள் பொங்கிப் பெருக்கெடுத்தன. மாநிறமாக இருந்த அவரது தோல், மழமழப்பாகவும் சிவப்பாகவும் மாறலாயிற்று. உமிழ்நீரில் ஒரு வித்தியாசத்தை உணர்ந்தார். அது தித்திக்கத் தொடங்கியது. ஒல்லியாக இருந்த உடல், சதைபோட ஆரம்பித்து.

ஒருமுறை நர்மதை ஆற்றங்கரையில் உள்ள சாந்தோட் என்ற சிறிய ஊருக்குப் போனார் அரவிந்தர். அது ஒரு யாத்திரைத் தலம். அங்கே ஓர் ஆசிரமத்தில், சுவாமி பிரம்மானந்தர் வாழ்ந்து வந்தார். அவருக்கு நானூறு வயது என்று சொன்னவர்கள் உண்டு. அது எப்படியானாலும், அவர் மிக வயதானவர் என்பதில் சந்தேகமில்லை. நரைத்த தலை மட்டும் தான் வயதுக்குச் சாட்சி. மற்றபடி இருபது வயது இளைஞர் போல்தான் இருப்பார். இளைஞர்களை விட வேகமாக நடப்பார். அவரைச் சந்தித்த பின், அரவிந்தர் வாழ்க்கைப் போக்கில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. சக்தி தாசரான மகாகவி பாரதியாரைப் போலவே, அரவிந்தர் தேவி உபாசகரானார். சுத்த சைவ உணவை உட்கொண்டு தேவியை கடும் மன ஒருமைப்பாட்டுடன் வழிபடலானார். பல மணி நேரங்கள் தனிமையில் தியானமும் தவமும். அதுவே அவர் வாழ்வு. ஒருமுறை அரவிந்தர் தீவிர தவத்தில் ஈடுபட்டிருந்த அறைக்கு, ஆவிகளுடன் பேச உதவும் ஆவிப் பலகையை எடுத்துக் கொண்டு உள்ளே போனார் அரவிந்தரின் தம்பி பரீந்திரகுமார்...

(அமுதம் பெருகும்)

# வாங்கம்மா டெய்ஸி!



"நான் சென்னைக்கு வரும் போதெல்லாம் ஸ்பென்ஸர் பிளாஸாவில் இருக்கும் குக்கி கார்னர் கண்டிப்பாகப் போவேன். மேலும் நான் ஒரு சாக்லேட் பைத்தியம். ஐஸ்க்ரீம், பேஸ்ட்ரீஸ், கேக், பிஸ்கட்... என சகலத்திலும் சாக்லேட் இருந்தா போதும்... என்னை யாராலும் கண்ட்ரோல் பண்ணவே முடியாது..." சொல்லி விட்டு, 'ஓ'வெனச் சிரிக்கிறார் பெங்களூர் சூப்பர் மாடல் டெய்ஸி!

சமீபத்தில் கன்னடத்தில் வெளியான 'பிம்பா'வில் டெய்ஸியின் நடிப்புக்கு ஏகப் பாராட்டு. அம்மணி சூப்பர் மூடில் இருக்கிறார்.

டெய்ஸியின் டெய்லி டயட் என்ன?

"காலை எழுந்ததும் ஒரு லிட்டர் வாட்டர். பிறகு ஒரு கிளாஸ் பாலில் முட்டையடித்து, அதைக் கபளீகரம் செய்து விட்டு லைட்டாக ப்ரேக் ஃபாஸ்ட். மதிய உணவிலும் சாலட், காய்கறிகள் அதிகம் எடுப்பேன். ஆனால் இரவு, வெறும் பழங்கள்தான். ஒரு நாளைக்கு லிட்டர் லிட்டராக வாட்டர் குடிப்பேன்..." செப்புகிறார் டெய்ஸி! ஏகப்பட்ட விளம்பரங்களில் நடித்துள்ள டெய்ஸியின் கவனம், தற்சமயம் திரைப் படங்கள் மீது! வாங்கம்மா, சிம்ரன் இடம் காலியாக இருக்கிறது!

- எல்.எஸ்

# உற்சாகமூட்டும்
# உன்னத காபி – சிக்கரி கலவை
# புதிய பேக்கில்



ஜோஸப்®
காபி

காபி : 55%
சிக்கரி : 45%

JOSEPH
Rising Sun
COFFEE CHICORY BLEND
50g




காபி
பெரிய படைப்பு

யோ காபி : 16, தெற்கு மாட வீதி, மைலாப்பூர், சென்னை – 600 004 Ph : 2494 1557, 2461 0132
ஜோசப் காபி : 164, W. B. ரோடு, திருச்சி – 620 002 Ph : 2708255

Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358/05 - US * Registered as a Newspaper in Srilanka



# காய்கனிக்கு ஜே!

தோசை, பஜ்ஜி என ஆயில்பாத் எடுத்துக் கொண்ட ஹெவி உணவையே சாப்பிட்டு அலுத்துப் போனவர்களும், வித்தியாசமான ஆரோக்கிய உணவு சாப்பிட நினைப்பவர்களும் 'கிருஷ்ணா ஸ்வீட்ஸ்' சாலட் பூஃபேக்குதான் போயாகணும்.

பசியைக் கிளப்பும் ருசியான சூப்பில் ஆரம்பிக்கலாம்.







தக்காளி, பாதாம், பச்சைப் பட்டாணி, காலிஃப்ளவர் என நாளுக்கொரு சூப்! அதைத் தொடர்ந்து புத்தம் புதிய காய்கறி, கனிகளின் சாலட் அணி வரிசை. ரஷ்யன் சாலட், ப்ரோக்கோலி சாலட், நார்மண்டி சாலட், பீஸ் அண்ட் பொடாடோ சாலட் என விதவிதமான ருசிகளில்... ஜீரா ரைஸ், பாஸ்தா ரைஸ், மிண்ட் ரைஸ் என தினமும் ஒரு சாதம். அது தவிர தயிர் சாதம். கடைசியாக சுத்தமான பழச்சாறு! நட்சத்திர ஓட்டல்களில் சுமார் முந்நூறு ரூபாய்க்குத் தரப்படும் இந்த சாலட் பூஃபேயை, எழுபதே ரூபாயில் அதே சுவையுடன், அதே தரத்துடன் தருகிறார்கள். ஒரு முறை சாப்பிட்டுப் பாருங்க... ஃப்ரெஷ்ஷான காய்கனிக்கு ஜே போடுவீங்க!

- ஏ.எஸ்.

படங்கள்: யோகா

புரண்டு, தளும்பி, தளும்பி
எழும்பியது மனதினுள்
கவிதைத் துளி
அறியாமலே, அர்த்த சாமத்தில்
ஆயாசம் மறந்து
எழுத நினைக்கையில்
உழுதன பேனாக்கள்
காகிதங்களை.
உதறி, உதறி...
துவண்டன கைகள்
தோற்றது மனது 'மை'களிடம்
ஏனோ...
நினைவில் வந்தது
இறகுகளும், மைக்கூடுகளும்
இலகுவானதை இழந்திருக்கிறோமோ...?
எழுதப்படாததால், ஏங்கி
எங்கோ மறைந்தன
கவிதைத் துளிகள்.
சாம்பாரில் உப்பிட்டேனா
ஞாபக அவஸ்தையினூடே
சட்டென்று மீண்டும் உயிர்த்தன
உறைந்திருந்த அவ்வரிகள்.
அவசரமாய்த் தேடிய பேனா
அழகான வெண்ணிற முயலாய்
படபடக்கும் காகிதங்களுடன்
கவிதை மனது விரிகையில்
கருகும் சாம்பாரின் வாசனையில்
துவண்டு, தோற்று ஒதுங்கி
எட்டிப் பார்த்தன
எழுதிய வரிகளுடனே
எழுதப்படாத வார்த்தைகள்.



# கவனம்

ஜி. விஜய பத்மா



# INDIAN INSTITUTE OF CATERING TECHNOLOGY & HOTEL MANAGEMENT

(Recognised By The Government of TamilNadu)
No: 22, Shivaji Nagar, Near Membalam,
**THANJAVUR - 1.**
Tel : (04362) 232567 / 278776 E. Mail : IICTHM@hotmail.com.

ADMISSION NOTICE FOR 12th BATCH - 2004 - 2005

| NO | COURSES OFFERED | ELIGIBILITY |
|---|---|---|
| 1. | Combined Three Years Course in Hotel Management & Catering Technology | 10th Std / S.S.L.C / Matriculation (H.Sc / 10 + 2 Std. Preferable) |
| 2. | B.Sc., Hotel Management and Catering Technology* (3 years) | H.Sc./ +2 / Matriculation |
| 3. | M.Sc., Hotel Management and Catering Science* (2 years) | Any Degree |
| 4. | PGDCHM- P.G.Diploma in Catering and Hotel Management* (1 year) | Any Degree |
| 5. | Diploma in Hotel Management* (1 year) | H.Sc./ +2 / Matriculation |
| 6. | Diploma in Catering Technology* (3 years) | H.Sc./ +2 / Matriculation |
| 7. | One Year Craft Courses (1 Year)<br>a. Food & Beverage Production<br>b. Food & Beverage Service<br>c. House keeping<br>d. Bakery & Confectionery | 10th Std / S.S.L.C/ Matriculation |
| 8. | Front Office Operation (1 Year) | H.Sc./ +2 / Matriculation |

*(At Bharath College Campus)

**A Decade of Educational Excellence with Better Placement**

NO DONATION! NO CAPITATION!! 100% PLACEMENT!!!

## SPECIAL FEATURES

+ 1993 - 1994 TO 2003-2004 All Students are Placed As Regular Posting & Management Trainee Positions In Various Prestigious Star Hotel + Training & Placement In Leading Star Category Hotels. + Training & Placement In India & Abroad. + 100% Employment Opportunity Assured. + We have 100% Placement Records For Our All Previous Batch Students Since 1993. + Special Tuition For French & Hindi Languages. + Special Computer Training for Hotel Management Packages.

**HOSTEL FACILITY AVAILABLE FOR MEN & WOMEN SEPARATELY**

Prospectus and Application forms can be obtained by sending a Demand Draft of Rs. 100/- drawn in Favour of the DIRECTOR, IICTHM, Payable At THANJAVUR

For **Admission and other Details Contact :** The Director / Principal

N. GANESAN, M.Com., M.Phil., (Ph.D.,) Director

**A JOB IN YOUR HAND JOIN IMMEDIATELY**

## வட்டமேஜை

# விசேஷ பேட்டி செம லூட்டி!

✉ மனதை ஈரமாக்கியது, 'தவிக்கும் குழந்தைகள், தடுமாறும் அமைப்பு' கட்டுரை. இளகிய மனது எதையும் ஏற்கும் என்பதற்குப் புருஷோத்தமன் - ரஜினி உதாரணங்கள்.

மேட்டுத்திருக்காம் புலியூர்,
க. குழந்தைவேல்,

✉ அமையவிருக்கும் புதிய அரசுக்குத் தலையங்கம் சரியான வழிகாட்டுதல். அரசு அமைப்போருக்கும், எதிரணியினருக்கும் தத்தம் தார்மிகக் கடமைகளை உணர்த்தும் உயரிய வழி முறைகளைப் படம் பிடித்திருந்தது தலையங்கம்.

பணையூர்,
செ.சுப்பிரமணியன்

✉ நடிகர் சூர்யாவின் 'பேரழகன்' நடிப்பைப் பட பாராட்டி, 'சூப்பர் ஸ்டார்' என்று பட்டம் கொடுத்திருப்பது நியாயம்தான். ஆனால் ஒரிஜினல் சூப்பர் ஸ்டார் இதனைப் படித்துவிட்டு கொதித்துவிடப் போகிறார்.

பெங்களூர் - 21,
ப.மூர்த்தி

✉ 'ஆர்ட் ஆஃப் ஸ்லீப்பிங்!' ஜோக்ஸ் அனைத்தும் நயமான கிண்டல்! பாவம் அந்த 'பாஸ்!

போடி நாயக்கனூர்,
எஸ்.எம்.பாலசுப்ரமண்ணியன்

✉ பள்ளிக்கூடம் என்பதும் கோவில் தானே... அதனால்தான் சரஸ்வதிக்குத் தனியாய் கோவில் கட்டுவதில்லை!" என்ற வரிகளை 'கோவில்' சிறுகதையில் படித்தபோது, என்னையும் அறியாமல் கைகளைத் தட்டினேன்.

புதூர்,
கோவலன்

✉ டி.ஆரிடம் நடந்தது விஷேச பேட்டி! வித்யனின் கற்பனை செமலூட்டி!

திசையன்விளை,
ஆர்.ஜி.பாலன்

✉ தண்ணீர் லாரி வரவில்லையென்றாலும் 'கேனி'ல் அடைக்கப்பட்ட குடிநீரை வாங்கிக் கொள்ளலாம் என எண்ணும் மக்களுக்கு, 'தண்ணீர் கிடைத்தாலும் அது குடிக்கத் தகுதியானது தானா என்ற சந்தேகத்தையும், பயத்தையும் ஏற்படுத்திவிட்டது, 'துளி துளி உயிர்த்துளி!'

சென்னை - 28,
காஞ்சனா ராதாகிருஷ்ணன்

✉ 'சுறுசுறு'வென்றிருந்த அருணா ராயின் பேட்டி, பாதியில் நின்று போனது போலிருந்தது.

பேராவூரணி,
விஜி





• உ.வே.சாமிநாதய்யர்

"தகப்பனார் ஊரில் இல்லாத காலம். தாயார் என்ன சமையல் செய்வதென்று தாத்தாவைக் கேட்டு வரும்படி என்னை அனுப்புவார். எனக்கு ஆறு பிராயம் இருக்கும். அவர், ''சமையலா...?'' என்று நீட்டுவார். ஆற அமர யோசித்துவிட்டு, ''கத்தரிக்காய் இருக்கா?'' என்று கேட்பார். அதற்கு ஒரு தடவை ஓடிப்போய்க் கேட்டு வந்து பதில் சொல்வேன். ''பிஞ்சா இருக்கா?'' என்று அடுத்த கேள்வி. அதற்கும் ஒருமுறை ஓடிப்போய் வருவேன்.

"அந்தக் கத்தரிக்காயைச் சுட்டுட்டு..." சிறிது நிறுத்துவார். "தெரிகிறதா? அதை நன்னா சுட்டுத் தாளிச்சுக் கொட்டி... தாளிச்சுக் கொட்டறப்போ உளுத்தம் பருப்பைப் போட்டுடுவா. அதைப் போடச் சொல்லாதே. எண்ணெயை அதிகமா விடச் சொல்லாதே!"

அப்போது மேலெழும் கோபத்தால் சிறிது நேரம் மௌனம் ஏற்படும். மறுபடி ஆரம்பிப்பார்:

"அதை அம்மியிலே வச்சு நன்னா ஒட்டி, ஒட்டி, ஒட்டி, ஒட்டி அரைக்கணும்."

அந்த 'ஒட்டி' சொல்லை அவர் சொல்லும்போது, அவர் கைகளின் அபிநயத்தைப் பார்த்தால், உண்மையாகவே கத்தரிக்காய்த் துவையலை அரைப்பவர்கள் கூட அவ்வளவு சிரத்தை கொள்ள மாட்டார்களென்று தோன்றும்.

# கத்தரிக்காயைச்

**சமையல், சாப்பாடு பற்றி நமது பழைய எழுத்தாளர்கள் எப்படி வர்ணித்திருக்கிறார்கள் பார்ப்போமா?**

**'என் சரித்திரம்' — உ.வே.சாமிநாதய்யர்**



ஒரு பெரிய மனிதர் வீட்டில் சாப்பிடப் போயிருந்தேன். சமையல் எல்லாம் எனக்காக ரொம்ப சவிஸ்தாரமாய்த்தான் செய்திருந்தார்கள். ஆனால் நெய் மாத்திரம் சகிக்க முடியாமல் இருந்தது. மாம்பலத்தில் சாப்பிட்டால், மயிலாப்பூரில் அதன் துர்கந்தம் அடிக்கும். எனக்கு நெய் கொஞ்சம் வாசனை வந்தால் கூடக் குடலைக் குழப்பும். என் வீட்டில், வெளியே எங்கும் நெய் வாங்கு

கிறதில்லை. வீட்டிலே பாலைத் தோய்த்துக் குழப்பி நெய்யாக்கி, அதைத்தான் நான் போட்டுக் கொள்கிறது. சிநேகிதர் வீட்டில் நெய் பரிமாற வருகிறபோது, "நெய் மாத்திரம் எனக்கு வேண்டாம். நெய் போட்டுக் கொள்கிற வழக்கமில்லை" என்றேன்.

"அது என்ன வழக்கம் சார்? நெய்யில்லாமல் கூட ஒரு சாப்பாடு உண்டா? அது என்ன சாப்பாடு? பேஷான நெய்!

# ட்டுட்டு...

வெண்ணெயாக வாங்கிக் காய்ச்சுகிறது. போட்டுக் கொண்டு பாருங்கள்'' என்று சம்சாரத்தைப் பரிமாறச் சொன்னார்.

அந்தக் கஷ்டத்தை என்ன சொல்வேன்! பருப்பையும் சாம்பாரையும் போட்டுக் கலந்தால் கூட, அவற்றிற்கு மேல் தூக்கியடித்தது நெய்யின் 'வாசனை'. எனக்கா வயிற்றைப் புரட்டுகிறது. சோற்றை ஒதுக்கிவிட முடியுமா?...



**'ஹாஸ்யக் கதைகள்' - எஸ்.வி.வி.**



• தேவன்

**சி**றிது தயங்கினதும் ஷாரீப், "சாப்பிடுங்கள் தைரியமாக! இந்த ஊருக்கு மிகவும் பிரசித்தமான பட்சணம் - கோரி நங்கா என்று பெயர்" என்று உற்சாகப்படுத்தினார்.

"இதில் என்ன என்ன சேர்ந்திருக்கிறது?" என்று கேட்டேன்.

கிழவிக்கு ஆத்திரம்.

"இது கோரி நங்கா



இல்லை. கோலக் என்கிற தின்பண்டம். தாராளமாக நீங்கள் சாப்பிடலாம்!'' என்றான்.

"கொழுக்கட்டை மாதிரியோ? உம்... அதை எப்படிச் செய்கிறீர்கள்?"

கிழவி சொல்லச் சொல்ல, ஷாரீப் அர்த்தம் சொல்லி வந்தான்.

"வாழைப்பழம் (ரைட்!) பலாப்பழம் (ரைட்!) சர்க்கரை வள்ளிக்கிழங்கு (ரைட்!) பரங்கிப் பழம்(ரைட்!) பச்சைப் பட்டாணிக் கடலை (ரைட்!) தேங்காய்த் துருவல் (ரைட்!) ஏலக்காய் (ரைட்!) ஆஹா.. எத்தனை சுகம்! நாக்கே, சற்றுப் பொறு...! கோழிக் குஞ்சு (ராங்!)" தட்டைத் திருப்பிக் கொடுத்துவிட்டேன்.

**ஐந்து நாடுகளில் அறுபது நாள்: 'தேவன்'**

தொகுப்பு : **எஸ்.வி.என்.**



"உங்களுக்குப் பிடிக்காத உணவு ஐட்டம் எது?" என்று சில வி.ஐ.பி.களிடம் வினாவினோம்.

# "ஆளை விடுங்க சாமி!"

**காமெடி டைம் அர்ச்சனா!**

எனக்கு முட்டைக்கோஸ், பீன்ஸ் இதில் எது செய்தாலும் சுத்தமாகப் பிடிக்காது. சிறு வயதிலிருந்தே அப்படிப் பழகிவிட்டேன்.

**கிரேஸி மோகன் :**

எனக்கு எந்த ஐட்டமானாலும் 'காரம்' பிடிக்காது. காரம் சற்றுக் கூடிவிட்டாலும் காவேரியில் தண்ணி வருதோ இல்லியோ, என் கண்களில் தண்ணி வந்துவிடும். உணவில் மட்டும்தான் என்றில்லை. அகங்காரம், ஓவரான அலங்காரம் கூடப் பிடிக்காது. அவ்வளவு ஏன், தப்புப் பண்ணிவிட்டு, பண்ணுகிற பரிகாரம் கூடப் பிடிக்காது.

**கர்நாடக இசைக் கலைஞர் அருணா சாய்ராம் :**

சாப்பாடு என்பது அன்னபூரணி என்று சொல்லி வளர்க்கப்பட்டவள் நான். எதையும் பிடிக்கலை என்று சொல்லக் கூடாது. சாப்பிடாமல் எந்திரிக்கக் கூடாது என்று சொல்லி எல்லாவற்றையும் சாப்பிட என்னைப் பழக்கப்படுத்திவிட்டார்கள். எனவே எனக்குப் பிடிக்காது என்று எதுவுமில்லை. கட்டாயமாக பிடிக்காததைச் சொல்ல வேண்டுமென்றால், நான்-வெஜ் ஐட்டங்களைச் சொல்லலாம்.

**ராஜ் டீ.வி. செய்தி வாசிப்பாளர் தேவி சுதாகர் :**

எனக்குப் பிடிக்காதது கஞ்சி. சத்துமாவு ஓட்ஸ், கேழ்வரகு என எந்தக் கஞ்சியும் எனக்குப் பிடிக்காது. காலையில் சாப்பிட்டால் உடம்புக்கு நல்லது என்று சொல்வார்கள். ஆனால் எனக்கு உவ்வே!

**டைரக்டர் வஸந்த் :**

எண்ணெயில் செய்கிற பஜ்ஜி, போண்டா ஐட்டங்களைக் கண்டாலே அலர்ஜிதான். உடல் எடை ஏறாமல் இருக்க இதுதான் ரொம்ப உதவியாக இருக்கிறது.

**நல்லி குப்புசாமி செட்டியார் :**

எனக்கு 'மஷ்ரூம்' ஐட்டங்கள் என்றால் பிடிக்காது. எவ்வளவுதான் சுவையாக அதைச் சமைத்தாலும், வேறு ஏதாவது செய்தாலும், காளான் சாப்பிடுவதை மட்டும் என்னால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை.

**மல்லிகா பத்ரிநாத் :**

உங்கள் கேள்வியே ஆட்சேபணைக்குரியது. பிடிக்காது என்று ஒருவர் எதையாவது சொன்னால், அதைப் பிடிக்கிறாற்போல சமைத்துத் தரவில்லை என்றுதான் நான் சொல்லுவேன். சமைக்கிற விதத்தில் சமைத்தால், எல்லாருக்குமே எல்லாமே சாப்பிடப் பிடிக்கும்.

அப்படிப் போடுங்க!

**சாயா சிங் :**

"பிட்ஸா பிட்ஸான்னு பைத்தியம் பிடிச்ச மாதிரி எல்லோரும் அலையறாங்க! நம்ம ஆனியன் ஊத்தப்பத்திலே காய்கறி கட் பண்ணிப் போட்டு, கொஞ்சம் பன்னீர்பட்டர் தடவி, முக்கால் வேக்காட்டுலே சாப்பிட்டால், இந்தப் பிசுபிசு பிட்ஸா எம்மாத்திரம்?" என்று மூச்சிரைத்தவர், எனக்கு ஆகாத அயிட்டம் பொங்கல் என்றார். "சிலபேர் ரொம்ப கம்பல் பண்ண ஆரம்பிச்சுடுவாங்க. அந்த மாதிரி நேரத்துல 'ஆளை விடுங்க சாமி'ன்னு எஸ்கேப்தான்."

- மௌலி

4

அண்ணாமலை பெயரேடுகளைப் புரட்டிப் பார்க்கத் தொடங்கினான். கையிருப்பையும், தனித்தனி மருந்து நிறுவனங்களின் பெயரேடுகளில் உள்ள பற்றினையும், சோதனை செய்து கொண்டே வந்தான். மனக் கணக்கு சுழன்றது. இத்தனைக் கையிருப்பிற்கு இவ்வளவு வட்டி, இவ்வளவு முன்னிருப்புத் தொகை, இவ்வளவு லாபம் என மூளை கணக்குப் போட்டுக்கொண்டே வந்தது. கணக்குப் பிள்ளை கை, கால் பதற, இளைய செட்டியார் ஏசி விடுவாரோ என நடுங்கியபடி நின்றார். அண்ணாமலை பக்கங்களைப் புரட்டும் முன்பே கணக்குப் பிள்ளை காட்டிய அவசரம், சந்தேகப் படுத்தியது.

"என்னது ரத்னம் இது?"

"எதுங்கய்யா?"

"இந்தக் கம்பெனிக்குப் பற்றே கிடையாது. இருந்தாலும் தள்ளி விடக் கூடிய சிறிய அளவு தொகைதான். ஆனால் இவர்களுடைய ஒரு குறிப்பிட்ட காய்ச்சல், தலைவலி மருந்து இருப்பு எண்ணிக்கையில் அதிகமா இருக்கே."

கணக்குப் பிள்ளைக்கு உடனே பேச்சு வரவில்லை. விஷயம் தெளிவாகப் புரிந்தது. இப்படி நேரடியாகக் கேள்வி வரும் என எதிர்பார்க்கவில்லை. கைக்குட்டையை எடுத்து முன் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டார்.

"தெரியலீங்க."

"செக் புஸ்தகத்தையும், பாங்க் பாஸ் புஸ்தகத்தையும் எடுத்துக்கிட்டு வாங்க."

நிலைமை விபரீதமாகி வருவதை கணக்குப் பிள்ளை உணர்ந்தார். தன் வரையில் கத்தி பாயாமல் இருந்தால் நல்லது. பொங்கலுக்கு மூன்று நாள் விடுப்பும், இரண்டு மாத போனசும் கிடைக்கும். அதற்கு வில்லங்கம் வராமல் இருக்க வேண்டும்.

கணக்குப் பிள்ளை பாங்க் கணக்குப் புத்தகத்தையும், செக் புத்தகத்தையும் நீட்டினார். குறிப்பிட்ட தேதி செக் புத்தகத்தின் கவுண்டர் ஃபாயிலைத் தேடினார்.

"இது கதிரேசன் கையெழுத்து தானே?"

"ஆமாம்"

"கூப்பிடுங்க கதிரேசனை."

கதிரேசன் கல்லாவில் அமர்ந்து, பில்லுக்குப் பணம் வாங்கிப் போட்டுக் கொண்டிருந்தான். கல்லுக்கட்டியில் பெரிய மருந்து கடை என்றால், அது வள்ளி மெடிக்கல்ஸ்தான். இரண்டு கடைகளை வாடகைக்கு எடுத்து ஐம்பது வருடங்களுக்கு முன்னால் தொடங்கப்பட்டு, கடைகளும் சொந்தமாகி, அடுத்தடுத்து இடங்களை வாங்கி ஒரு வரிசை முழுவதும் டாக்டர் டிஸ்பன்ஸரிக்கும், பிற கட்டடங்களை வாடகைக்கு விடும் அளவிற்கு வளர்ந்து விட்டது. இருபத்திநாலு மணி நேரமும் விற்பனை உண்டு என்பதை விளம்பரப்படுத்திய நிறுவனம். வியாபாரத் தந்திரமாய் அவர்கள் கிளைகள் உள்ள எல்லா ஊர்களிலும் மருத்துவர்களுக்கு இலவசமாக மருந்துச் சீட்டுப் புத்தகங்களை அழகான வடிவமைப்பில் அச்சடித்துக் கொடுத்திருப்பதால், ஒரு கலப விளம்பரத்தை அவை பெற்றுத் தந்தன. எனவே இருபத்திநாலு மணி நேர சேவை என்பதை விட, இருபத்திநாலு மணி நேரம் வாடிக்கையாளர்களின் முற்றுகை என்பதானது.

"அய்யரே! கடையைக் கவனி. சின்னண்ணே கூப்பிடுறாங்க. இந்தா வாரேன்" என்று கடையின் பின்புறக் கதவைத் திறந்தபடி உள்ளே சென்றான்.

காரைக்குடியில் உள்ள மூன்று கடைகளையும் மொத்தமாக நிர்வாகம் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டால், மொத்தமாக கணினி மயமாக்க வேண்டும் என்பதை அண்ணாமலையிடம் சொல்ல வேண்டும். ஸெர்வர், சிஸ்டம், பிரிண்டர் எல்லாம் சேர்த்து, ஒரு கடைக்கு எழுபத்தையாயிரம் ரூபாய்க்கு மேல் செலவாகாது என தாமரை உறுதி அளித்திருக்கிறாள். ஒரு முழு மருந்துக் கடைக்குத் தேவையான ஸிஸ்டத்தை, தானே தனியாய் வடிவமைத்துத் தருவதாகச் சொல்லி இருக்கிறாள். தாமரையைப் பற்றிய நினைவு எழுந்ததுமே, பனிபடர்ந்த மலை முகடுகளில் நடந்து செல்வதைப் போல்

# வலம்புரி

## சத்தியப்ரியன்



ஆகிவிடுகிறது.

"என்னண்ணே?" செக் புத்தகமும் கையு மாக இருந்த அண்ணாமலையின் அருகில் போய் நின்றான்.

"போன மாசம் பதினைந்தாம் தேதி ப்ராஸ்ப்பிரின் கம்பெனிக்குப் பைசா செட்டில் பண்ணியது யார்?"

நாகப்பன் முகம் நினைவில் எழுந்தது. கம்பெனிக்காரர்கள் ஸ்பான்ஸர்ஷிப் மூலம், சென்னையில் ஒரு குறிப்பிட நடிகை பிரதான இடம் பெறும் நட்சத்திர இரவுக்கு நாகப்பனுக்கு அழைப்பு விடுத்ததும், இரண்டு நாட்கள் அவன் பொய்க்காரணங் கள் கூறிவிட்டு சென்னைக்குச் சென்றதும், மீண்டும் வந்ததும் ப்ராஸ்பரின் நிறுவனத் தின் மொத்தப் பற்றையும் ஒரே செக்கில் பட்டுவாடா செய்யச் சொன்னதும், நினை வில் எழுந்தது. செக் புத்தகத்தில் தொகை யைப் பூர்த்தி செய்து, அந்த நிறுவனத்தின் மண்டல மேலாளரிடம் செக் தாளைக் கொடுத்தது கதிரேசன்தான். நாகப்பன் சொன்னால் செய்து விடவேண்டும். எதிர்க் கேள்வி கேட்கக் கூடாது. யோசனைகள் தெரிவிக்கக் கூடாது. உடனே அவன் கதிரேசனின் பிறப்பைப் பற்றிய இழிவினை ஆயுதமாகப் பிரயோகித்து விடுவான்.

"கேக்கறேனில்ல பங்காளி! சொல்லு!



செக்கை ஃபில்அப் பண்ணியது நீ தானே?"
"ஆமாம்"
"ப்ராஸ்ப்பிரின் ப்ளஸ்ஸுக்கு ஒட்டம் இல்லவே இல்லை என்பது சாதாரணக் குடிமகனுக்குக் கூட தெரிஞ்ச விஷயம். சரக்கை வாபஸ் அனுப்பிட்டு பற்றை நேர் செஞ்சிருக்கோணும். செய்யாம சரக்கு தேங்கிக் கிடக்கு. ஒரு லட்ச ரூபாய்க்கு மேலான சரக்கு. ஏன் இப்படி ஆச்சு?"
கதிரேசன் பதில் சொல்லவில்லை.
"யார் செய்யச் சொன்னது?"
அதற்கும் அவன் வாய் திறக்கவில்லை.
"இந்த மாசம் இருபத்தஞ்சு தேதி ஆயிடுச்சு. போன மாதம் நடந்த விஷயம் இது. இதுவரைக்கும் என் பார்வைக்கு வரலை. இவனா பெயரேட்டைப் புரட்டிப் பார்க்கிறப்பப் பார்த்துக்கட்டுமேன்னு இருந்துட்டீங்க. சொல்லு! யாரு செய்யச் சொன்னது?"
"யாரு செய்யச் சொன்னா என்ணண்ணே? சரக்கு சரியில்லைன்னு கம்பெனிக்காரனுக்குத் தெரிஞ்சிருச்சு. நாம பெரிய மனசு பண்ணி பைசா செட்டில் பண்ணிட்டோம். பழையபடி அவங்க ஒரிஜினல் தலைவலி மருந்து பக்கம் கவனம் செலுத்தும் பொழுது, நமக்குன்னு சிறப்புச் சலுகை கொடுப்பாங்க. இல்லியா?"
"நீ யாருக்காக பயப்படற?" என்றான் அண்ணாமலை.
கதிரேசன் பேசாதிருந்தான்.
"சொல்லு! இது கூட்டு வியாபாரம். அழகப்பனுக்கு ஒரு பங்கு. ஆத்தாவுக்கு ஒரு பங்கு. வளவுல பெரியப்பாவுக்கு ஒரு பங்கு இருக்கு. நாம நினைக்கிற மாதிரி வியாபாரம் பண்ணி நல்லதனமா முடிஞ்சிச்சன்னா, லாபத்தை மட்டும் மத்தவுக பார்ப்பாங்க. வில்லங்கமாச்சு, ஆயிரம் கேள்வி கேப்பாங்க. இன்னமே இப்படி தனிப்பட்ட கூட்டாளி முடிவு எடுக்கக் கூடாதுங்கறதுக்குத்தான் கேக்கிறேன். யாரு உன்னை செய்யச் சொன்னது?"

கடைக் கதவு திறக்கும் அரவம் கேட்டதும் இருவரும் திரும்பிப் பார்த்தனர். கடையில் வேலை செய்யும் ராமச்சந்திரனின் தலை தெரிந்தது.
"என்ன அய்யிரே?" என்றான் அண்ணாமலை.
'ஸ்மித்க்ளைன் கம்பெனி ஏரியா மானேஜர் வந்திருக்காரு. ஆர்டர் எடுக்க. உள்ள அனுப்பட்டுமா?"
"ரெண்டு நிமிஷம் பொறுத்து அனுப்பு."
அண்ணாமலை மீண்டும் கதிரேசனிடம் கேட்டார்.
"யாரு செய்யச் சொன்னாகன்னு பயப்படாமச் சொல்லு! நம்ம ஃபர்ம் நல்லா இருக்கோணுங்கிறதுக்காகக் கேக்கிறேன். சொல்லு! நாகப்பனா?"
"ஆமாம்."
கதவை ஒட்டிய மேசைக்கு அடியில் இழுப்பறையில் தேடுவதுபோல பாவனை செய்து கொண்டிருந்த ராமச்சந்திரன் எழுந்தான்.
"அய்யிரு! நீ இன்னமா கடைக்குப் போவல? என்ன தேடுற?"
"குறிப்புப் புத்தகமய்யா! அவுக பழைய ஆர்டர் எவ்வளவுன்னு பார்க்கோணும்."
ராமச்சந்திரன் வெளியேறினான்.
"நாகப்பனுக்கு நீ ஏன் பயப்படுற?"
"கண்ட மேனிக்கு ஏசிப்புடுறாருண்ணே."
கதிரேசனின் கண் கலங்கி விட்டது. "இதை அவுக கிட்ட கேட்டுப்புடாதீங்கண்ணே. என்னை மேலும் சிறுமைப்படுத்திடுவாங்க."

இரவு நேரத்தில் மருந்தெடுத்துக் கொடுக்க இரண்டு பொடியன்களை உள்ளே படுக்க வைத்து விட்டு, கதிரேசன் தனது சைக்கிளை வெளியில் எடுத்துக் கொண்டு கிளம்பினான். ஸ்டேஷனரிக் கடை கந்தர் ஷட்டரை இழுத்து விட்டபடி, இவனைப் பார்த்துச் சிரித்தான்.
ஐந்து லாந்தரிலிருந்து வருமானவரி அலுவலகம் வரை, வீதி வெறிச் சென்றிருந்தது. இவனுக்கு நினைவு தெரிந்த கடந்த இருபது வருடங்களுக்கு முந்தைய காரைக்குடி நகரம், மிக சாதுவானது. செக்காலைக்குச் செல்லும் இரு வழிகளிலும் கருவேலங் காடுகள்தான் அதிகம். காரைச் செடிகள் வேண்டிய அளவு மண்டிக் கிடந்ததால், காரைக்குடி எனச் சொல்வோரும் உண்டு. மக்கள் தொகைப் பெருக்கத்திற்கேற்ப, நகரமும் பல பரிமாணங்களில் வளர்ந்து வருகிறது.
கதிரேசன் பெரிய காம்பவுண்ட் கதவைத் திறந்து, சைக்கிளை உள்ளே ஏற்றி மீண்டும் சாத்தினான். நாகப்பன் வந்திருக்க வேண்டும். மோட்டார் பைக் நின்று கொண்டிருந்தது. அழகப்பன் வருவதற்கு ஒரு வாரம் ஆகும். இரண்டாம் கட்டில் முற்றத்தில் நாற்பது வாட்ஸ் பல்ப் மட்டும் எரிந்து கொண்



டிருந்தது. அறைகளில் அவரவர் உலகத்தில் பங்காளிகள் இயங்கிக் கொண்டிருந்தனர். "வட்டியைப் போட்டுக்கிட்டு உக்காரு! சோறு போடுறேன்" என்றாள் தெய்வானை ஆச்சி. அண்ணாமலையின் சம்சாரம் சரசுவதி வெளியில் வந்து "நீங்க செத்த நேரம் ஒறங்கப் போங்க ஆச்சி. நான் கதிருக்குச் சோறு போடறேன்" என்றாள். அண்ணாமலையையும் அவன் மனைவி சரசுவதியையும் சொல்ல வேண்டும். மனிதர்களைப் புரிந்து கொள்ளத் தெரிந்தவர்கள்.

வட்டியில் சோற்றைப் போட்டு மேலே புளிக்குழம்பு ஊற்றினாள். முட்டைகோஸ் வெஞ்சனம் வைத்தாள்.

"மதியம் எளங்குழம்பு கொடி அவரை போட்டு செஞ்சிருந்தீகளே அண்ணமுண்டி! இருக்கா? ஆயிருச்சா?"

"ஆமா நா வைக்கிற எளங்குழம்பு நல்லா இருக்குன்னு ஊத்திக்கிறது நீ ஒருத்தன்தான். உங்க அண்ணன் ஏது இம்புட்டு தண்ணியா இருக்குன்னு கேலி பேசுவாக."

நாகப்பன் மூன்றாம் கட்டிற்குச் செல்வதற்காக முற்றத்திற்கு வந்தான்.

"தெருவுல உக்கார வெச்சுச் சோறு போட வேண்டியதையெல்லாம் உள்ள கூப்பிட்டுப் போட்டா, இளங்குழம்பு என்ன, நாக்கு அதுக்கு மேலயும் கேக்கும்" என்றான் நாகப்பன். அவன் முகத்தில் வெறுப்பு மண்டிக் கிடந்தது. கதிரேசனுக்கு 'திக்' என்றானது.

"தம்பி! கதிருக்கு நான் சோறு போடுறேன்" என்றாள் சரசுவதி கண்டிப்பு மிகுந்த குரலில்.

"நம்ம நாகப்பன்தானே அண்ணமுண்டி. பேசட்டும் விடுங்க" என்று கதிரேசன் சமாதானம் சொல்ல, நாகப்பனின் வெறுப்பு அதிகமானது.

"நீ யாருடா எனக்கு நாய்க்கு ரொட்டி போடுற மாதிரி பிச்சை போட? யாரு? மண்டையில் உறைக்கிற மாதிரி சொன்னாலும், கூடப் பொறந்தவன் மாதிரி ஒட்டுறயே! இன்னிக்கு அண்ணாமலையிடம் போட்டுக் கொடுத்தது நீந்தானாமே? கடை அய்யரு சொன்னான்."

"கதிரேசன் போட்டுக் கொடுக்கலை நாகப்பா. நான் கேட்டதுக்கு பதில் சொன்னான். இல்லாட்டி சொல்லியிருக்க மாட்டான்" என்றபடி அண்ணாமலை வெளியில் வந்து இரைந்தான்.

"உங்க ஃபுல் ஸப்போட்டு அவனுக்குத் தானே. அதான் ஆடுறான். இல்லையின்னா, வள்ளி மெடிக்கல்ஸ் காரைக்குடி நிர்வாகம் முழுவதையும் அவனைப் பார்த்துக்க விட்டிருப்பீங்களா?"

"அவன் பேரில் எனக்கு முழு நம்பிக்கை இருக்கு."

"என்னிடம் இல்லை."

"ஆமாம். என்ன காரணத்துக்காக ப்ராஸ்பிரின் கம்பெனிகாரன் பற்றை நீ பைசல் பண்ணினன்னு இதுவரை சொல்லலை. அப்புறம் எப்படி உன்னிடம் முழு நம்பிக்கை வரும்?"

"அதையும் அவன்கிட்டயே கேட்டுத் தெரிஞ்சுக்க வேண்டியதுதானே?"

"சொல்லமாட்டான். உனக்கு ஒரு இழிபெயர் வரும்னா, அவன் தலையே போனாலும் சொல்ல மாட்டான்."

"விடுய்யா! அண்ணாமலை! நாகப்பன் இன்னும் சிறிசுதானே. இளரத்தம். அடுத்த சித்திரைக்குள்ள கால்கட்டு போட்டுப் புட்டா, தன்னால பொறுப்பு வருது. சிறிசுங்க துள்ளினா நாமதான் விட்டுக் கொடுக்கோணும். பொறவு நாம பெரியவுகளா ஆனதுக்கு என்ன அடையாளம்? விடு! விசயத்தைப் பெரிசு பண்ணாத" என்று தெய்வானை குறுக்கே புகுந்தாள்.

"அவன் எல்லாரையும் மயக்கி வெச்சிருக்கான் ஆத்தா. அப்பச்சி அவன் அம்மாவை முகூர்த்தக் கால் ஊனி, கலியாணம் சொல்லி, நகரக் கோவில்ல பாக்கு வெச்சு, அரசாணிக்கால் கட்டி, இசை பிடிமானம் எழுதி, திருப்பூட்டிய சடங்காவா கட்டிக்கிட்டாரு? என்ன சொக்குப் பொடி போட்டானோ? ராத்திரிக்குப் பொறந்தவன் தானே!"

"நாகப்பா" தெய்வானை ஆச்சி உடல் நடுங்க முற்றத்துத் தூணைப் பிடித்துக் கொண்டு அலறினாள்.



சீர்காழி வி. ரேவதி

நாகப்பன் எழுந்து உள்ளே போய் விட்டான். வட்டியில் இருந்த சோற்றில் தண்ணீர் ஊற்றி விட்டு, வட்டியுடன் எடுத்துக் கொண்டு புழக்கடைப் பக்கம் போனான். பெரிய கிணற்றுப் பக்கம் கல்கத்தா வாளிகளில் நீர் மொண்டு வைக்கப்பட்டிருந்தது. கைகழுவிவிட்டு கிணற்று மேடையில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

மார்கழிப் பூரண நிலா. 'தண்'ணென்று குளிர்ந்தது. கிணற்று நீர் சலனத்தில் நிலா அலைக் கழிந்தது.

சரசுவதி, கதிரேசன் முதுகைத் தொட்ட பொழுது, அவன் விசும்பிக் கொண்டிருப்பது தெரிந்தது.

"கண்ணைத் தொட கதிரு. நீ என்ன சின்னப் பிள்ளையா? இது உன்னுடைய காலத்தின் மோசமான கட்டம்னு நெனச்சுக்க. இரகக் கோளாறாக் கூட இருக்கும். தேவாரமும், திருவாசகமும் கொடுக்காத நெஞ்சுரத்தையா வேற ஒண்ணு கொடுக்கப் போவுது? தினமும் கோளறு பதிகம் படி."

"கோளறு பதிகம் பாடின அதே தமிழ் தான் நாளென் செய்யும்னு பாடியிருக்கு."

"குதர்க்கம் பேசாதே. மனசைப் போட்டு உழப்பாம இரு. உன்னைப் பொறுத்தவரை 'தாய்' என்னும் தூய வடிவம் உன்னை விட்டுப் போயிடுச்சு. உன் மன வேதனைகளைப் புரிஞ்சுக்கிட்டு உனக்கு ஆறுதல் சொல்ல, ஒரு துணை வேணும். அது ஒரு பொண்ணா இருந்தா நல்லது. நல்ல பொண்ணா பார்த்து கலியாணம் கட்டிக்க. உனக்குத் துணை நிக்க, நீ செய்வதெல்லாம் சரின்னு சொல்ல, ஒரு பொண்ணு கிடைச்சாலே போதும். உனக்குப் பாதி தைரியம் வந்திடும். சொல்லு, தெரிஞ்ச பொண்ணு இருக்காளா?"

"போங்க அண்ணமுண்டி, ஒங்களுக்குப் பொழுதுக்கும் கிண்டல்தான்" என்றான் கதிரேசன்.

"அட நெசமாத்தான் தம்பி கேக்கறேன். தெரிஞ்ச பொண்ணு யாரும் உண்டா?"

சட்டென்று அவனுக்குத் தாமரை ஞாபகம் வந்தது. மனம் இலேசாகிப் பறப்பது போல் இருந்தது. வாழ்வு பயமுறுத்தும் அளவுக்கு கடினமானதில்லை என்பது போல் இருந்தது.

சரசுவதி அண்ணியிடம் இப்பொழுது சொல்லலாமா? அவளுக்கும் தன்பால் காதல் உள்ளதா என அறிய வேண்டும். பரஸ்பரம் புரிந்து கொள்ளுதல்தானே காதல்?

"யாரும் இல்லை" என்று சொல்லிவிட்டு கதிரேசன் உள்ளே போய்விட்டான்.

(தொடரும்)

## பந்தா... மட்டையா!



ஆடுகளம் சின்னதுதான்.
ஆட்களும் குறைவுதான்.
அனைவருமே
விளையாடுகின்றோம்
அவரவருக்குத் தெரிந்த அளவு.
"எப்பவுமே
வுமன் ஆப் தி ஹவுஸ்
உங்கம்மாதான்" என்
மனைவி...
மட்டை ஏந்துபவர்களில்
நானும் ஒருவனா...?
நடுவரைப் புறக்கணித்து
மட்டை ஏந்தும்
மனைவி,
அம்மாவுக்குப்
பந்தா...?
குழப்பத்துடன்
ஆயுட்காலம் வரை
ஆட்டம் தொடர்கிறது.

**குடந்தை மோகன்**

“சொல்லுங்க சார்! உங்களைப் போன்றவர்களை ரசிகராகப் பெற்றிருப்பதில் எனக்கு ரொம்பப் பெருமை!”

“நான் உங்களைப் பார்க்கணும். என் ஆபீஸ் பனகல் பார்க் அருகில்தான் இருக்கு. நீங்க ஷூட்டிங் போகிறபோது, ஒரு சில நிமிஷங்கள் எனக்காக ஒதுக்கணும். முடியுமில்லையா?”



சிரித்து வாழ வேண்டும்



“கண்டிப்பாக.”

அன்றைய தினம் ஷூட்டிங்கிற்குப் போகிற வழியில், சென்சார் போர்டு அலுவலகத்துக்குப் போய் சாஸ்திரியைச் சந்தித்தேன்.

சாஸ்திரி மிக நல்ல மனிதர். திறமையான, அதே சமயம் மிகவும் கறாரான அதிகாரி. அவர் பெயரைச் சொன்னாலே, பல சினிமாக்காரர்களுக்கு நடுக்கம் வந்துவிடும்.

என்னை அன்போடு வரவேற்று, உட்காரச் சொன்னார் சாஸ்திரி. “நானும் பார்க்கிறேன். ஐம்பத்து இரண்டு வாரத்துல, நாற்பத்தஞ்சு வாரம் நீ நடிக்கிற படம் ரிலீஸ் ஆகுது. ஏறத்தாழ எல்லாப் படத்திலேயும் நீ நடிக்கிறே. எல்லாப் படத்தையும் சென்ஸார் அதிகாரிங்கிற முறையில் நான் தவறாமல் பார்க்கிறேன். உன் நடிப்பு எனக்கு ரொம்பப் பிடிக்கும். ‘சென்சார் நாகேஷ்’னு உனக்கு ஒரு பட்டம் கொடுத்துடலாம்னு தோணுது” என்றார். எனக்குப் பெருமையாக இருந்தது. தொடர்ந்து பேசினார். “முந்தா நாள் கூட ஒரு படம் பார்த்தேனே! பேர் கூட....”

“அன்னை இல்லம் சார். எனக்குக் கூட நல்ல காமெடி கேரக்டர். நடிப்பு உங்களுக்குப் பிடிச்சிருந்ததா சார்?”

“ம்... அதை காமெடின்னா சொல்றீங்க? ஏ... ஏ... ஏ என்னப்பா நீ. என்று இழுத்து இழுத்துப் பேசுகிற திக்குவாய், உனக்குக் காமெடியா இருக்குதா?”

நான் எதுவும் பேசாமல் அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

“திக்குவாயை வைத்து காமெடி பண்ணி இருப்பதற்காகவே, அந்தப் படத்தை நான் தடை பண்ணலாம்னு நினைச்சேன். தமிழ் நாட்டுல, அதுமாதிரி திக்குவாயால் பாதிக்கப்பட்டவங்க எத்தனை பேர் இருப்பாங்க! அவங்களும், அவங்களோட குடும்பத்தினரும், நண்பர்களும், படத்துல நீ திக்கித் திக்கி பேசுறதைப் பார்த்திட்டு, அதை ரசிச்சுச் சிரிப்பாங்கன்னு நினைக்கிறியா? அதைப் பார்க்கிற திக்கு வாய்க்காரங்க, அவர்களுடைய பெற்றோர்கள், கூடப்

# காரோட்டி தேரோட்டி

நாகேஷ்

42

பிறந்தவர்கள் எல்லாம் வேதனைப் படமாட்டாங்களா?"

என்னை யாரோ சம்மட்டியால் அடித்தாற்போல உணர்ந்தேன். அவருக்கு என்ன விளக்கம் சொல்லி என் நடிப்பை நியாயப்படுத்த முடியும்?

என் முன்னே கையை நீட்டினார், "இனிமேல் இது போல் அடுத்தவர்களின் குறைபாடுளை கிண்டல் செய்யும் விதமாய் நடிக்கமாட்டேன், என்று எனக்கு இங்கே, இப்போது சத்தியம் செய்து கொடு! இந்தப் படத்தை ரிலீஸ் செய்ய நான் அனுமதி வழங்குகிறேன்!" என்றார். நான் அப்படியே செய்து கொடுத்தேன்.

ஒரு படத்தில் பாடல் காட்சி ஒன்றைப் படம் பிடித்தார் டைரக்டர். அதுதான் எனக்கு பாடல் காட்சியில் நடிக்கிற முதல் அனுபவம். எனது குடும்பப் பின்னணி, நான் வளர்ந்த சூழ்நிலை, இதில் நடனம் கற்றுக் கொள்ளவோ, நடனம் ஆடவோ எனக்கு எப்படி சந்தர்ப்பங்கள் கிடைத்திருக்கும்? ஏதோ ஆர்வக் கோளாறு காரணமாய் நடிக்க வந்து விட்டேன். நல்ல டைமிங் சென்ஸுடன், குரலில் ஏற்ற இறக்கங்கள் காட்டி, வசனம் பேசவும், கோணங்கி சேஷ்டைகள் போல ஏதோ செய்து, காமெடி என்கிற பெயரில் மேடையிலும், திரையிலும் செய்து காட்டி, ரசிகர்களிடமிருந்து கைத் தட்டல் பெற்றிருக்கிறேன், அவ்வளவுதான்.

பாடல் காட்சியில் என்னிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறார் டைரக்டர் என்று எனக்கு முதலில் தெளிவாகப் புரியவில்லை. நான் நேரடியாகவே டைரக்டரிடம், "சார்! எனக்கு டான்ஸ் ஆடிப் பழக்கம் இல்லை. நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லிவிடுங்கள். அதன்படி சரியாகச் செய்து விடுகிறேன்" என்றேன்.

என்ன தோன்றியதோ தெரியவில்லை. டைரக்டர், "நீ என்ன பண்ணறே! பாட்டோட முதல் வரிக்கு கிடுகிடுன்னு இந்த தென்னை மரத்து மேல ஏறிடு. மீதியை அப்புறம் பார்த்துக்கலாம்" என்று சொன்னார்.

எனக்கு முன்னே பின்னே மரம் ஏறிப் பழக்கம் கிடையாது. ஆனாலும், டைரக்டர் சொல்லிவிட்டாரே! மறுப்பு ஏதும் சொல்லாமல், இரண்டு மூன்று தடவை முயற்சி செய்து, ஒத்திகை பார்த்துக் கொண்டேன்.

பாடலின் முதல் வரி ஒலித்தது. டைரக்டர் சொன்னபடி நான் மரத்தில் ஏறினேன். முதல் வரி முடிந்தவுடன் 'கட்' சொன்ன டைரக்டரையே நான் பார்த்தபடி, மரத்தின் மேலேயே இருந்தேன். 'என் வேலை முடிந்து விட்டது. உங்களுக்கு ஓ.கே.தானே! நான் இறங்கலாமில்லையா?' என்று என் பார்வைக்கு அர்த்தம்.

டைரக்டர், "அடுத்த வரிக்கு, அந்த இடத்திலிருந்து அப்படியே குதிச்சிடு!" என்றார்.

கீழே பார்த்தபோது, எனக்கு இலேசாகத் தலை சுற்றுவது போல இருந்தது. தேவர் படத்து கன்னட ஹீரோ, மரத்தில் இருந்து இறங்கியபோது, மார்பில் சிராய்ப்பு ஏற்பட்டு, ரத்தம் வந்த சம்பவம் நினைவுக்கு வந்தது.

"அந்த ஹீரோவுக்காவது வாட்ட சாட்டமான உடம்பு. எனவே காலில் சிராய்ப்பு. என் ஒல்லிக்குச்சி உடம்பு தென்னை மரத்திலிருந்து விழுந்தால் என்ன ஆகுமோ என்று பயமாகத் தான் இருந்தது.

"ஒண்ணும் ஆகாது. மெதுவாக, ஸ்டைலாக குதிச்சிடு" என்றார் டைரக்டர். ஒத்திகை பார்க்கக் கூட வாய்ப்பு இல்லாமல், மரத்திலிருந்து குதித்து, ரிஸ்க் எடுக்க விரும்பாமல், மரத்தின் மேலிருந்து மெதுவாக சறுக்கிய



"என்னங்க இது? மருத்துவத்திற்கான கேள்வித்தாள் மேலே மேலே 'அவுட்' ஆகிக் கொண்டேயிருக்கு?"

"மருத்துவமனாலே 'அவுட்' ஆவது சகஜந்தானே...?"

- நாமக்கல் பாலு

படி கீழே இறங்கி வந்தேன். டேக் ஓ.கே. ஆனது.

"அடுத்து மூணாவது வரிக்கு என்ன பண்ணனும் சார்?" கொஞ்சம் ஆர்வம், கொஞ்சம் பயம் கலந்த உணர்வுடன் டைரக்டரைக் கேட்டேன்.

"ம்... மூணாவது வரிக்கு நீ வேணவே வேணாம். நான் என்ன பண்ணறேன், தென்னை மரத்தோட உச்சியை குளோஸ் அப்பில் காட்டிவிடுகிறேன்" என்றார்.



''நர்ஸ்கிட்ட ஜோக் அடிச்சது தப்பாயிடுச்சா... எப்படி?''

''சிரிஞ்சு சிரிஞ்சு கேட்டு துளைச் செடுத்துட்டா!''

— எஸ். மோகன்

எனக்குள் 'அப்பாடா!' என்று சொல்லிக் கொண்டேன்.

அடுத்தது நாலாவது வரி! "என்ன பண்ணுவியோ, ஏது பண்ணுவியோ எனக்குத் தெரியாது. இந்த வரியை நீயே பாடி, டான்ஸ் ஆடணும்" என்று சொல்லி விட்டார்.

பாடலின் நாலாவது வரியைப் போட்டார்கள். நான் ஏதோ ஸ்டெப் போட்டுக் காட்டினேன். எனக்கே நான் போட்ட ஸ்டெப்ஸ் சரியாக இல்லை என்று தோன்றியது. டைரக்டரின் முகத்தில் அதிருப்தி.

படத்தில் நான் ஒரு கார் டிரைவர். படம் பிடித்துக் கொண்டிருந்த பாடல், ஒரு கார் டிரைவரையும், மகாபாரத்தில் தேர் ஓட்டிய கண்ணனையும் ஒப்பிட்டு எழுதப்பட்ட பாடல்.

'தேரோட்டி, நீ (தசாவதாரத்தில்) பத்துத் தடவை செத்துப் பிழைத்தாய். காரோட்டியான நானோ, தினம் தினம் செத்துச் செத்துப் பிழைக்கிறேன்' என்பதாக பாடல் வரிகள் எழுதப்பட்டிருந்தன.

படத்தின் தயாரிப்பாளரும் அப்போது அந்த செட்டுக்கு வந்திருந்தார். டைரக்டர், எனக்கு டான்ஸ் வரவில்லை என்ற அதிருப்தியுடன், தயாரிப்பாளருடன் பேசினார். பேச்சோடு பேச்சாக, "காரோட்டி தினம் தினம் சாகறானோ இல்லையோ, இவனை இந்தப் படத்துல போட்டதுல நான் செத்துக் கொண்டிருக்கேன்' என்று சொன்னது, கொஞ்சம் தள்ளி நின்று கொண்டிருந்த என் காதுகளில் விழுந்தது.

என்னால், அந்த கமெண்ட்டைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. 'நமக்கு டான்ஸ் ஆடிய அனுபவம் இல்லை. எனவே டான்ஸ் சரியாக வரலை. அதற்காக இப்படி கடுமையாக விமர்சனம் செய்கிறாரே' என்று மனம் புழுங்கினேன்.

நேரே டைரக்டரிடம் போய், "சார்! இன்று எனக்கு மூடு அவுட் ஆயிடுச்சு! இனிமேல் என்னால் நடிப்பிலோ, டான்ஸிலோ கவனம் செலுத்த முடியாது. பேக் அப்!" என்று சொல்லிவிட்டு, வீட்டுக்குப் புறப்பட்டு வந்து விட்டேன்.

வீடு திரும்புகிற வழி நெடுக, 'இவனை இந்தப் படத்துல போட்டதுல நான் செத்துக் கொண்டிருக்கிறேன்' என்கிற டைரக்டரின் வார்த்தைகள் திரும்பத் திரும்ப ஒலித்துக் கொண்டே இருந்தன.

வீட்டுக்கு வந்ததும், "என்னை யாரும் தொந்தரவு செய்யக் கூடாது. காப்பி வேணுமா? சாப்பிடலையேன்னு கூட யாரும் வந்து கதவைத் தட்டக் கூடாது. யாராவது ஃபோன் பண்ணினா, நாகேஷ் வெளியில் போயிருக்காரு! எப்போ வருவாருன்னு தெரியாதுன்னு சொல்லிடுங்க. நானாக கதவைத் திறந்து கொண்டு வரும் வரைக்கும், யாரும் என்னை டிஸ்டர்ப் பண்ணக் கூடாது" என்று கடுமையான குரலில் சொல்லிவிட்டு, அறைக்குள் போய் கதவை உள்புறம் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டேன்.

சில நிமிடங்கள் கண்களை மூடிக் கொண்டு அமைதியாக உட்கார்ந்து கொண்டிருந்தேன். ஒரு தீர்மானத்துடன் எழுந்து நின்றேன். என்னை நானே முழுமையாக ஒரு தடவை பார்த்துக் கொண்டேன்.

(சிரிப்பு தொடரும்)



# காம்பாங் பில்பில்; மெக்ஸிகன் கார்ன்...!

• கேரன் ஆனந்த்

**ஆர்த்தி. நல்ல அழகு. நிறைய படிப்பு. பன்னாட்டு நிறுவனத்தில் வேலை. கை நிறையச் சம்பளம். அவருடைய டைரிக் குறிப்பிலிருந்து...**

மே 10. மாலை ஏழு மணி. நீல நிற பட்டன்கள் 'பீப்' என்று அலறி தேர்தல் முடிந்திருந்த சுப வேளை. வயிறு இலேசாகப் பசித்தது. 'இரண்டு தோசை வார்த்துச் சாப்பிடலாமா?' என்று யோசித்துக் கொண்டிருந்த சமயம், அதிர்ஷ்டம் நிறைந்த அந்தத் தொலைபேசி அழைப்பு வந்தது.

"மிஸ்... ஆர்த்தி... சவேரா ஹோட்டல்ல நடக்கிற சர்வ தேச உணவு யுத்தத்துல நீங்க கலந்துக்க முடியுமா?"

"யுத்தமா? வாட் டு யூ மீன்?"

"மீனா? அதுவும் இருக்கும். நிச்சயம் வந்துடுங்க" என்று ஃபோனை வைத்துவிட்டார் அந்த வார இதழின் நிருபர்.

'அடிச்சது லக்கி பிரைஸ்' என்று காரைக் கிளப்பிக் கொண்டு பறந்தேன்.

சவேரா ஹோட்டல். மேற்கத்திய இசை, காற்றில் தவழ்ந்து மனத்தை நனைக்க, உள்ளே நுழைந்தேன்.

"இங்கே, சர்வதேச உணவு யுத்தம்" என்று ஆரம்பித்ததுமே, "வெல்கம் டு சிட்ரஸ்" என்று அன்பாகக் கடத்திக் கொண்டு சென்று விட்டார்கள்.

முதல் மாடி... பளிங்கு சுத்தத்தில் பெரிய அறை. மிதமான வெளிச்சம். ஏ.ஸியின் மெல்லிய குளிர்...

வாவ்! காண இன்னும் இரண்டு ஜோடி மீனா ரகக் கண்ணாவது வேண்டும். ஓ மை இறைவா!

நீரில் மிதக்கும் நிஜ விளக்குகள், தாமரை மலர்கள், நெல், கடுகு, கேழ்வரகு முளைப்பாரிகள், கிரிஸ்டல் அலங்கார பொம்மைகள்... என கலந்து கட்டி கலக்கிய உன் அலங்காரத்தை ரசிப்பதற்குள், மெனுகார்டு வந்தே விட்டது!

தாய் ஸ்டைல் மஸில்ஸ், காம்பாங் பில்பில், அமெரிக்கன் கார்ன் வித் சிட்ரஸ் ஆலிவ் ஆயில், மெக்ஸிகன் கார்ன், பென்னி அராபியாடா, கோவா கறி, நார்வேஜியன் சால்மன், ஸ்விஸ் சாக்லேட் ஷிஃபின்... இதில் சாக்லேட் தவிர வேறு எதன்



பெயரும் யாமறியோம் பராபரமே!

"கூழானாலும் குளித்துக் குடி; ஒசியானாலும் ஏகத்துக்கு சாப்பிடாதே!" என்று ஔவை சொன்னதும் சொல்லாததும், ஞாபகத்துக்கு வந்ததும், "சரி, எது நல்லா இருக்குமோ.. அதைக் கொண்டு வாங்க" என்று சொல்லி அனுப்பிவிட்டேன்.

"அதென்ன சர்வதேச உணவு யுத்தம்?" என்று மேற்பார்வையாக நின்ற சூட்காரரிடம் கேட்டதும், ஃபினாஷ்பேக்குக்குப் போய் விட்டார்.

"வாழைப்பூ வடை, அப்பம், மசால்தோசை போன்ற தென்னிந்திய உணவு வகைக்கு 'மால்குடி'



* ஆர்த்தி



இருக்கிறது. பட்டர்நான், ஆலூமட்டர், கோஃப்தா போன்ற வட இந்திய உணவு வகைக்கு 'மினார்' இருக்கிறது. எல்லாமே கிடைக்கும் 'பியானோ' பூஃபேயும் இருக்கிறது. இருந்தும், 'the lighter side to dining - a signature restaurant' ஆரம்பிக்க ஆசைப்பட்டார் சவேரா ஹோட்டல்ஸ் நிர்வாக இயக்குநர், ஏ. நீனா ரெட்டி. உடனே கேரன் ஆனந்த் துணையுடன், ஒரே கூரையடியில் சர்வதேச உணவு விடுதியை ஆரம்பித்துவிட்டார்.'' என்றார் சூபர்வைஸர் மார்க்கஸ்.

"யாரந்த கேரன் ஆனந்த்?'' என்று கேட்க வாயைத் திறந்தால், அதற்கான பதிலும் வந்துவிட்டது.

''கேரன் ஆனந்த். சர்வதேச சமையல் ராணி. லண்டன் வாசி. பறந்து கொண்டே, சமைத்துக் கொண்டிருப்பார். இவருடைய சமையல் புத்தகங்கள் லட்சக் கணக்கில் விற்பனையாகின்றன. 'பிரிட்டானியா', 'மேரிகோ' நிறுவனங்களின் ஆலோசகர். அவருடைய கை வண்ணம்தான் ஒரே கூரையின் கீழ் இப்படி உலக உணவு வகைகள். டிஸைனர் மெனு! நல்ல உணவு என்பது வெறும் சுவைமட்டுமல்ல; அதில் சத்து இருக்கணும். சுத்தம் இருக்கணும். ஃப்ரெஷ்னஸ் இருக்கணும். பரிமாறும் விதத்தில் நளினம் இருக்கணும் என்பார் மிஸ் நீனா ரெட்டி...'' என்று சொல்லிக்கொண்டே போனார்.

அட! அதுக்குள்ள உணவு தயார். கமகம வாசனையுடன் மேஜை மீது பரப்பினார்கள்.

"இது என்ன... அது என்ன?'' என்று கேட்க ஆசைதான். ஆனால் பசி வந்ததால், பத்தோடு கேள்வியும் மறந்துவிட்டது. சுவை பிரமாதம்! சின்ன 'ஏவ்'வுடன் கூடத்தைக் கடந்தபோது, உணவுக் கவுண்டரில் மஞ்சள் நிற மெக்ஸிகன் வெண்ணையை வெட்டிக் கொண்டிருந்தார் ஒரு பெண்மணி...

"சிட்ரஸ் சாப்பாடு பிரமாதம்... கேரன் மேடம் கிட்டே பாராட்டைத் தெரிவிச்சுடுங்க'' என்றதும், ''ஐயாம், கேரன்... பைதி வே, தாங்க்ஸ் ஃபார் தி காம்ப்ளிமெண்ட்'' என்றார்.

அன்றைக்கு நான் சாப்பிட்ட எல்லா உணவு வகையுமே, சமையல் ராணி கேரன் தயாரித்ததுதானாம்!

என்ன பாக்கியம்! என்ன பாக்கியம்!

''எப்படி இருந்தது சாப்பாடு?''

''அன் லிமிடெட் திருப்தி'' என்றேன். சர்வதேச உணவு நிபுணருக்கு, உடுப்பி ஹோட்டல் பாணியில் நான் தந்த பதில் புரியாமலிருக்குமா என்ன?

- ஐஸ்வர்யா

படங்கள் : ஸ்ரீஹரி

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-2004



**படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!**

**முதல் பரிசு - ரூ. 10,000** **இரண்டாம் பரிசு - ரூ. 7,500**

**மூன்றாம் பரிசு - ரூ. 5,000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

எழுதுபவர்கள் முப்பத்தைந்து வயதுக் குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்க மானவை.

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுது வதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக் குட்பட்டவர்தான் என்பதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. ஜெராக்ஸ் போன்ற) கண்டிப்பாக இணைக்கப்பட வேண் டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் த... அனுப்பிப் பயனில்லை. ஒருவரே ...ணை கதை கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலை பேசி விசாரிப்புகளோ கூடாது.

**'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2004'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 097.**

கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15**

போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 1 ஆண்டு மலரில் வெளி யாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக் கிறோம்.***

**– ஆசிரியர்**



**சரியாக 'கூட்டு' வைத்து, பி.ஜே.பிக்கு 'வேட்டு' வைத்த காங்கிரஸின் ஜி.கே. வாசன், பிரபல டீ.வி. ஒன்றின் சமையல் நிகழ்ச்சிக்காகச் 'சட்டி' வைக்கிறார் 'கூட்டாஞ்சோறு' பொங்க...!**

*தேவையான பொருள்கள்:*

"இத்தாலியன் ரைஸ் 2 கிலோ, பச்சைக் காய்கறிகள்" என்று சொல்ல, 'செல்'



அடிக்கிறது. ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் மறுமுனையில், "பச்சை நம் கட்சிக்கு ஆகாத நிறம், தவிர்க்கவும்" என்று சொல்ல...

"பச்சைக் காய்கறிகளைச் சேர்க்காதீர்கள். கேரட், தக்காளி..." என்று வாசன் தொடர, மீண்டும் 'செல்'! எதிர்முனையில் சோ.பா.!

"காவி நிறத்தை ஒத்த காய்கறிகளைத் தவிர்த்தலே கூட்டணி தர்மம்" என்று சொல்ல, வாசன் டென்ஷனாகி,

"வெங்காயம் மட்டும் போதும்பா..."

"உப்பு- தேவையான அளவு..."

'செல்' அடிக்க, எதிர்முனையில் குமரி அனந்தன், "உப்பு, காந்தியவாதிகளின் நிறம். அஹிம்சையின் உரம்..." என்று லெக்சர் அடிக்க ஆரம்பிக்கிறார்.

"கூட்டாஞ்சோறு கேன்சல்... எல்லோரும் சாப்பிடுறீங்களோ, இல்லையோ, ஆனா, மறக்காம வெத்தலை பாக்கு போடுங்க."

அப்போது மணிசங்கர் அய்யரிடமிருந்து 'கடிதம்' வருகிறது. அதில் "வெற்றிலை - பச்சை - அதனுடன் பாக்கு சேர்த்து கலைத்தால் கிடைப்பது காவி நிறம். ஆகவே நமக்கு ஆகாது" என்றிருக்க - "ஷூட்டிங் கேன்சல்" என்றபடி ஓடுகிறார் வாசன்.

## வைகோவின் காரக் குழம்பு!

சிவப்பு புரட்சியின் நிறம் - மிரட்சியின் நிறம் - இந்தக் குழம்பில் ருசியின் நிறம் சிவப்பு - சிவந்த காய்ந்த மிளகாய்களை மையமாக வைத்து, பிற மசாலாக்களுடன் சேர்த்து மையாக அரைத்து, உன் அருகில் வைத்துக் கொள். ஆறாம் நூற்றாண்டில், ஏழாம் லூயிஸ் செய்த கொடுங்கோல் தவறுகளாலே ஆறாய் ஓடியது உப்புக் கண்ணீர், மக்களின் கண்களில்! எனவே உப்பைத் தப்பின்றிப் பயன்படுத்து. இனி நீ சேர்க்க வேண்டியது புளி..." என்று சொல்ல "சார்... புளியா? புலியா?" என குரல் ஒலிக்க... வைகோ டென்ஷனாகி, "நீ ஒலிப்பதிவை நிறுத்துப்பா" என்றபடி கோபமாக வெளியேறுகிறார்.

# அரசியல்



## கலைஞரின் பிரியாணி!

"உடன்பிறப்பே! தேர்தல் நேர பிரியாணிப் பொட்டலங்களுக்கு மயங்காமல், பட்டென பொத்தானை அழுத்தி,

சூரியனை மீண்டும் வீரியம் பெறச் செய்த உனக்கு கூறுகின்றேன் பிரியாணி செய்யும் முறையை...

*தஞ்சையோ புஞ்சையோ -*
*தஞ்சையிலே விளைந்த அரிசி*




*காவிரி வராத ஆட்சியில்*
*ஏழை உழவனின் கண்ணீரில்*
*விளைந்த அரிசி...*
*தேவையில்லாதவர்களைத் தேர்தலில்*
*களைந்தது போல்*
*அரிசியையும் களை...!"*

(வைரமுத்து இடையில் குறுக்கிட்டு)

"சமையல் செய்பவன் சமையற் கலைஞன். கலைஞரே சமையல் செய்தால் - என்னவென்று பாடுவேன்...?" என்று சொல்ல, கலைஞர் தொடர்கிறார்.

"மஞ்சள் மருத்துவக் குணம் மிக்கது. அதை ஏன் பிரியாணியில் சேர்ப்பதில்லை. மஞ்சள் நல்ல கூட்டணி... கிடைக்கும் நல்ல பிரியாணி" (நெப்போலியன் பாட ஆரம்பிக்கிறார்)

*"கிழக்குச் சிவக்கையிலே... அய்யா*
*பிரியாணி சமைக்கையிலே - அந்த*
*வாசம் அடிக்கையிலே - என்*
*நாக்கு ஊறிடுச்சே..."*

என்று பாடி முடிக்க- பிரியாணி செய்து முடித்து கலைஞர் சொல்கிறார். "இது என் கை சமைத்த பிரியாணி. வென்றது நான் கையோடு வைத்த கூட்டணி!"

## ஜெ.யின் பழரசம்!

"பழரசம் செய்து - மக்களை
பரவசப்படுத்த -
நவரசத்தலைவியே - புவி அரசியே
வருக வருக!"

என்று போஸ்டர்கள் மின்ன - அம்மா வருகிறார் பழரசம் செய்ய!

கராத்தே முதல் காளிமுத்து வரை கையில் பழங்களுடன் சர்வநாடியும் அடக்கி பவ்யமாக நிற்க, "பழங்களைக் கொண்டு வாருங்கள்" என்கிறார் ஜெ.

'மாம்பழத்துடன்' பன்னீர் செல்வம் போய் நிற்க, 'பரேடு' நடக்கிறது அவருக்கு! அடுத்து பொன்னையன் அன்னாசி, வாழைப்பழத்துடன் செல்ல, 'மஞ்சள்' நிறப் பழங்கள் கண்டு ஜெ. கோபப் பார்வை



பார்க்க, ஓட்டமெடுக்கிறார் பொன்னையன்.

"இந்தாங்கம்மா பலா... '40' சுளையா இருக்கு" என செங்கோட்டையன் சொல்ல, கடுப்பாகிறார் ஜெ. ஹைதராபாத் 'பச்சை' திராட்சைகளை ஜூஸாக்கிக் குடித்து விட்டு, தோழியுடன் கவர்னர் மாளிகைக்குக் கிளம்புகிறார், அடுத்த அமைச்சரவை மாற்ற லிஸ்டுடன்.

- முகில்

# புக் பேங்க்

### பாக். ஒரு புதிரின் சரிதம் - பா. ராகவன்

செடி வெட்டுபவனை முடிவெட்டச் சொன்னதுபோல், மிலிட்டரிக்காரன் போட்ட சாம்பாராய் பட்ஜெட்; அதைச் செயல்படுத்துமுன் கலைந்து போகும் அரசு. கரண்டல் அதிகாரிகள், சுயநல அரசியல். வளரலாம் என்று நினைக்கும்போதே வெட்டி, வெட்டிவிடப்பட்டு பான்சாய் மரமாகிப் போன ஜனநாயகம்; சிகரெட் பிடிக்க விரும்பி எதிரிலிருப்பவரைக் கொளுத்துகிற தீவிர வாதம்; காஷ்மீர் காரட்டை முன்னால் கட்டி, கழுதையாக மக்களை ஓட்டும் சர்வாதிகாரம்; இதுதான் பாகிஸ்தான். பிரிந்தது முதல், முஷாராப் வரை, பாக். கின் விபரீத ஜாதகத்தை, வசீகர, வேக நடையில், கட்டம் கட்டமாக விவரிக்கும் கட்டுரைகளின் தொகுப்பு. இந்திய அரசியலுக்கு ஓர் எச்சரிக்கையும் கூட.

**கிழக்கு பதிப்பகம், 16, கற்பகாம்பாள் நகர், மைலாப்பூர், சென்னை-4. விலை ரூ.75**









### சிவவாக்கியர் பாடல் - மூலமும் உரையும் - உரை மா. வடிவேலு முதலியார்

திருமழிசை ஆழ்வாராகவும், சிவவாக்கியராகவும் ஆராய்ந்து, அறிந்து, தெளிந்து பரம்பொருளின் உண்மையைக் கூற படைத்த பாடல்கள், பொருளுடன், அருளுடன்.

**அருந்ததி நிலையம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.125**

### புத்தகம் - சினேகன்

யதார்த்த வாழ்வின் இயல்புக் கவிதைகள், படைத்தவனுக்கு இருக்கும் பாசாங்கற்ற பார்வை, படிப்பவனுக்கு இருந்தால் போதும், இவை ரசிக்கும், ருசிக்கும், வாசிப்பில் பசிக்கும்.

**செல்வம் பதிப்பகம், ஏ3-ஏ-ஓம்கார் அபார்ட்மெண்ட்ஸ், 1, ஜெயம்மாள் தெரு, தேனாம் பேட்டை, சென்னை-18. விலை ரூ.55**

### ஸ்ரீமதி - சுதாமூர்த்தி

வாழ்க்கையென்பது புரிதலும், தெளிதலும், அணைத்தலும், ஆறுதலும். வசதியும் வாய்ப்பும் வந்துவிட்டால், அயல்நாட்டில் வாழவும் பழகிவிட்டால், பாரம்பரியமும் பண்பாடும் மறந்து போக வேண்டுமா என்ன? நூலை மறந்த பட்டமும், வேரை மறந்த விழுதும் வீணாய்த்தான் போகும் என்று, வாழ்வின் வேதம் கூறும் கதை.

**வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, சென்னை - 17 விலை ரூ.50**

### வெளி நடப்பு - பழநிபாரதி

சோகத்தையும் இருட்டையும் கருக்கமான வரிகளில் சொல்லி, விடிகின்ற வேளை வருமென்று விழிவிரிய வைத்து, காயம்பட்ட வாழ்க்கையை கனிவோடு விசாரிக்கும் உரைநடைக் கவிதைகள். தலைப்புதான் வெளிநடப்பு. உள்ளே உள்ளதெல்லாம் மனத்தின் உள் நடப்பு.

**குமரன் பதிப்பகம், 3, முத்து கிருஷ்ணன் தெரு, சென்னை - 17 விலை ரூ.40**

**- விஷ்வக்**

# BHARATH COLLEGE OF SCIENCE AND MANAGEMENT

(Affiliated to Bharathidasan University)

Near New Bus Stand, Trichy Road,.

THANJAVUR - 5

Ph: 04362 - 227937, 228081, e.mail:Bharathcollege@hotmail.com.WebSite: www.bharathcollege.com

## ADMISSION NOTICE - 2004 - 2005.

### U.G COURSES

1. B.Sc., - Hotel Management and Catering Technology
2. B.Sc., - Fashion Technology and Costume Design
3. B.Sc., - Visual Communication
4. B.Sc., - Bio Technology
5. B.Sc., - Nutrition & Dietetics
6. B.Sc., - Computer Science
7. B.C.A., - Computer Applications
8. B.B.A., - Business Administration
9. B.Sc., - Information Technology
10. B.Com. - Commerce
11. B.Litt - Tamil Literature
12. B.Sc., - Interior Decoration & Designing
13. B.A., - Music*
14. B.A., - French*

### PG. COURSES

1. M.Sc., - Information Technology
2. M.Sc., - Bio Informatics
3. M.Sc., - Bio Technology
4. M.Sc., - Food Service Management & Dietetics
5. M.Sc., - Hotel Management & Catering Science*
6. M.A., - Mass Communication & Journalism*.

### PG. Diploma courses

1. P.G. Dip. in Hotel Mgt.& Catering Tech.
2. P.G. Diploma in Fashion Technology
3. Diploma in Fashion Technology
4. Diploma in Hotel Management & Catering Technology
5. Diploma in Hotel Management
6. Diploma in Catering Technology

*Subject to Affiliation

**SEPARATE HOSTEL FACILITY FOR BOYS &GIRLS**

Prospectus and application Forms for UG Rs. 50/- by cash / by post Rs. 75/-(by D.D)
P.G Rs.100/ By cash /By post Rs.125 /- ( by D.D)drawn in favour of
**BHARATH COLLEGE OF SCIENCE AND MANAGEMENT** Payable at THANJAVUR

Prof.. **N. GANESAN,** M.Com., M.Phil., (Ph.D.,)
**Secretary**

**A CO - EDUCATIONAL ARTS & SCIENCE COLLEGE**

மே, 30-2004

# மினி கல்கி

ஓவியர் மருது
டாக்டர் கே.ஸ்ரீஸ்ரீதர்
டாக்டர் எஸ்.அஷோக்
டாக்டர் எல்.மகாதேவன்
சவேரா ஹோட்டல் நீனா ரெட்டி
வழக்கறிஞர் கே.சுமதி
டாக்டர் இரா.அன்புமணி
பேராசிரியர் கு.ஞானசம்பந்தம்
டாக்டர் தமிழிசை சௌந்தரராஜன்





## ப(ா)ல் சுவை படைப்புகள்!







தமிழ் நாட்டில் புலிகளின் எண்ணிக்கை அதிகமாயிடுச்சு. அதுக்கு ஆதரவு கொடுக்கறதா தீர்மானிச்சிட்டோம்!

'பொடா'வைத் தூக்கிக்கிட்டு ஓடி வந்துடாதீங்க சாமி! நாங்க சொன்னது கிச்சன் புலிகளை! சுடுவதெல்லாம் தோசை, வெடிக்கறதெல்லாம் கடுகுதான். 'சமையல் புலி' போட்டிக்கு வந்த கடிதங்களைப் பார்த்து திணறிட்டோம். மெனு ராணி செல்லம் தேர்ந்தெடுத்த பிரமாதமான டிஷ் வகை இதோ: பரிசு ரூ.200/- இந்தப் புலிகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

## மில்க் ஆரஞ்சு குலோப் ஜாமுன்

**தேவையான பொருள்கள்:**

பால் - 2 லிட்டர்
சர்க்கரை - 5 கப்
எண்ணெய் - 200 மில்லி
வெள்ளை வினிகர் - 2 ஸ்பூன்
ஆரஞ்சுப் பழம் - 2
கேசரி கலர் - 1 சிட்டிகை
ஏலக்காய் பொடி - 2 ஸ்பூன்
மைதாமாவு - ½ கப்

**செய்முறை:**

பாலை ஒரு அகலமான பாத்திரத்தில் காய்ச்சிய பிறகு வினிகர் சேர்க்கவும். பால் நன்றாகத் திரிந்து விடும். அப்போது ஒரு மெல்லிய துணியில் ஊற்றி, வடிகட்டினால் பனீர் உருண்டைகளாகத் தனியே பிரிந்து வரும். ஆரஞ்சுப் பழத்தோலை எடுத்து விட்டு, சுளைகளைத் தனியே எடுத்து, தண்ணீர் விடாமல், மிக்ஸியில் அரைக்கவும். அதை பனீருடன் சேர்த்து நன்றாகக் கெட்டியாகப் பிசையவும். அதில் மைதாமாவு சேர்த்து, நன்றாக மெதுவாகப் பிசைந்து மிருதுவான உருண்டைகளாக உருட்டிக் கொள்ளவும். மிதமான சூட்டில் எண்ணெயைக் காயவைத்து, உருண்டைகளைப் போட்டு, பொன்னிறமாக எடுக்கவும்.

அடுப்பில் அகலமான பாத்திரத்தில் சர்க்கரையைப் போட்டு, மூழ்கும் வரை தண்ணீர் விட்டு ஜாமுன் பாகு வைக்கவும். கேசரி கலர், ஏலப்பொடி சேர்க்கவும்.

• மெனுராணி செல்லம்



எண்ணெயில் பொரித்த சூடான உருண்டைகளை ஜீராவில் போடவும். சூடாகவும் சாப்பிடலாம். பிரிட்ஜில் குளிர வைத்துச் சாப்பிட்டால், மிக மிக சுவையாக இருக்கும். பாலின் சுவையும் மணமும் நாள் முழுதும் இருக்கும்.

- கீதா மூர்த்தி,
ஓசூர்



## தயிர் கோப்தா

**தேவையான பொருள்கள்:**

கெட்டித் தயிர் - ½ லிட்டர்
இஞ்சி - சிறு துண்டு
பச்சை மிளகாய் - 4
சுரைக்காய் - 1 துண்டு



கடலை மாவு - 1 கப்
உப்பு - 1 டீஸ்பூன்
மிளகாய்த்தூள் - 1 டீஸ்பூன்
மசாலாப் பொடி - 1 டீஸ்பூன்
பொரிக்க எண்ணெய் - தேவையான அளவு

**அலங்கரிக்க:**

ஓமப்பொடி - 2 டேபிள் ஸ்பூன்
கேரட் துருவல் - 2 டேபிள் ஸ்பூன்
பொடியாக்கிய கொத்தமல்லித் தழை - 2 டீஸ்பூன்
மிளகு சீரகப் பொடி - 1 டீஸ்பூன்

**செய்முறை:**

முதலில் சுரைக்காயை தோல் நீக்கி, துருவி, அத்துடன் சிறிது உப்பு சேர்க்கவும். இப்போது அதில் தண்ணீர் விட்டுக் கொள்ளும். எனவே தண்ணீரை இறுத்து எடுக்கவும். இந்த சுரைக்காய்த் துருவலுடன் மிளகாய்த்தூள், கரம் மசாலா பொடி, கடலை மாவு சேர்த்து இலேசாகப் பிசையவும். இதை சிறு உருண்டைகள் ஆக்கி கையில் பிடித்த கொழுக்கட்டை வடிவத்தில் உருட்டி வைக்கவும். அடுப்பில்



எண்ணெய் காய வைத்து இந்த உருண்டைகளைப் போட்டு, நிதானமான தீயில் கருகாமல் பொரித்து எடுக்கவும். இப்போது கோப்தாக்கள் ரெடி.

சுரைக்காயின் இறுத்து எடுத்த நீருடன் இஞ்சி, பச்சை மிளகாய் சேர்த்து நைசாக அரைத்து தயிரில் கலக்கவும். தயிரில் உப்பு சேர்க்கவும். பிறகு பொரித்து வைத்த கோப்தாக்களை இதில் போடவும்.

சுமார் அரை மணி நேரம் சென்றவுடன், கோப்தாக்களைப் பரிமாறும் தட்டில் வைத்து அதன் மேல் ஓமப்பொடி, கேரட் துருவல், கொத்தமல்லித் தழை, மிளகு, ஜீரகப் பொடி தூவி பரிமாறவும். இது மாலை நேர டிபன். சப்பாத்திக்குத் தொட்டுக் கொள்ளவும் பயன் படுத்தலாம்.

- அனுராதா சுந்தரம்,
சென்னை - 28

## பால் பணியாரம்

**தேவையான பொருள்கள்:**

பச்சரிசி - 100 கிராம்



• பன்னீர் ஹல்வா!

உளுந்து பருப்பு - 100 கிராம்
சர்க்கரை - 100 கிராம்
பால் - ¼ லிட்டர்
நல்லெண்ணெய் - 150 கிராம் (பொரிக்க)
ஏலக்காய் - சிறிது (1 டீஸ்பூன்)
உப்பு - ¼ டீஸ்பூன்





**செய்முறை:**

முதலில் அரிசியை நன்கு கழுவி ஊற வைக்கவும். உளுந்து பருப்பையும் கழுவி ஊற வைக்கவும். இரண்டையும் தனித்தனியாக நைஸாக அரைத்து ஒன்றாக கலந்து, உப்பையும் சேர்த்து கெட்டியாகக் கரைத்து வைக்கவும்.

பாலை ஒரு பாத்திரத்தில் விட்டு நன்றாகக் காய்ச்சி இறக்கி வைத்து சர்க்கரையைக் கொட்டி, ஏலப்பொடி கலந்து மூடி வைக்கவும்.

வாணலியை அடுப்பில் வைத்து எண்ணெயை விட்டு, நன்றாகக் காய்ந்ததும் அரைத்து வைத்த மாவை சிறு கரண்டியில் எடுத்து, எண்ணெயில் அப்பம் போல் குண்டாக ஊற்றவும். சிறிது நேரத்தில் மாவு வெந்து மேலே கிளம்பும். பணியாரம் சிவக்காமல் வெண்மையாக இருக்கும் போதே, ஜல்லிக் கரண்டியால் எடுத்து பாலில் போட்டு விட வேண்டும். கால் மணி நேரம் ஊறியபின் தட்டில் எடுத்து வைக்கவும். இது ஒரு மாலை நேரச் சிற்றுண்டி.

- ராஜி பத்மனாபன்,
சென்னை - 10



மினி கல்கி



# பால் கேக்

**தேவையான பொருள்கள்:**

பால் - 1 லிட்டர், சர்க்கரை - 1¼ ஆழாக்கு, நெய் - 6 டீஸ்பூன், ரவை - 5 டீஸ்பூன்

**செய்முறை :**

வாணலியில் பாலை ஊற்றி நன்றாகக் காய்ந்த பிறகு சர்க்கரை, நெய்,



ரவையைப் போட்டு நன்றாகக் கிளறவும். கலவை கெட்டியாகி சுருண்டு வரும்பொழுது, அடுப்பை அணைத்துவிட்டு, கீழே இறக்கி வைத்துக் கிளறவும். கலவை பந்து போல் வரும். நெய் தடவிய தட்டில் கொட்டி, ஆறியவுடன் விருப்பம் போல் துண்டு போடவும். இது ஒரு சுலபமான, உடம்புக்குக் கெடுதல் இல்லாத இனிப்பு.

- சாந்தி ஸ்ரீகாந்த்
சென்னை - 45

# கர்ட் பால்ஸ் வித் டிரை கலர்டு மேஜிக்



**தேவையான பொருள்கள்:**

கெட்டித்தயிர் - 1 லிட்டர்

பச்சைப் பட்டாணி - 100 கிராம்
மைதா - 2 டேபிள் ஸ்பூன்
கேரட் (துருவியது) - ½ கப்
பெ. வெங்காயம் (துருவியது) - 2
தக்காளி - 6
இஞ்சி பூண்டு விழுது - 1 டேபிள் ஸ்பூன்
பச்சை மிளகாய் - 3
மிளகுத்தூள் - 1 டீஸ்பூன்
புதினா (அரைத்தது) - 2 டேபிள் ஸ்பூன் ( உப்பு சேர்க்கவும்)
முந்திரி - 10
கசகசா (ஊறவைத்து அரைத்தது) - 2 டீஸ்பூன்
உப்பு - தேவையான அளவு
ம.பொடி, மி. பொடி - தலா 1 டீஸ்பூன்




எண்ணெய் - பொரிப்பதற்கு
துருவிய சீஸ் - ¼ கப்

**செய்முறை:**

தயிரை ஒரு மெல்லிய துணியில் கட்டி வடியவிடவும். 2, 3 மணி நேரம் கழித்து, வடித்த விழுதினை நன்கு பிசையவும். தேவையான அளவு உப்பு, மிளகாய்ப் பொடி சேர்த்து எலுமிச்சம்பழம் அளவு உருண்டைகளாக உருட்டி, நடுவில் ஒரு பள்ளம் செய்து அவற்றைத் தனியே வைக்கவும்.

பச்சைப் பட்டாணியை வேக வைத்து நன்கு மசிக்கவும். ஒரு வாணலியில் 2 ஸ்பூன் எண்ணெய் ஊற்றி, மசித்த பட்டாணியை உப்பு, மிளகுத் தூள், ½ ஸ்பூன் இஞ்சி பூண்டு விழுது சேர்த்து, ஐந்து நிமிடம் வதக்கவும். இக்கலவையை தயிர் உருண்டைக்கு நடுவில் வைக்கவும். மைதாவை தண்ணீர் ஊற்றி பேஸ்ட் போலாக்கவும். கலவை வெளியே வராதவாறு



மைதா பேஸ்ட்டால் மூடி, மிதமான சூட்டில் எண்ணெயில் பொன்னிறமாக பொரித்தெடுக்கவும்.

**டிரை கலர் செய்ய:**

வாணலியில் ஒரு டேபிள் ஸ்பூன் எண்ணெய் ஊற்றி, மீதமுள்ள இஞ்சி பூண்டு விழுதை வதக்கவும். பின் துருவிய வெங்காயத்தைச் சேர்த்து, பொன்னிறமாக வதக்கவும். பின்னர் தக்காளி, பொடியாக நறுக்கிய பச்சை மிளகாய், மபொடி, ஊற வைத்து அரைத்த கசகசா சேர்த்து, பச்சை வாசனை போக வதக்கி, பேஸ்ட் போல வரும்வரை கலந்து இதை தனியே வைக்கவும்.



ஒரு தட்டில், பொரித்த உருண்டைகளை மூன்று வரிசைகளாக அடுக்கவும். உருண்டைகளை தக்காளி பேஸ்ட்டில் எல்லாப் பக்கமும் படுமாறு நன்கு புரட்டி எடுக்கவும். ஒரு வரிசையின் மேல், உள்ள உருண்டைகளின் மேல் துருவிய கேரட்டைத் தூரவவும்.

முந்திரியைச் சீவவும். இச்சீவலோடு துருவிய சீஸ் சேர்த்து, நடு வரிசையில் உள்ள உருண்டைகளின் மேல் தூரவவும்.

புதினாவை, தேவையான அளவு உப்பு, ஒரு பச்சை மிளகாய் சேர்த்து அரைத்து அந்த விழுதை உருண்டையின் மேலே தடவி, பொடியாக நறுக்கிய கொத்தமல்லியைத் தூரவவும்.

இப்போது டிரைகலர்டு கர்ட் பால்ஸ் ரெடி.

பரிமாறுவதற்குச் சிறிது நேரம் முன்புதான் தக்காளி பேஸ்ட்டில் உருண்டைகளைப் புரட்ட வேண்டும். இல்லாவிடில் நமத்துப் போய்விடும். தக்காளிக் கலவை செய்வதற்கு நேரமில்லையெனில், பூண்டு கலந்த தக்காளி சாஸைப் பயன்படுத்தலாம். மிகவும் புளித்த தயிரெனில் அதனுடன் மைதா சேர்த்து, பிசைந்து, பின் பொரிக்கலாம். அல்லது பிரெட்டை ஓரங்களை வெட்டிவிட்டு தண்ணீரில் நனைத்து, அதை தயிர்விழுதுடன் பிசைந்து செய்யலாம். பச்சைப் பட்டாணி விழுதுக்கு பதில் உருளைக் கிழங்கை மசித்தும் செய்யலாம்.

- கமலா சீனிவாசன் - விஜய், நாகை



பரிசு பெற்ற மேலும் பல சமையற் குறிப்புகள் அடுத்த இதழில்

# ANNAI FATHIMA
## INSTITUTE OF
## HOTEL & CATERING ADMINISTRATION

(Run by Annai Fatima Educational Society Regd.)

- Permanently approved by the Government of Tamil Nadu. • Affiliated to Madurai Kamaraj University.
- In collaboration with MTC, MALAYSIA.

**Admission Notice**

| Duration | Courses Offered |
|---|---|
| * 3 years | Diploma in Hotel Management & Catering Technology |
| 2 years | Hotel Operational Management (Catering Technology) |
| ** 1 year | Postgraduate Diploma in Hotel Management and Catering Science |
| ** 1 year | Fashion Technology with CAD |
| ** 1 year | Hotel Management & Catering Science |
| 1 year | Food & Beverage Production |
| 1 year | Food & Beverage Service |

*Approved by MTC ** MK University

**100% Placement since 1992**




- Eligibility : 10th,+2 and above.
- Course No.3 - Any Degree.
- Separate Hostel for Boys & Girls
- Bus facility also available

For Application & Prospectus Send Rs. 175/- by D.D./M.O. or Rs. 150/- in person to

**THE PRINCIPAL,**
**ANNAI FATHIMA INSTITUTE OF**
**HOTEL & CATERING ADMINISTRATION,**
**Fathima Nagar, Alampatti, Thirumangalam,**
**Madurai Dist. ✆ 04549-284528, 284794, 208111.**




Regd. Off : Bethel Nagar, Opp.: Aparna Towers, Bye Pass Road, Madurai - 10. Phone : 0452-2380326



# வீட்டுக்குள்ளே

டபுள் ஸ்ட்ராங்கான காபியில் ஆரம்பிக்கும் நாம், நாள் முழுக்க என்னென்ன உணவுகளை எல்லாம் விழுங்குகிறோம் என்று பட்டியலிடுங்கள். அதில் எவ்வளவு கொழுப்புச்சத்து? எவ்வளவு சர்க்கரை? எத்தனை மாவுப் பொருள்? சகட்டு மேனிக்குத் தின்பதோடு, முறையான உடற்பயிற்சியும் இல்லாவிட்டால், வியாதிகள் விஸிட்டிங் கார்டோடு வந்தே விடுகின்றன.

டாக்டரின் ஆலோசனையைக் கேட்டவுடன், மிக உற்சாகமாகத்தான் நடைப் பயிற்சியைத் தொடங்குவோம். போகப் போக, வாரத்துக்கு நான்கு நாள், இரண்டு நாள் என்று குறைந்து கொண்டே போய், நின்றுவிடும். பிறகு மீண்டும் ரத்தக் கொதிப்போ, சர்க்கரையோ அதிகமானால், மறுபடியும் டாக்டர், மறுபடியும் வாக்கிங் (கொஞ்ச நாட்களுக்கு) என்று அடுத்த சுற்று தொடங்கும்.

• ஏ.வேணுகோபால்

தொடர்ந்து வாக்கிங் செல்ல முடியாததற்குப் பல காரணங்கள். “சாலைகள் நடக்கும் படியாகவா இருக்கின்றன? எத்தனை மேடுபள்ளங்கள்! தவிர, பெண்களுக்கு வாக்கிங் போவதற்கெல்லாம் எங்கே நேரம் இருக்கிறது? மேலும் மழைக் காலத்தில் வாக்கிங் போவது தடைப்படுமே” என்று உற்சாகமாகப் பட்டியலிட்டார் ஏ. வேணுகோபால்.

இதில் ஏன் இவருக்கு இவ்வளவு உற்சாகம்? காரணம் உண்டு. வீட்டிலிருந்து கொண்டே 'வாக்கிங் செல்லக் கூடிய' கருவியை இவர் உருவாக்கியிருக்கிறார்.

“நாற்பது வருடங்களாக ஸ்டீல் ஃபர்னிச்சர் வியாபாரத்தில் ஈடுபட்டு வருகிறேன். மூன்று வருடங்களுக்கு முன்புதான், 'ஏஷியன் எண்டர்ப்ரைஸஸ்' என்ற எனது நிறுவனத்தின் மூலமாக உடலை ஆரோக்கியமாக வைத்திருக்கக் கூடிய சில கருவிகளை உருவாக்கினேன். அவற்றில் முக்கியமானது, 'ஸ்வேதா வாக்கர்' என்ற இந்தக் கருவி” என்று காட்டினார்.

இதில் உள்ள இரு பெடல்களிலும் இரு பாதங்களை வைத்துக் கொண்டு, இரு கைகளாலும் (தறி நெய்வது போல்) இயக்கினால், தானாக வாக்கிங் செய்யும் நிலைக்குத் தள்ளப்படுகிறோம்.

“வழக்கமாக 'ஜிம்'களில் பயன்படுத்தப்படும் இது போன்ற கருவியின் குறைந்தபட்ச விலையே பத்தாயிரம் ரூபாய். நடுத்தர மக்களால் நினைத்துப் பார்க்க முடியாத தொகை இது. எங்கள் கருவியின் விலை, வரி உட்பட மூவாயிரத்து அறுநூறு ரூபாய்தான்” என்றார்.



• ஸ்வேதா வாக்கர்

இது போன்றே உள்ள “ட்ரெட்மில்” எனப்படும் கருவிகளில், பாதங்களை மாற்றி மாற்றித் தூக்கி வைத்து வழக்கம் போல் நடக்க முடியும். ஆனால் இந்தக் கருவியில் அப்படி இல்லை (கால்கள் அப்படியே முன்பின்னாக நகர்கின்றன)

"ஆனால் ட்ரெட் மில் கருவிகளில் கைகளுக்குப் பயிற்சி இல்லையே. அது போன்ற கருவிகளில், இரண்டு கைகளையும் முன்புறத்திலுள்ள கம்பியில் உறுதியாகப் பற்றிக் கொள்வதால், கால்களுக்கு மட்டுமே நடைப் பயிற்சி கிடைக்கும். எங்கள் கருவியில் கை, கால், இடுப்பு போன்ற எல்லாப் பகுதிகளுக்குமே பயிற்சி கிடைக்கிறது. இந்தக் கருவியில் பத்து நிமிடங்கள் வாக்கிங் செய்தாலே வியர்வை பொங்குவதையும், மூச்சு வாங்குவதையும் உங்களால் உணர முடியும்'' என்றார் வேணுகோபால்.

"இப்போது பலரும் ஃப்ளாட்களில் வசிக்கிறார்கள். தவிர, மொத்தக் குடும்பத்தினரும் வாக்கிங் போவதென்பதும் நடக்கக்கூடிய(!) காரியம் இல்லை. இந்தச் சூழலில் எங்கள் கருவி பெரும் வசதியாக இருக்கும். முக்கியமாக, கம்ப்யூட்டர் எதிரிலேயே மணிக்கணக்காக உட்கார்ந்திருப்பவர்களின் உடல் ஆரோக்கியம் கெட வாய்ப்பு உண்டு. அவர்களுக்கு இந்தக் கருவி, ஒரு வரப்பிரசாதம்" என்கிற வேணுகோபால், இந்தக் கருவிக்கு ஒரு வருட உத்தரவாதம் கொடுப்பதாகவும், அதற்குப் பிறகும் சர்வீஸ் செய்து தருவதாகவும் உறுதி அளித்தார்.



# வாக்கிங்!

இந்தக் கருவியில் பயன்படுத்தப்படும் கயிறு - தினமும் இதில் வாக்கிங் பயிற்சி சென்றால் - ஒரு வருடத்துக்கு வருமாம். அதற்குப் பிறகு எழுபது ரூபாய் செலவில் இன்னொரு கயிற்றைப் பொருத்தித் தருகிறார்கள்.

'ஜாகர்' (Jogger) என்கிற இவர்களது மற்றொரு கருவி, பெடல் செய்யும் ஒற்றைச் சக்கர சைக்கிள் போலக் காணப்படுகிறது. தவிர, முக்கியமாகப் பெண்களுக்குத் தேவைப்படக் கூடிய இன்னொரு கருவியையும் உருவாக்கியிருக்கிறார். இதில் உள்ள பகுதிகளைக் கயிறுகளின் மூலம் கால்களில் கட்டிக் கொண்டு, முதலில் மல்லாந்த நிலையிலும், பிறகு குப்புறப்படுத்த நிலையிலும் பயிற்சி செய்தால், முதுகெலும்பில் தொல்லை வராதாம்.

"நான் அடிப்படையில் ஓர் அத்லெட்! ஃபிட்னெஸின் முக்கியத்துவம் கருதியே இந்தத் தொழிலுக்கு வந்தேன். வாக்கிங்கையும் ஜாகிங்கையும் யார் வேண்டுமானாலும் எந்த வயதிலும் செய்யலாம். இந்தக் கருவிகளை இயக்குவதில் எந்தப் பின்விளைவும் இருக்காது. அந்த அளவுக்கு நேர்த்தியுடன் வடிவமைக்கப்பட்டிருக்கின்றன" என்றார் ஏ. வேணுகோபால்.

- குல்லூ

## அமெரிக்க டயரிக் குறிப்பு-12

# யார் ஆண்டால்

'திருமாலைக் காணாத கண்ணென்ன கண்ணே' என்று பக்தர்கள் பரவசப்படுவது போலத்தான், லண்டன் மாநகர அபிமானிகளும், நியூயார்க் நகர பித்தர்களும், இந்நகரங்களைப் பார்க்க கொடுத்து வைக்காத பிறவியும் ஒரு பிறவியா என்று எக்களிப்பார்கள். அதன் பசுமையே பார்த்தவரின் கண்ணைக்கட்டி நிறுத்தும். அமெரிக்க சுதந்திர வேட்கையின் விசாலத்தைப் பிரதிபலிக்கும் வகையில், இங்கு எல்லாமே கணக்கற்ற விஸ்தீரணம் கொண்டவை. கட்டடங்கள் பிரும்மாண்டம் என்றால், அதை ஒட்டிய மலர்த் தோட்டங்கள், சாலைகள் எல்லாமே பிரும்மாண்டம். எங்கு திரும்பினாலும் டியூலிப் மலர்கள், கொத்துக் கொத்தாக இலையே தெரியாமல் வண்ணப் பூக்களுடன் சிரிக்கும் பல்வேறு மரங்கள், பசேலென்ற புல்வெளிகள், நாம் எங்கு சென்றாலும் கூடவே வந்து வந்து காட்சியளிக்கும் வளமான நீர்ப் பரப்பைக் கொண்ட போடாமாக் நதி - வாஷிங்டன் நகரத்தின் அழகு கவித்துவம் கொண்டது. மியூசியம்களும், நினைவகங்களும் பாமரர்களுக்கும் எழுச்சியூட்டும் கம்பீரம் கொண்டவை. விஸ்தீரணம், வெட்ட வெளி ஆகிய அம்சங்கள் இங்கு முக்கியம் என்பதால், வாஷிங்டன் டி.ஸி. எனப்படும் மையப் பகுதியிலிருந்து, மற்ற பகுதிகள் எல்லாம் நெடுந்தொலைவு உள்ளவை. தினமும் வெளியிலிருந்து டி.ஸிக்கு வேலைக்கு வருபவர்கள் குறைந்தது நாற்பத்தைந்து மைல்கள் காரை ஓட்டிக் கொண்டு செல்கிறார்கள், மைலாப்பூரிலிருந்து ஆழ்வார்பேட்டைக்குச் செல்லும் சரளத்துடன்.

ஆனால் நியூயார்க்கின் நாடித் துடிப்புக்குப் பழகிவிட்ட நியூயார்க் வாசிகளுக்கு, வாஷிங்டனின் கம்பீர நிதான அழகு ரசிக்காது. அலுக்கும் நிதானம் என்பார்கள். இந்தியாவில் பம்பாய் வாசிகளுக்கு தில்லி அலுப்பதுபோல, சென்னைவாசிகளுக்கு பெங்களூர் அலுப்பதுபோல.

### பாரம்பரியத்தின் மதிப்பு

இந்தியர்களுக்கு இயல்பாக இருக்கும் குடும்பம், குடும்ப மதிப்பீடுகள் ஆகியவற்றைப் போற்றுவது அமெரிக்காவில் அரசியல் கொள்கைகளாகப் போய் விட்டது. சென்ற நூற்றாண்டின் அறுபதுகளின் ப்ரீ லவ் (சுதந்திரக் காதல்) அலை, மற்றும் தீவிர பெண்ணியக்கப் போராட்டங்கள், ஆகியவை அமெரிக்கக் குடும்ப வாழ்வைச் சிதைத்து விட்டதான பயம், மத அமைப்புகளால் மிகத் தீவிரமாகப் பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது. குடும்பம் என்பது பழைமைவாதிகள் என்று கருதப்படும் குடியரசுக் கட்சியின் கோஷம்.

வாஸந்தி

வாஸந்தியின் கட்டுரையை www.kalkionline.comல் முழுமையாகப் படிக்கலாம்

# ன்ன?

ஜனநாயகக் கட்சிக்காரர்களும் குடும்பத்தை முன் நிறுத்திப் பேசாவிட்டால், மக்களின் நம்பிக்கையை இழப்பார்கள். இளைய தலைமுறையே இப்போது பழைமை வாதத்திற்குத் திரும்பி வருவதாகப் பல கட்டுரைகள் வருகின்றன. எல்லாத் திருமணங்களும் இங்கு விவாகரத்தில் முடிகிறது என்பது, ஒரு மிகைப்படுத்தப்பட்ட கருத்து என்பதில் சந்தேகமில்லை. (50% முதல் திருமணங்கள் முறிகின்றன என்று புள்ளி விவரம் சொல்கிறது.) ஆனாலும், திருமண உறவுகள் மிகவும் துட்பமானதாகவே இருப்பதாகத் தோன்றுகிறது. அதனாலேயே வாக்காளர்களுக்குத் தார்மிக பலமளிக்க இப்படிப்பட்ட கோஷங்கள் தேவைப்படுவதாக நினைக்கிறேன். அதுவே மரபுகளையும், தேசத் தலைவர்களையும் போற்றும் உத்வேகத்தைக் கொடுப்பதாகத் தோன்றுகிறது. நவ அமெரிக்காவுக்குத் தொன்மையான சரித்திர பாரம்பரியம் இல்லையென்றாலும், தங்களது 250 வருட சரித்திரப் பாரம்பரியமே, சுதந்திர உலகத்தின் உன்னதச் சித்திரம் என்ற பெருமை, எல்லா இடங்களிலும் தெள்ளத் தெளிவாகப் பறை சாற்றப்படுகிறது. அமெரிக்காவை நிர்மாணித்த அரசியல் சிற்பிகளின் பாரம்பரிய வீடு, நினைவகங்கள், மிகுந்த கவனத்துடன், நேர்த்தியுடன் பாதுகாக்கப்படுகின்றன. வாஷிங்டனுக்கு அறுபது மைல் தொலைவில் அமெரிக்காவின் முதல் அதிபர் ஜார்ஜ் வாஷிங்டனின் இருநூற்றியைம்பது வயது கொண்ட பாரம்பரிய வீடும் அதைச் சுற்றிய இருநூறு ஏக்கர் (வாஷிங்டன் காலத்தில் 8000 ஏக்கர்) நிலமும் (மவுண்ட் வர்னன் என்று பெயர்) அப்படித்தான் மிக அருமையாகப் பாதுகாக்கப்படுகின்றன.

* வாஷிங்டன் Monumentன் உச்சியிலிருந்து...



## அமெரிக்க இந்தியர்களின் அரசியல் ஈடுபாடு

அமெரிக்காவில் அமெரிக்கக் குடிகளாக வாழும், அல்லது வாழவிருக்கும் இந்தியர்களுக்கு, இந்திய அரசியலில் ஆர்வம் இல்லை. இந்தியாவில் வாழும் படித்த மத்திய வகுப்பினரே அரசியலில் அக்கறை இல்லாமல், இராமன் ஆண்டாலும் இராவணன் ஆண்டாலும்

ஒன்றுதான் என்று பரப்பிரம்மமாக இருக்கும்போது, இந்திய அரசியலால் எந்த நேரடித் தாக்கமும் ஏற்படுத்த முடியாத தொலைவுக்குச் சென்று விட்டவர்களுக்கு, இந்தியாவை பா.ஜ.க. ஆண்டால் என்ன? காங்கிரஸ் ஆண்டால்தான் என்ன? பா.ஜ.க.வைப் பற்றி சுத்தமாக அறியாதவர்களும் இருக்கிறார்கள். பொதுவாக இந்திய அரசியல் சூழலைப் பற்றி மோசமான அபிப்பிராயம் இருக்கிறது. இந்தியக் கடவுள்கள், (நமது ஸ்தபதிகளால்) அமெரிக்காவில் கட்டப்பட்ட அழகிய சுத்தமான கோவில்களில் பத்திரமாக இருக்கின்றனர். பரதநாட்டியம் கற்றுக் கொடுக்க, ஒவ்வொரு நகரத்திலும் ஆட்கள் இருக்கிறார்கள்.

நமது பாரம்பரியத்தின் பெருமைகளைக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்க, பாலவிஹார்கள் இருக்கின்றன. அதற்குமேல் என்ன வேண்டும்? ஆனால் இவர்களுக்கு அமெரிக்க அரசியலில் நியாயமான ஈடுபாடு இருக்கிறது. பெரும்பாலும் நான் சந்தித்த இந்தியர்கள், ஜனநாயகக் கட்சியை ஆதரிப்பவர்கள் என்றாலும், அவர்களில் குடியரசுக் கட்சியை ஆதரிப்பவரும் உண்டு. 'பணக்கார இந்தியர்கள்' அவர்கள் என்று ஜனநாயகக் கட்சி ஆதரவாளர்கள் குறை சொல்கிறார்கள். கணவன் மனைவிக்கு இடையே கார சாரமான அரசியல் விவாதங்கள் நடக்கின்றன. வாஷிங்டனிலிருந்து மூன்று மணி நேரப் பயணத் தொலைவில் வர்ஜீனியா பீச் என்ற இடத்தில் இருக்கும் எழுத்தாளர் காஞ்சனா தாமோதரன் என்னைச் சந்திக்க குடும்பத்துடன் வந்திருந்தார். "தற்கால இந்திய அரசியல் சூழலைப் பற்றித்தனக்கு அதிகம் தெரியாது" என்றார் காஞ்சனா. அவரும் அவரது கணவரும் அமெரிக்க அரசியலை மிகத் தீவிரமாக விவாதிப்பதைக் கேட்க சுவாரஸ்யமாக இருந்தது. தமிழில் எழுதினாலும், இங்கு வாழ்வதால் அமெரிக்கனாகவே என்னை நான் உணர்கிறேன் என்று அவர் சொன்னதை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. மண்ணுக்கும் பொருளுக்கும் இருக்கும் ஈர்ப்பு போல, அரசியல் ஈர்ப்பும் தவிர்க்க முடியாதது. இந்த நாட்டுக்காக உழைப்பவர்கள், பிரஜா உரிமைகள் பெற்றவர்கள், அது தரும் சௌகரியங்களை அனுபவிப்பவர்கள், தமது எதிர்காலம் புகுந்த நாட்டின் எதிர்காலத்துடன் பின்னியிருப்பதை உணர்ந்திருப்பவர்கள், அதன் அரசியலில் பங்கு கொள்ளாமல் எப்படி இருக்க முடியும்? இந்தியர்கள் பலர் இங்கு பெரும் பணக்காரர்களாகியிருக்கிறார்கள். ஆனால் அரசாங்கத்தில் செல்வாக்குள்ள பதவியில் இல்லை. சீனர்களும் ஜப்பானியரும் அதில் இந்தியர்களை முந்திவிட்டார்கள். இந்தியர்களிடம் இன்னும் ஏதோ தயக்கம் இருக்கிறது.

(தொடரும்)

## புத்தகத்துக்கு கட் அவுட்!



உலக புத்தக தினத்தை யொட்டி (மே 12) புத்தக திருவிழாவை நடத்தியது வந்தவாசி தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம்!

விழாவில், வந்தவரையெல்லாம் விழி விரிய வைத்தது பத்தடி உயரமும் ஆறரை அடி அகலமும் கொண்ட புத்தக கட்அவுட்!

ஓவியர்கள் ஆதி சுரேஷ், சண்முகம், சுதாகர் உருவாக்கிய இந்த கட்அவுட்டுக்கு ஐடியா கொடுத்தது நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர்கள் கவிஞர் அ. வெண்ணிலாவும், மு. முருகேஷும்!

- அப்பு



# நாக்கு

ஷங்கர் பாபு

தேங்காய் பெரியது இரண்டு, பச்சைப் பருப்பு நூறு கிராம், பச்சை மிளகாய் ஐந்து, வெங்காயம் ஐம்பது கிராம், எலுமிச்சம் பழம் ஒன்று, இஞ்சி ஒரு துண்டு, பீன்ஸ் ஐம்பது கிராம், முருங்கை ஒன்று, அவரைக்காய், கத்தரிக்காய் இரண்டு, கடுகு ஒரு ஸ்பூன், அப்புறம் மிளகாய் வத்தல் நான்கு - தாளிப்பதற்கு என்று சொதி செய்யத் தேவையான பொருள்களை கண்ணன் வாசித்துக் காட்டியது, ஹேமா வீட்டுக்குப் போய் வந்த பிறகுதான். அந்த ஹேமா வீட்டுக்குத்தான் கண்ணன் இப்போது போயிருக்கிறான். அவளது மனம் இலேசாய் நடுங்கியது. இந்தத்தடவை எந்த ருசியோடு வருவானோ?

அவள் கேஸை அணைத்துவிட்டு கரண்டியால் சாம்பாரை ருசி பார்த்தாள். பொதுவாக இப்படியெல்லாம் ருசி பார்க்கவே மாட்டாள். அவளது உப்பு, உறைப்பு கலவைச் சூத்திரத்தில் அவ்வளவு நம்பிக்கை. ஆனால், இப்போது கண்ணன் ஒரு தடவைக்கு நூறு தடவை யோசிக்க வைத்து விட்டான். நாக்குக் கொழுத்த மகன். ஆயிரம் நாக்குகள் கொண்ட கண்ணன்.

சாம்பார் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் அவனுக்குப் பிடிக்க வேண்டுமே. அவளது சிரத்தைகளை எல்லாம் உதட்டுச் சுழிப்பில் வீணாக்கி விடுவான். மீண்டும் ருசி பார்த்தாள். நன்றாகத்தான் இருக்கிறது. அவளுக்கு ஏற்பட்ட திருப்தி 'இதுக்குப் பேர் சாம்பாரா அம்மா?' என்று விமர்சித்த மகனின் முந்தைய அலறலால் மறைந்தது.

துஷ்டன். இருபது வயது வரை நன்றாகத்தான் இருந்தான். அடிக்கிற கூத்து எல்லாம், இப்போது மூன்று வருடமாகத்தான்.

என்ன செய்தாலும் குற்றம். எப்படிச் செய்தாலும் குற்றம். "அம்மா, இதற்குப் பெயர் அடையா? மாணிக்கவேலன் வீட்டில் சாப்பிட்டேனே, அதற்குப் பெயர் அடை. அவர் வரும்போது வெட்கத்தை விட்டு எப்படித் தயாரித்தார்கள் என்று கேட்டுச் சொல்லட்டுமா? ஹேமா சித்தி வீட்ல சொதி சூப்பர்மா. கணேசன் வீட்ல இடியாப்பமும், தேங்காய்ப் பாலும் ருசித்த பிறகுதான் நம் வீட்டில் இடியாப்பம் என்று ஏதோ ஒன்றை தயாரித்து ஏமாற்றி வந்திருக்கிறாய் என்பது தெரிந்தது. அருணாசலம் பெரியப்பா வீட்டில் ரசம் சாப்பிட்ட பிறகுதான், இதுவரை ரசம் சாப்பிட்டதில்லை என்ற குறை நீங்கியது. அரவிந்தன் கல்யாண வீட்டில் அவியல் செய்திருந்தார்கள். அம்மா, அந்த மாதிரி நீ செய்ய இருநூறு வருஷம் ஆகலாம். வெண் பொங்கல் கலையை நீ கற்பதற்கு ஆயிரம் வருஷம் ஆகும்."

அம்மா, அம்மாவாக இருப்பதால் பொறுத்துக் கொண்டாள். சிரித்துக் கொண்டே, அவன் நாக்கைச் சுழற்றுகிறான். சவுக்குத் தோற்றுப் போகும்.

''ம்மா, இந்த வஸ்துவுக்குப் பேர் என்னன்னு தெரிஞ்சுக்கலாமா?''

''ம்மா, நாளைக்கு எந்தப் பலகாரத்தைக் கொலை பண்ணப் போறீங்க?''

அவளுக்கு அவமானமாய் இருந்தது. அவளது முப்பது வருட சமையல் அனுபவத்தில், இப்படி ஒரு நிலை ஏற்பட்டதேயில்லை. உண்மையிலேயே தான் சமைப்பது நன்றாக இல்லையா, என்று

தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். அவளது சமையலைப் பாராட்டி வழங்கப் பெற்ற நற்சான்றுகளை நினைவு படுத்திக் கொண்டாள். வீட்டுக்கு வரும் உறவினர்களிடம் கேட்டாள். அன்போடும், பயத்தோடும், கவலையோடும் கேட்டாள்.

"பிரியாணி எப்படி இருக்கு சிவா?"

"சூப்பர் பெரியம்மா... எங்க அம்மா கூட இது மாதிரிச் செய்ய மாட்டாங்க..!"

"கண்ணன் இது நல்லா இல்லைம்பான்..!" (பிரியாணியைக் கண்டுபிடிச்சவன் நல்ல வேளை செத்தான். இந்தப்






படுகொலையை அவனால் தாங்கியிருக்க முடியாது.)

"புளிக் குழம்பு எப்படி பேபி இருக்கு?"

"நல்லாயிருக்குப் பெரியம்மா..."

ஆக, தனது சமையல் நன்றாகத்தான் இருக்கிறது. எல்லோரும் சொல்லத்தான் செய்கிறார்கள். ருசித்துச் சாப்பிடுகிறார்கள். பக்கத்து வீட்டிலுள்ள கல்யாணமாகாத தாவணிப் பெண்கள், 'அது எப்படிச் செய்யணும், இது எப்படிச் செய்யணும்?" என்று கேட்கிறார்கள். இவன் ஒருத்தன்தான் குறை சொல்லித் திரிகிறான்.

"ஏண்டா, நா செய்றது ஒண்ணு கூட நல்லா இல்லையா? கரெக்டா நா பண்ணலியா?"

"இருக்கே!"

"என்னது?"

"வெந்நீர் சூப்பரா போடறியே அம்மா..."

"இன்னிக்குத் துவையல் எவ்வளவு வாசனையா, டேஸ்டா இருக்கு பாருங்க. அது கூட நல்லா இல்லைங்கானே..." என்று தன் கணவரிடம் வருத்தப்பட்ட போது, 'விடு அவனை. பொழுது போகலைன்னு ஏதாவது சொல்லிட்டு இருப்பான்..."என்றார் அவர். தெரிந்தவர்கள் "உங்கள் சமையல் நல்லா இல்லையா? ஆச்சரியமா இருக்கே..." என்றார்கள்.

அவன் நிதானமாய் யோசித்துப் பார்த்ததில் சில ஆறுதல்கள் கிடைத்தன. கண்ணன் பசித்த நேரத்தில் சில வீடுகளில் சாப்பிட்டிருக்கிறான். அது அவனுக்கு தேவாமிர்தமாய் இருந்திருக்கிறது. சில நேரங்களில் உணவு நன்றாகக் கூட அமைந்திருக்கலாம். அந்நியச் கைகளின் சமையல் வித்தியாசமாகத்தான் இருந்திருக்கும். இதற்கு இவன் வயதில் உள்ள பையன்கள் தனது சாப்பாட்டையும், சமையலையும் புகழ்வதே சாட்சி. தொடர்ந்து ஒரே கைப்பக்குவத்தில் சாப்பிடும் போது, எதுவும் திகட்டி விடும்.

இந்நிலையில் அவள் இரண்டு சாபங்களைத் தயாரித்தாள். ஒன்று, வேலை கிடைத்தவுடன் கண்ட கண்ட ஊர்களிலும் தங்கி, ஓட்டல் சாப்பாடு சாப்பிடுவானே, அப்போதுதான் தனது அருமை தெரியும். இரண்டு, 'நாளைக்கு உனக்கு கல்யாணம் ஆகட்டும். பார்ப்போம், வருகிறவள் எப்படி சமைக்கிறாள் என்று.

பிறகு மிகுந்த யோசனையுடன் இந்தச் சாபங்களை அவள் பிரயோகிக்காமல் தவிர்த்து விட்டாள். பாவம், பையன் ருசியை அலசக் கூடிய நாக்கை உடையவன். ரசித்துச் சாப்பிடக் கூடியவன்.

இப்போது ஒவ்வொரு நாளும் எந்த ரீதியில் விமர்சிப்பான் என்று எதிர்பார்க்கத் துவங்கினாள். தனது கணிப்பு சரியாகும் போது, வருத்தத்தை மறைத்




துக் கொண்டு புன்னகை செய்வான். "அம்மா, தாவரங்களோட பாஷையை உன்னால உணர முடிஞ்சதுனா, கத்தரிக்காய், "என்னைப் பொரியல் செஞ்சு வேஸ்டா படுத்தாதே...னு அலறியதை நீ கேட்டிருப்ப..."

''சீக்கிரம் உனக்கு கல்யாணம் பண்ணி வைச்சிரணும்... என்னோட சமையல் உனக்குத் திகட்டிப் போச்சு...''

''பெண்ணுக்குச் சமையல் தெரியுமா?'' என்று தான் கேட்டான். பெண் சிரித்துக் கொண்டே தலையாட்டியது. ''சமாளிச்சிருவா...'' என்றது பெண்ணின் அம்மா.

அவளுக்குத் திருப்தியாக இருந்தது. பையன் வேலை பார்க்கும் இடத்திலேயே தனிக்குடித்தனம் அமர்த்தி, சில வாரங்களுக்குப் பிறகு பையனின் வீட்டுக்குப் போனாள். உள்ளுக்குள் ஓர் ஆர்வம். மருமகள் ஈஸ்வரியின் சாப்பாடு எப்படி இருக்கும்?'

''இதுல உப்பு கொஞ்சம் கூடிப் போச்சு. இதுல காரம் அதிகம், உருளைக் கிழங்கு கொஞ்சம் வெந்திருக்கலாம்...'' அடுத்த தடவை திருத்திரலாம். என்னங்க, சரிதானே...?''

"ம்... மோசமில்ல ஈஸ். ஆஹா, சொர்க்கம்னு ஒண்ணு இருந்தா, இந்தப் புளிக் குழம்பை அங்க பரிமாறுவாங்க ஈஸ்..''

''கேலி பண்ணாதீங்க... பாருங்க, அத்தே..''

'நிஜம்...'' என்றான் சீரியஸாக.

மகனின் பேச்சைப் பார்த்து அவள் வாயடைத்துப் போயிருந்தாள். சமையல் செய்தவளே காறித் துப்புகிறாள், வாயில் வைக்க முடியவில்லை என்கிறாள், இவன் இப்படிப் புகழ்கிறானே. இதை சொர்க்கத்தில் பரிமாறினால் எல்லோரும் நரகத்திற்கே ஓடிவிடுவார்கள்.

மருமகள் அவள் அம்மாவுடன் ஃபோனில் பேசியது:

"தூரக் கொட்டினேன்மா... ஆமா... நீ பண்றதை பல நாள் வேடிக்கை பார்த்திருக்கேன். சரிம்மா... சரி... நீ வறுத்து அரைப்பியே... அதுவா? அவரா, அவருக்குப் பிடிச்சிருந்தது.... அடுத்த தடவை நீ வரும்போது எப்படிச் செய்யணும்னு ஒரு நோட்ல எழுதிக் கொண்டாமா... நான் டீ.வில பார்த்து ஏதாவது கத்துக்க முடியுமான்னு பாக்கறேன். நேத்து ஒரு சமையல் புத்தகம் பார்த்து "ஆலு மட்டர் சப்ஜீ'னு ஒரு அயிட்டம் செஞ்சேன்... ரொம்பக் கேவலமா இருந்துச்சும்மா, பிறகு அம்மா, கேக்கணும்னு நினைச்சேன், மூணு பேருக்கு காபிக்கு எத்தனை ஸ்பூன் காபித் தூள் போடணும்?"

உற்சாகமாய் பேசிக் கொண்டிருந்த அந்த ஜிங்கிடியைச் சலனமின்றி பார்த்தாள் அவள்.

ஒரு வாரத்துக்குப் பிறகு அவன் மட்டும் வீட்டுக்கு வந்திருந்தான். மௌனமாய்ச் சாப்பாடு போட்டாள். மகன் ஏதேதோ பேசியவாறு சாப்பிட்டான்.

ஆனால் சாப்பாடு பற்றி ஒரு வார்த்தை இல்லை. அவளுக்குக் கண்ணீர் வரும் போலிருந்தது. வழக்கம் போல் விமர்சிப்பானா? நான் நானாக இருப்பேனா...? பரிமாறுகிற அவளது கரங்கள் நடுங்கின. அவன் விமர்சித்தாலும், விமர்சிக்காவிட்டாலும் தனக்கு வருத்தம் ஏற்பட்டு விடும் என்றுதான் அவளுக்குத் தோன்றியது. அவளது முயற்சியையும் மீறி, வருத்தத்தின் கனம் கூடிக்கொண்டே போனது. ○



# வம்பில் வள்ளுவர்!



"**வ**ள்ளுவரின் பார்வையில் பெண்ணுக்கு அறிவு கிடையாது. குடும்பத்தை வழி நடத்தும் ஆளுமை இல்லை. அதனால்தான் மனைவி சொல் கேட்கக் கூடாது என்று 'பெண்வழிச்சேரல்' என்ற அதிகாரத்தில் ஆணாதிக்கம் காட்டியுள்ளார். மனைவி சொல்லை கணவன் கேட்பது மகா பாவம். மனைவியை விட நண்பனே முக்கியம் என்கிற வள்ளுவர், 'வாழ்க்கைத் துணை நலம்' என்கிற அதிகாரத்தில் கணவன் - மனைவி ஒன்று சேர்ந்து எப்படி இல்லறத்தை நடத்திட வேண்டுமென விளக்குகிறார். ஏனிந்த முரண்பாடு?" - என வள்ளுவரை வம்புக்கிழுக்கிறது vanakam.net.tc

(புது சர்ச்சைக்கு 'அவல்' கிடைச்சாச்சு. மெல்ல ஆரம்பியுங்கோ!)

**கு**ழந்தைகளுக்குக் கதை சொல்லும் பழக்கம் மறைந்து வருகிறது. ஆனால் அந்த வேலையைச் செய்கிறது candlelightstories.com. மந்திர தந்திரக் கதைகள், நாடோடிக் கதைகள் மட்டுமில்லாமல், வார்த்தை விளையாட்டுகள், சவால்கள், பேப்பர் பொம்மைகள் செய்தல், அனிமேஷன் விளையாட்டுக்கள் என குழந்தைகள் குதூகலிக்க அள்ளித் தெளித்துள்ளனர். கதைகள் இனிமையான குரலில் ஆடியோவாகக் கிடைப்பது சிறப்பம்சம்.

(அதுக்காக பாட்டி வடை சுட்ட கதையைத் தேடாதீங்க).

**பா**லிவுட் நடிகைகளில் 'நடிப்பு' என்பதன் அர்த்தம் தெரிந்த நடிகை யார்? என்று சர்வே எடுத்து வருகிறது bollywoodmantra.com. பதிவான 650 வாக்குகளில், 39 வாக்குகளுடன் வெறும் ஏழாவது இடமே கிடைத்துள்ளது அழகுப் புயல் ஐஸ்வர்யாவுக்கு. முதலிடத்தில் 282 வாக்குகளுடன் மலர்ந்த புன்னகையுடன் இருக்கிறார் கஜோல்.

('தியா மிர்சா'வெல்லாம் நடிக்கிறதா சொல்லி, ஒரே ஒரு வோட்டு விழுந்திருக்கு.. அந்த 'ஜொள்ளர்' யாரோ)

### ஜோக்

**ச**ர்தார்ஜி, ஒரு பெண்ணிடம் தன் காதலைச் சொன்னார். அவளோ, "நான் உங்களைவிட ஒரு வருடம் பெரியவள்" என்றாள். சர்தார்ஜியோ விடாமல், "பரவாயில்லை... நான் ஒரு வருசம் கழித்து கல்யாணம் பண்ணிக்கிறேன்..." என்றார் இளித்துக் கொண்டே!



### ஜாலி SMS

Ford-க்கும் OxFordக்கும் என்ன வித்தியாசம்
Ford-னா வண்டி! 'Ox'Ford-னா மாட்டு வண்டி!

- முகில்




# வெண்ணெய்

சீதா ரவி

நவநீத் ஆவல் ததும்ப பார்த்துக் கொண்டே இருப்பான்...

*"காய்ச்சின பாலு தரேன்...*
*கல்கண்டு சீனி தரேன்...."*

மழலை மெட்டில் நான் பாடிக் கொண்டே வர, கவனமாகக் கையை நீட்டுவான்.

*"கையில் வெண்ணெய் உருட்டித் தரேன்"* என்று பாடியபடி கற்பனையாக ஒரு வெண்ணெய் உருண்டையை அந்தக் குஞ்சுக் கையில் வைக்கிறபோது, பாடல் சற்று நிதானித்து, ஒரு கணம் தடைப்பட்டு மீண்டும் தொடரும்...

*"வெயிலிலே போக வேண்டாம்!*
*மாடு மேய்க்க கண்ணே, நீ*
*போக வேண்டாம் சொன்னேன்!..."*

யசோதை கெஞ்சுவதும், கண்ணன் மிஞ்சுவதுமாக அமைந்த அந்த குழந்தைப் பாட்டுதான் எங்களுக்குப் பிடித்த விளையாட்டு.

நவநீதகிருஷ்ணன் அவன் முழுப் பெயர். பூஜை அறையில் நான் பார்த்துச் சொக்கிய பாலமுகுந்தன் படமா? பாட்டி சொன்ன கிருஷ்ண லீலை கதைகளா, அல்லது அவள் கனத்த மத்தைப் போட்டு நுரைக்க கடைந்த தயிரிலிருந்து திரண்டு மிதந்த இளமஞ்சள் வெண்ணெயா.. அல்லது இவை அனைத்துமாக எனக்குள் கிளர்த்திய ரம்மியமான ஒரு பிம்பமா... தெரியவில்லை... கல்யாணம் ஆவதற்கு முன்பே முடிவு செய்துவிட்டேன், எனக்கொரு மகன் பிறந்தால், அவன் பெயர் நவநீதகிருஷ்ணன்.



"வாடிக்கையாளரிடம் அக்கறையுள்ள ஒரு ஹோட்டல் முதலாளியைப் பார்த்ததே இல்லை."

"எப்படிச் சொல்றே?"

"சாப்பிட்டதும் பில்லுடன் கூடவே ஜீரண மாத்திரையும் தர்ரார்!"

- எம். அசோக்ராஜா

எனது இந்தக் 'கன்னி'க் கனவைக் குமாரிடம் சொன்னபோது சிரித்து விட்டார்.

"நமக்குப் பையன் பிறக்கணும்னு அவ்வளவு ஆசையா...?"

வெட்கமாயிருந்தது.

"நவநீதம்னா வெண்ணெய், தெரியுமா...?"

"தெரியும்..."

"வெண்ணெயைத் திருடற விளையாட்டு ஒரு குறியீடுதான் தெரியுமா..?"

சற்றுத் திகைத்துப் பார்த்தேன்...

"மோர்ல ஒட்டாம மிதக்கற வெண்ணெய் மாதிரி சம்சார ஸாகரத்துல பட்டும் படாம மிதந்தா... கிருஷ்ணன் நம்மை வெண்ணெய் மாதிரி, கொள்ளை கொண்டுடுவான். தேடி வந்து அபகரிப்பான்... நம்மை அப்படியே திரட்டி, அவன்கிட்டே ஒப்படைச்சுடணும்..."

தத்துவம்! சிரிப்பு வந்தது.

"எனக்கு வெண்ணெய் பிடிக்கும். கிருஷ்ணனை ரொம்ப ரொம்பப் பிடிக்கும்" என்றேன்.

**ஆ**சைப்பட்டதைப் போலவே பிறந்தான் நவநீத். கடைந்த வெண்ணெயின் ருசியைக் காட்டாமலே, காலமும் நானுமாக அவனை வளர்த்தாகி விட்டது. மூன்று வயதில் ஃப்ரிட்ஜ் கதவருகே பிடிவாதமாய் நின்று கொண்டு, சைகையாலேயே கடைச்சரக்கு வெண்ணெயைச் சுட்டி, மீண்டும் மீண்டும் கேட்டு வாங்கி சாதித்துக் கொள்வான்.

இன்று அதே பிடிவாதத்துடன் தான் விரும்பித் தேர்ந்தெடுத்த படிப்புக்காக வீட்டைப் பிரிகிறான். அயல்நாடு செல்ல கொஞ்சமும் கலங்காமல் அவன் விடை பெறுவது, எனக்கு அச்சமூட்டுகிறது.

வழியனுப்பி ஒரு வாரம் ஆன பிறகும் கண் கலங்கும் என்னிடம், குமார் நினைவூட்டுகிறார்:

"பட்டும் படாம இருக்கணும்... வெண்ணெய் மாதிரி... இல்லைன்னா வாழ்க்கைல ரொம்பக் கஷ்டம்... நவநீதகிருஷ்ணன்னு நீதானே பெயர் வைச்சே...?"

"உருகாத வெண்ணெய்கூட இருக்கா என்ன...?" கோபமாக நான் கேட்க, திகைக்கிறார். "இல்லை...!" என்கிறார் மெதுவாக.

*"காய்ச்சின பாலும் வேண்டாம்*
*கல்கண்டு சீனி வேண்டாம்!"*

மழலைப் பாட்டில் கிருஷ்ணனின் மறுப்பு, நெஞ்சின் நினைவுக் கதவுகளை மோதித் திறக்கிறது... கல்கண்டு, சீனியை மறுப்பவன் வெண்ணெயை மறந்தே போகிறான்.

*"உல்லாசமாய் மாடு மேய்த்து*
*ஒரு நொடியில் வந்திடுவேன்...*
*போக வேண்டும் தாயே...*
*தடை சொல்லாதே நீயே!"*

'ஒரு நொடியில் வந்திடுவேன்....!' என்கிற சமாதானத்தில் கள்ளத்தனம் திரண்டு மிதக்கிறது!



# சமையல் ராணியின் சவால் வாழ்க்கை!

**சமையற்கலை நிபுணத்துவம். இது தான் கையிலிருக்கும் ஒரே திறமை. கூடவே கணவர் தரும் ஊக்கம். இந்த இரண்டு சக்திகளையும் வைத்துக் கொண்டு, கற்களும், முட்களும் நிறைந்த பாதையில் நடந்து வந்து, ஒரு வெற்றிகர மான தொழிலதிபராக ஜெயித்திருக்கிறார் மேரி ப்ளாரன்ஸ் ராணி. இவரது நிறுவனத் தின் தயாரிப்புகளுக்கு, இன்று உலக நாடு களில் ஏக வரவேற்பு. இவரின் வெற்றிக் கதையை அவரே இங்கே பந்தி வைக்கிறார். படித்துச் சுவைத்து, தன்னம்பிக்கைப் பசியை தீர்த்துக் கொள்ளுங்கள்.**

“நான் ஒரு இலங்கைத் தமிழ்ப் பெண். யாழ்ப்பாணம் மாவட்டத்தில் உள்ள அச்சுவேலிதான் எனது சொந்த ஊர். ஒன்பது பேர் கொண்ட பெரிய குடும்பம். உயர்நிலைப் பள்ளியில் நான் தேர்ந்து கொண்ட படிப்பு ஹோம் சயின்ஸ். வீட்டில் சமையற்கட்டுப் பக்கமே அம்மா விடமாட் டார். இதனால் படிப்பின் நிமித்தம் பள்ளியி லேயே விதவிதமாக சமைத்துப் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. பள்ளிப்படிப்பு முடிந்ததுமே திருமணம் செய்து வைத்துவிட் டார்கள். கணவரின் அரசுப் பணி நிமித்தம், கொழும்புவில் குடியேறினோம். அவர் வித விதமான, உணவுகளை விரும்பிச் சாப்பிடும் ரசிகர். நானும் புதிய ரெசிப்பிக்களை அவ ருக்கு அறிமுகம் செய்வேன். சாப்பிட்டு விட்டு சமையல் ராணி என்று பாராட்டு வார். ஊதியத்தின் பெரும்பகுதியை எனக்குச் சமையல் சாமான்கள் வாங்கித் தர செலவிடுவார்.

ஒரு முறை நாங்கள் குடியிருந்த வீட்டு உரிமையாளரின் மகனுக்குப் பிறந்த நாள். 'கேக், டின்னர் என சமையல் பொறுப்பை என் மனைவி எடுத்துக் கொள்வாள்' என்று கணவர் சொல்லிவிட, பிறந்த நாளுக்கு வந்த எல்லோரும், என்னைத் தேடிப் பிடித்து பாராட்டி விட்டுப் போனார்கள். எனது





கணவருக்கோ சந்தோஷம் தாங்கவில்லை. “உனது திறமையை வீணாக்க வேண்டாம். எனது வேலையை விட்டுவிட்டு உணவுப் பொருள்கள் தயாரிப்பில் இறங்கலாம்” என்றார். அதற்குள் துபாயில் ஒரு பன் னாட்டு உணவுப் பொருள்கள் நிறுவனத்தில் கணவருக்கு வேலை கிடைத்தது. அங்கே நாம் தொடங்கப்போகும் தொழிலுக்கு புதிய

அனுபவம் கிடைக்கக் கூடும் என்று கணவரை அனுப்பி வைத்தேன். இரண்டாண்டு ஒப்பந்தம் முடிந்து, அவர் இலங்கை திரும்பியவுடன் தொழிலைத் தொடங்குவ தாக திட்டம். அது 1983ஆம் வருடம். அவர் நாடு திரும்ப ஆறுமாத காலமே எஞ்சியிருந்த நிலையில்,




இலங்கையில் தீவிரமான இனக் கலவரம் வெடித்தது.

வீட்டை அப்படியே போட்டுவிட்டு, அணிந்திருந்த புடைவையோடு, குழந்தைகளுடன் சொந்த தேசத்து அகதிகளாக அம்மன் கோவிலில் அடைக்கலம் புகுந் தேன். அங்கே வந்த இராணுவத்தினர் கோவிலுக்குள் புகுந்து, பதினெட்டு வயதுக்கு உட்பட்ட அடையாள அட்டை இல்லாத எல்லா ஆண்களையும் பிடித்துக் கொண்டு போனார்கள். அதில் பன்னிரண்டு வயதே நிரம்பிய எனது மகனும் ஒருவன். என்னால் கதறி அழ மட்டுமே முடிந்தது. தொலைபேசி இல்லை. மின்சாரம் இல்லை. தமிழர்கள் காலி செய்த வீடுகளை இராணு வத்தினர் ஆக்கிரமித்துக் கொண் டார்கள். கணவரையும் தொடர்பு கொள்ள முடிய வில்லை. மற்றவர்களோடு மக னைத் தேடி அலைந்து, ஒரு மாதத்திற்குப் பிறகு கண்டு பிடித்தேன்.

கொழும்பு நகருக்கு வந்து, கணவரோடு தொடர்பு கொண் டேன். அடுத்த கணமே புறப் பட்டு வந்தார். உடனே வெள்ள வத்தைக்குச் சென்று குடியேறி னோம். இதற்குள் இந்திய இலங்கை அமைதி ஒப்பந்தம் ஏற்பட்டதில் கொஞ்சம் மூச்சு விட்டுக் கொண்டு, தொழிலை ஆரம்பிக்கலாம் என்று முடிவு செய்தபோது, கணவருக்கு இதய நோய். இருந்த பணத்தையெல் லாம் எடுத்துக் கொண்டு சென்னைக்கு வந்தோம். இங்கே ஏஞ்சியோபிளாஸ்ட் செய்து கொண்டு திரும்பினோம்.

தொழில் தொடங்குவதைப் பற்றி நினைக்க முடியாமல் செய்துவிட்டது வாழ்க்கை. இந்த நேரத்தில் இனக் கலவரத்தால் கனடாவிற்கு புலம் பெயர்ந்த தமிழர்களுக்கு உணவுப் பொருள் களை ஏற்றுமதி செய்து வந்த எனது கணவரின் நண்பர் ஜெய ராஜ் எங்களிடம் வந்து, 'எனக்கு உணவுப் பொருள்கள் தயாரித் துக் கொடுங்கள்' என்று கேட்டுக் கொண்டார். அவர் தந்த நம் பிக்கையை வைத்துக் கொண்டு, கொழும்பு டெகிவலையில் உள்ள கம்பெனி வீதியில், சிறு அளவில் தொடங்கினோம். யாழ்ப் பாணச் சுவையோடு நாங்கள் தயாரித்துத் தந்த அரிசிமா, மசாலா பொடிகள் 'ரெட் ரூபி' என்ற பெயரோடு, ஒரே

ஆண்டில் வரவேற்பைப் பெற்றன. லட்சியக் கோட்டையைப் பிடித்துவிட்டது போல எனக்கும் கணவருக்கும் உற்சாகம். அதில் திடீரென்று இடிவிழுந்ததுபோல, டெகி வலை பகுதி முழுவதையும் இலங்கை இராணுவம் ஆக்கிரமித்துக் கொண்டதால், அடிப்படை வசதிகளைக் கூட அப்படியே விட்டுவிட்டு வெளியேறினோம்.

எங்கள் தயாரிப்புகளின் மூலப் பொருள்கள் அத்தனையும் தமிழகத்திலிருந்து இறக்குமதி செய்து வந்த நிலையில், சென்னையிலேயே, ஏன் தொடங்கக் கூடாது என்று தோன்றியது. இந்த நேரத்தில் ரெட் ரூபியின் தரம் பற்றிக் கேள்விப்பட்ட சென்னை ஏற்றுமதியாளர்களான ஈஸ்வரன் பிரதர்ஸ்,



"புதுசா பதவி ஏற்றுள்ள நீங்க தீவிரவாதத்தை ஒழிக்க என்ன நடவடிக்கை எடுக்கப் போறீங்க?"

"குண்டு துளைக்காத கார் நிறைய இறக்குமதி செய்வோம்!"

- எஸ். மோகன்

'நீங்கள் தாராளமாக இங்கே வாருங்கள்' என்று ஊக்கமளித்தார்கள். மிகவும் நெருக்கடியான கால கட்டத்தில், எங்களுக்கு ஃபேமிலி விசா வாங்கிக் கொடுத்தார்கள். அவர்களோடு இணைந்து, 1997ல் போரூரில் தொழிற்சாலையை ஆரம்பித்தோம்.

முழுவதும் பெண்களுக்குத்தான் வேலை கொடுக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு, கைம்பெண்கள், கைவிடப்பட்டவர்கள், மிகுந்த வறுமையான குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் என்று தேர்வு செய்து பயிற்சி கொடுத்தேன்.

ஊழியர்கள் வீட்டிலிருந்து கொண்டு வரும் உணவு, அவர்களுக்குப் போதிய சக்தியை அளிக்காது என்பதை அறிந்து, தரமான மதிய உணவுக்கு தொழிற்சாலையிலேயே ஏற்பாடு செய்தோம். தொழிலாளர்களின் ஒத்துழைப்பினால் முதலில் கனடாவுக்கு மட்டுமே ஏற்றுமதி செய்து வந்த நாங்கள், லண்டன், பிரான்ஸ், ஜெர்மனி, ஆஸ்திரேலியா, டென்மார்க் என்று ஏற்றுமதி செய்யத் தொடங்கினோம். ஆனால் மீண்டும் சோதனை. கடந்த 2002ஆம் ஆண்டு என்னைப் புற்று நோய் தாக்கியது. ஆறுமாத காலம் மருத்துவமனையில் படுத்த படுக்கையாக சுருண்டு போனேன். ஹீமோ தெராபி சிகிச்சையில், தலை முடி முழுவதும் கொட்டி, உடல் கறுத்துப் போனது. கணவரோ என்னைவிட்டு ஒரு அங்குலம் கூட அகலவில்லை. தொழிற்சாலை அவ்வளவுதான் என்று நினைத்தேன். ஒரு வழியாக உயிர்பிழைத்து, எட்டு மாதத்திற்குப் பிறகு தொழிற்சாலைக்குப் போனபோது, சிறு தேக்கம் கூட இல்லாமல், தெளிந்த நீரோடைபோல அத்தனை பணிகளும் நடந்து கொண்டிருந்தன.

'நாங்கள் தந்த பயிற்சியும், தன்னம்பிக்கையும், அதைவிட, பாகுபாடு காட்டாத அணுகுமுறையும், இன்று ஐ.எஸ்.ஓ. தரச்சான்று பெற்ற நிறுவனமாக ஈஸ்டர்ன் ரெட் ரூபி உயர்ந்திருக்கிறது' என்று பெருமிதம் கொள்ளும் மேரி ப்ளாரன்ஸ் ராணி, நோயிலிருந்து மீண்டு அடுத்த கட்டத்திற்கு முன்னேறியிருக்கிறார்.

தற்போது ஐ.எம்.எஃப்.ஆர். என்ற பெயரில் புளியோதரை மிக்ஸ் தொடங்கி, பஞ்சாபி பேஸ்ட் வரை, உடனடி சமையல் பொருள்களைத் தயாரித்து, உள் நாட்டுச் சந்தையில் விற்பனையைத் தொடங்கி இருக்கிறார். கலவையூட்டிகள், ப்ரிசர்வேட்டிவ்கள் உள்ளிட்ட எந்த இரசாயனப் பொருள்களும் இல்லாமல், இருமுறை ரீஃபைண்ட் செய்யப்பட்ட இந்த ரெடி டு குக் சமையல் பொருள்களை, ஃப்ரிட்ஜ் வசதி இல்லாதவர்களும் வாங்கிச் சுவைக்கலாம் என்பதுதான் சிறப்பம்சம். இந்த ஐ.எம்.எஃப்.ஆர். தயாரிப்புகளை பகுதி நேரமாகவும், முழு நேரமாகவும் விற்று, வருவாய் ஈட்ட விரும்பும் பெண்களுக்கு வேலைவாய்ப்புக்கு வழிகாட்டத் தயார் என்று சொல்லும் ப்ளாரன்ஸ் ராணி, இலங்கையில் இனக் கலவரததால் துன்புறும் பெண்கள், இதே முறையில் பயனடைய முன் வந்தாலும் முழு உதவிகளை செய்யத் தயார் என்கிறார்.

கட்டுரை, படங்கள் : ஸ்ரீசக்கரம்



ஜங்ஷன் பேருந்து நிலைய வாயிலில் நின்று கொண்டு அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்தான் இசக்கி. வியர்வை சட்டையை நனைத்துக் கொண்டிருந்தது. தோளில் கிடந்த துண்டை எடுத்து முகத்தைத் துடைத்தான்.

பெட்டிகளோடும், மஞ்சள் பைகளோடும் ஜனங்கள் பேருந்தில் ஏற பரபரத்துக் கொண்டிருந்தார்கள். எப்போதாவது வெளியூர்களுக்கு அல்லது கல்யாண வீடுகளுக்குப் போகும் போதுதான், அவன் உடம்பு சட்டையைப் பார்க்கும். மற்ற நேரங்களில் அவனிடமிருக்கும் இரண்டு சட்டைகளும், பொட்டலத்துக்குள் அடைகாக்கும்.

ஊரில் ஹோட்டல் தொழில் இசக்கிக்கு. 'மந்திரமூர்த்தி காபி கடை' என்று அந்த ஹோட்டலுக்கென ஒரு பிரத்யேக பெயர் இருந்தாலும், ஊர் ஜனங்களுக்கு அது 'இசக்கியா பிள்ளை கடை.' இருநூறு வீடுகள் இருக்கிற அந்தக் கிராமத்தில், இந்தக் கடையை விட்டால் வேறு போக்கிடம் இல்லை.

வாசலில் போடப்பட்டிருக்கும் பெஞ்சில் உட்கார்ந்து கொண்டு, வக்கணையாகப் பொரணி பேசுபவர்களைத் தமது கடை ருசிதான் இழுக்கிறது என்கிற நினைப்பு இசக்கிக்கு. ஆனால் கடையில் சிரித்துச் சிரித்துப் பரிமாறும் அவனது சம்சாரம்தான், இந்த இழுவைக்குக் காரணமென்பது அவனுக்குத் தெரியாத உண்மை.

காலையும் மாலையும் இட்லி, தோசையும் நண்பகல் சாப்பாடும் இசக்கியா பிள்ளைக் கடையின் சிறப்பம்சங்கள். இதை விட்டால் வேறு ஐட்டங்கள் செய்யவோ, அப்படியே செய்தாலும் ஊரிலுள்ளவர்கள் அதை வாங்கவோ வாய்ப்பில்லை. சாப்பிட வரும் ஒரு சில உள்ளூர்க்காரர்களுக்கு, இந்த இட்லியும் தோசையும் பெரிய விஷயமாக இருந்தது.

கடைதான் உலகமென்றிருக்கிற இசக்கி, பொட்டல்புதூர் சந்தைக்குத் தினமும் சைக்கிளில் சென்று காய்கறி வாங்கி வருவதைத் தவிர, வேறு ஊர்களுக்குச் செல்வதில்லை.

நெருங்கிய சொந்தங்களின் கல்யாணம் காட்சி, துஷ்டி என்றால்தான் வெளியூர்களுக்கு. அப்படி அவன் வந்த ஊர்களில், திருநெல்வேலி ஜங்ஷன் அவனுக்குப் பிடித்திருந்தது. இந்தப் பிடித்தலுக்குப் பேருந்து நிலையத்தின் பின்புறமிருந்த அந்த ஹோட்டலும், காரணம். அதன் அமைப்பும் அழகும் அவனை 'வா வா'




என்று அழைக்கும். பேண்ட் சட்டை அணிந்த இளைஞர்களும், இளைஞிகளும் உள்ளே போவதும் வெளியே வருவதுமாக இருப்பதைப் பார்த்தபோது, அப்படி அங்கே என்னதான் இருக்கிறது என்று பார்த்து விட வேண்டும் என்ற துடிப்பு.

இங்கு விலை அதிகமென்றும், ருசி நாக்கைச் சுழட்டுமென்றும் திருநெல்வேலியில் தமது பெண்ணைக் கட்டிக் கொடுத்திருக்கிற முத்தையா சொல்லியிருக்கிறார். இதையடுத்து அவனது

ஆவல் அதிகரித்து அதிகரித்து, அடுத்த முறை ஜங்ஷன் போனால் கண்டிப்பாகச் சாப்பிட்டு விட வேண்டுமென்று முடிவெடுத்தான்.

இன்று காலையில் அவனது மனைவியின் உறவினர் திருமணத்துக்காக வந்திருந்த இசக்கி, திருமண வீட்டுச் சாப்பாட்டை உதறிவிட்டு, இதோ ஹோட்டலின் முன்பு நின்று கொண்டிருக்கிறான்.



ஹோட்டலின் அருகில் வந்ததும் சின்ன பரபரப்புத் தொற்றிக் கொண்டது. காரணமில்லாமல் விரல்கள் நடுங்கின. வாசல் கதவு கண்ணாடி, கறுப்பு நிறத்தில் இருந்தது. அதனுள்ளே டேபிள்களில் கறுப்பு வெள்ளை நிறத்தில் மனிதத் தலைகள்.

கதவை இழுத்தான். அது வராமல் நின்றது. அடுத்து உள்ளேயிருந்து ஒருவன் கதவை இழுத்துத் திறந்தான். இவனது தோற்றம் அவனுக்கு ஒரு மாதிரியாக இருந்திருக்க வேண்டும். இவனையே பார்த்தான். அந்தப் பார்வை, 'இவன் ஏன் இங்கே வருகிறான்?' என்பது போலிருந்தது.

"சாப்பிடவா?" அவனே கேட்டான்.

"ஆமா."

"வாங்க."

உள்ளே போனான். ஜில்லென்ற காற்று. ஏ.சி. வெளியில் அடித்த வெக்கை அப்போது மாயமானது. வியர்வை வடிந்த சட்டைக்குள், குளிர் காற்று பட்டு உலர்ந்தது சுகமாக இருந்தது. ஒரு பக்க டேபிள்கள் நிரம்பி வழிந்தன. மூன்று பேர்கள் அமரும்படி காலியாக இருந்த டேபிளில் துண்டை உதறி உட்கார்ந்தான். "யாராவது வருவார்களா?" என்று பார்த்தான்.

வெள்ளைச் சட்டையும் கறுப்பு நிறப் பேண்ட்டும் அணிந்த ஒருவர் (சூபர் வைசராம்) "நீங்க மட்டும்தானா...? இது ஃபேமிலி உட்கார்ற இடம். அந்தப் பக்கம் போங்க" என்று அதட்டிவிட்டுப் போனார்.

"கண்ட இடத்துல உட்காரக் கூடாது போலுக்கு" என்று நினைத்தவன், முன் பக்கம் இரண்டு சேர்கள் போடப்

ஏக்நாத்

பட்டிருந்த டேபின் முன் நின்று, "இங்க உட்காரலாமா?" என்று கேட்டான்.

"சாப்பிடத்தான வந்திருக்கியே... உட்கார்ந்தாதான் சாப்பிடமுடியும்" என்று இளக்காரமாச் சொன்ன அந்த சர்வர், மெதுவாகச் சிரித்தான். அதைக் கேட்டு இவனுக்கு முன் பக்கமும், இடப்பக்கமும் சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்கள் திரும்பிப் பார்த்தது அவமானமாக இருந்தது. உட்கார்ந்தான்.

வெள்ளைச் சட்டையணிந்த வேறொருவன், கையில் சின்ன நோட்டுடனும், மெனு கார்டுடனும் வந்தான். கார்டை அவன் முன் வைத்துவிட்டு, காலில் சுடு தண்ணிப் பட்ட அவசரத்தில் போனான்.

"சாப்பிட வந்த இடத்துல இதை ஏன் படிக்கக் கொடுத்தான்?' என்ற இசக்கி, அதை அதே இடத்தில் வைத்துவிட்டு இடப்பக்க டேபிளைப் பார்த்தான்.

சுடிதார் அணிந்த இளம் பெண் ஒருத்தி, சின்ன சட்டிக்குள் உருண்டு கொண்டிருந்த ஏதோ ஒரு பதார்த்தத்தை இரண்டு கரண்டிகளால் வெட்டிக் கொண்டிருந்தாள். அருகிலிருந்த நடுத்தர வயதுப் பெண்மணி, பெரிய தட்டில் வைக்கப்பட்டிருந்த கிண்ணங்களை டேபினில் பரப்பி, ஒன்றை மட்டும் கரண்டியால் மெதுவாக வாயில் வைத்துக் கொண்டிருந்தாள். இசக்கி அவளை உன்னிப்பாகக் கவனித்தான். அவளுக்கு இரண்டு கைகளும் நன்றாகவே இருந்தன. பிறகேன் அவள் கரண்டியால் சாப்பிட வேண்டும்?

இதற்குள் அழுக்கு உடையணிந்த ஒரு சிறுவன், டேபிளில் தண்ணீர் நிரம்பிய தம்ளரையும் இலையையும் போட்டுவிட்டுப் போனான்.

இலையைப் பார்த்த இசக்கி, "ஏந்தம்பி இங்க வா? இப்படியா இலையப் போடுவ? இலை போடுதிலயும் ஒரு முறை இருக்குலா? இந்தா பாரு, இந்த நுனிப் பக்கத்தை இடது கை பக்கமா இருக்குத மாதிரிதான் போடணும். சரியாடே?" என்றான்.

அந்தச் சிறுவன் விநோத ஜந்துவைப் பார்ப்பதுபோல் பார்த்துவிட்டு, பதில் சொல்லாமல் திரும்பிப் போனான்.

இவன் மற்ற டேபிள்களில் சாப்பிட்டுக் கொண்டிருப்பவர்களை வேடிக்கை பார்க்கத் தொடங்கினான். பசி வயிற்றைக் கிள்ளத் தொடங்கியது. நீண்ட நேரமாகியும் யாரும் அவன் முன் வந்து, "என்ன வேணும்?' என்று கேட்டபாடில்லை. இவனது கடையில் இப்படி இருந்துவிட முடியுமா?

"தோசையக் கொண்டா', 'இட்லியைக்கொண்டா', 'இங்க வச்சுட்டு மந்த வேலைய பாருப்பா', 'சாப்பிட வந்த ஆளைக் கவனிக்காம அடுப்புக்குள்ள என்ன பண்ணுத?' இப்படி ஆயிரத்தெட்டுக் கேள்விகள் வரும். இதற்காக ஒரு முறை மந்தை வீட்டு ஒழுக்குவுடன் சண்டைகூட போட்டிருக்கிறான்.

**சா**வகாசமாக மெனு கார்டை கொடுத்த வெள்ளைச் சட்டைக்காரன் வந்து "என்ன வேணும்?"என்றான்.

"சோறு இருக்கா?"

"சாப்பாடா?"

"ஆமா..."

"வேற"

"போதும்"

"சைட் டிஷ்...?"

"அப்படின்னா...?"

"மீன், இறைச்சி"

"அதெல்லாம் வேண்டாம். தொட்டுக் கிட, கூட்டுப் பொரியல் தருவியலா?"

"ஆங்."

_ எதையோ எழுதிக் கொண்டு வேகமாகப் போனான் அவன்.

சோற்றைக் கொண்டு வருவதற்கு ஏன் எழுதிக்



சீதாபிராட்டிக்கும், இராமபிரானுக்கும் திருமணம் நடந்த போது, இராமபிரானின் வயது பதின்மூன்று. இராமரின் இருபத்தொன்பதாவது வயதில் அவரின் வனவாசம் ஏற்பட்டது. முப்பத்தொன்பதாவது வயதில் அவருக்குப் பட்டாபிஷேகம். பிறகு அவர் எழுபது ஆண்டுகள் உலகில் வாழ்ந்திருந்து, தமது நூற்றிப் பத்தாவது வயதில் வைகுந்தம் திரும்பினார்!

- வே.ந. கதிர்வேல்

கொண்டுப் போகிறான் என்பது அவனுக்குக் கேள்வியாக இருந்தது.

வரப்போகின்ற சோறும், குழம்பும் எந்தவிதமான ருசியைக் கொண்டிருக்கும் என்ற சிந்தனையிலும், 'நாக்கைச் சுழட்டும்' என்று சுப்பையா மேற்கோள் காட்டியிருந்த வார்த்தையின் பொருட்டு அதிக எதிர்பார்ப்பிலும், இசக்கி காத்திருந்தான்.



''ஆட்டோ டிரைவரை நம்ம ஜவுளிக்கடைக்குள் நுழைய விட்டதே தப்பாயிடுச்சு...''
''ஏன்?''
''மீட்டருக்கு மேல வெட்டித் தாங் கன்னு கேட்டு அடம்பிடிக்கிறாரு''
— ஜோசப் காமராஜ்

**சா**ப்பாடு வந்தது.

சிறிய தட்டில் சாப்பாடும், சாம்பார், ரசம், கூட்டுப் பொரியல் எல்லாம் தனித் தனியாக சிறுசிறு கிண்ணத்தில் வைக்கப்பட்டிருந்தன. தட்டிலிருந்த மொத்தச் சோற்றையும் இலையில் தட்டினான். வைத்திருந்த கூட்டுப் பொரியல், சாம்பார் எல்லாம் இத்தினியூண்டு இருந்தது. இது எந்த மூலைக்குக் காணும்?

''ஏந்தம்பி, சாம்பாரை இன்னும் கொஞ்சம் கொண்டாப்பா.''

இன்னொரு கிண்ணத்தில் சாம்பார் வைத்தான்.

"இது காணாது."

வந்தவன், இவனை ஒரு மாதிரியாகப் பார்த்து விட்டுப் போய், இன்னொரு கிண்ணம் கொண்டு வந்து தந்தான்.

மொத்தத்தையும் சோற்றில் விட்டுப் பிசைந்தான். சாம்பார் காணாததாகத்தான் இருந்தது. அருகிலிருந்த ரசத்தையும் விட்டுக் கொண்டான். மொத்தமாகக் குழைத்தான். வயிறு இந்தச் சோற்றுக்கு ஆவலாக இருந்தது.

அவசரம் அவசரமாக எடுத்து வாயில் வைத்தான். சப்பென்று ஆகியது. சாம்பாரில் காரத்துக்குப் பதிலாக இனிப்பு!

"அடப்பாவியளா, சாம்பார்ல போயி இனிப்பைப் போடுவானுவளா?'' என்று வேண்டா வெறுப்பாக முனங்கினான். ஹோட்டல் மீதிருந்த மொத்த அபிமானமும் உடைந்து போனது. ''இந்தக் கூத்துக்கா, இந்தப் படபடப்பு?' அதற்கு மேல் அவனால் சாப்பிட முடியவில்லை. தம்ளரில் இருந்த தண்ணீரைப் படக்கென்று குடித்தான். இலையை மூடாமல் அப்படியே பரப்பி வைத்து விட்டு, ''ஏந்தம்பி, கை கழுவுத எடம் எங்க இருக்கு?'' என்றான்.

"ஏம் சாப்பிடலையா?"

"சோறு, குழம்பா வச்சிருக்கியோ? குழம்பு இனிச்சுப் போயி கெடக்கு. சோறு கல்லு மாதிரி இருக்கு. குழைய வேண்டாமா?'' என்று கேட்டுவிட்டு, அவன் கைகாட்டிய இடத்தில் கை கழுவினான். முகமெல்லாம் மெல்ல மெல்லக் கோபம் ஏறியது. உள்ளே சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்களைப் பார்த்து எரிச்சல்தான். "இதை எப்படி சாப்பிடுதானுவோ?''

''எவ்வளவு ரூவா ஆச்சு?'' சத்தமாகவே கேட்டான் இசக்கி.

''இருவத்தஞ்சு ரூவா.''

''இந்த ஒண்ணுமத்தப் பய சோத்துக்கு இவ்வளவு தேவைதான்''

டேபிளில் இருந்தவர்கள் இசக்கியைப் பார்த்தார்கள். மடியிலிருந்து அவிழ்த்துப் பணத்தைக் கொடுத்துவிட்டு, வேகவேகமாகப் பேருந்து நிலையத்துக்கு வந்தான். தென்காசி செல்லும் பஸ் காத்திருந்தது. ஏறி உட்கார்ந்தான். ஒரு மணி நேரப் பயணத்துக்குப் பிறகு, ஊர் வந்தது. நடந்தான்.

அவன் மனைவி, "கல்யாணம் எப்படி நடந்தது!" என்று கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல், "சோறு இருக்கா?' என்றான்.

"பழைய சோறுதான் இருக்கு."

"முதல்ல கொண்டா!"

தட்டில் வைத்த சாப்பாட்டைச் சாப்பிட்டபோது, அமிர்தமாக இருந்தது. ○



# இன்குரல் விறலி; சீறியாழ் லைட் மியூஸிக்!

‘சுக்கிலபட்சம் துவங்கி இரு தினங்கள் ஓடிவிட்டன. இரு நாழிகைகள் தாமதித்து மேலெழுந்த நிலவு, தன் வெள்ளிக் கிரணங்களை வெள்ளமெனப் பாய்ச்சி ‘வையையன்ன வழக்குடைவாயில்’ என்று போற்றப்பட்ட கூடல் மாநகரின் கோட்டை வாயிற் கதவுகளை, பந்தங்கள் எரிந்த மாடங்களுடனும், கவசங்களுடனும் இரும்புப் பூண்களுடனும் பளபளக்க வைத்துக் கொண்டிருந்தது. வாயிலைக் கடந்து உள்ளே புரவியைச் செலுத்திய இளந்திரையன் அங்காடியையும், அகநெடுந் தெருவையும் கடந்து, மீனாட்சி ஆலயத்தை நோக்கிச் சென்ற கூடல் சதுக்கத்தை அடைந்ததும் நின்றான். புரவிகளும், ரதங்களும் விரைந்து கொண்டிருந்த அந்த வீதியின் மறுபுறத்தில், அலங்கார வளைவுகளுடன் தெரிந்த ‘ஓட்டல் சரவண பவன்’ விடுத்த அழைப்பு ஈர்க்கவே, வீதியைக் கடந்து, புரவியை ஓரமாக ‘பார்க்கிங் ஏரியா’வில் நிறுத்திவிட்டுப் படிகளில் ஏறினான். வாயிற்காவலரின் வணக்கத்தை தலையசைத்து ஏற்றவன், உள்ளே நுழைந்து, டின்னர் கொண்டு வர ஆணையிட்டான்.

அப்பிட்டைசராக முதலில் தக்காளி சூப்பையும், ஆரம்ப உணவாக சில்லி கோபியும், கோபி மஞ்சூரியனையும், அடுத்து ஃப்ரைட் ரைஸ் வித் புதினா கிராவியையும் உண்ணத் தொடங்கினான்...’ என்று எழுதினால் அடிக்க வருவீர்கள்.

பொறுங்க... இப்பவும், அப்பவும், எப்பவும், நம்ம சாப்பிடறது பொதுவா அதே அரிசி, பருப்பு, அதே கடுகு, மிளகு, சீரகம், அதே எண்ணெய் வகை, மிளகு, பால் தயிர், காய்கறிகள் என்றுதானே இருக்கு? அடிப்படையான விஷயங்கள் ஒண்ணுதான். செய்யற முறையும், நம்ம டேஸ்ட்டும்தான் மாறியிருக்கு.

சரித்திர காலத்தில சாப்பாடு, விருந்து, உபசாரம்னாலே முதல்ல ஹாட் டிரிங்ஸ்தான். ஃப்ரெஷ்ஷான கள், யவன மது, அப்புறம் வேக வைத்தது, அவித்தது, பொரித்தது, கடைந்தது, சேர்த்துக் கலப்பது, அப்படியே சாப்பிடுவது என்று அதே வகை, இடத்துக்கும் சாப்பிடுபவர் நிலைக்கும் ஏத்த மாதிரி மாறியிருக்கும். அவ்வளோதான்.

‘.......
அவையா வரிசியங்
களித் துழவை
மலர்வாய்ப் பிழாவற்
புலர வாற்றிப்
---
நறும்பழி தண்மீன்
சூட்டோடு
தளர்தலும் பெறுகுவீர்’

கொழியலரிசியைக் கூழாகத் துழாவிச் சமைத்து, சூடு ஆறும்படி அகன்ற தட்டிவிட்டு, சுட்ட மீனும், சுவையான கள்ளும் கருப்பஞ்சாற்றுடன் தருவார்களாம், தொண்டைமான் இளந்திரையனின் நாட்டின் குக்கிரா



தாம்பூலத்தோடு வரும், என்கிறது மதுரைக்காஞ்சி.

கொஞ்சம் ஹில் ஸ்டேஷன்ஸ் பக்கம் போனால், அதிகமா அடி படறது என்.வி. ஐட்டங்கள்தான்.

நவிரமலை மன்னன், நன்னனைப் பார்க்கப் போறவங்க வழியில என்னென்ன சாப்பிடறாங்கன்னு பார்த்தா, அசத்திடுது. எல்லாம் ஃப்ரீ சாப்பாடுங்க!

மலைப் பாதையே குளுகுளுன்னு இருக்கும். அடர்ந்த உயரமான மரங்களும், விழுதுகளும், கொடிகளும் சுத்தி வர, மந்திகளும் மான்களும் உடும்புகளும் நம்மைப் பார்த்து 'காச்முச்'சுன்னு ஓட, பட்சிகள் கூட்டம் (பேரெல்லாம் எழுதினா ஒரு புக் போதாது) விதவிதமா குரல் கொடுக்கும்.



சோறிடுஞ்சாலை, பர்ணசாலை மாதிரி அழகான காட்டேஜ். நுழைஞ்சதும் 'இன்குரல் விறலியரின் கருங் கோட்டுச் சிறியாழ்' லைட் மியூசிக் கேக்கும். இறால் மீன், காட்டு மான்கறி, சுக்கான்கல் உடும்பு, கோழி (சிக்கன் 65...?), கொடி மிளகு போட்டுச் சமைத்த காரசாரமான குழம்பு வகையறா. நூறைக் கிழங்கு, காட்டுக் கிழங்கு பொரியல், மூங்கில் குழாயில் தோய்த்து வைத்த காட்டெருமைத் தயிர், ஐவன நெல்லரிசி, வெண் நெல்லரிசிச் சாதம்... போதுமா?

'செவ்வி வேங்கைப் பூவினன்ன
வேய் கொளரிசி மிதவை சொரிந்த
கவல்விளை நெல்லின் அவரையம் புளிக்கூழ்'
(மெனு புரியுதா?)

அவரை விதையும் முங்கிலரிசியும் வேக வைத்து, கூழாக்கி, உலையிலே ஏற்றி வைத்த புளிக்குழம்பு, சூடாக நெய் விழுது கலந்து.... ஒரு பிடி பிடிச்சா!

...மத்தில். கிராமங்களைக் கடந்து காஞ்சி நகரை நெருங்க, நெருங்க இன்னும் கூடுதலாயும், உயர்ந்ததாயும் உணவு கிடைக்கும்.

பாண்டி நாட்டில் 'சோறிடும் சாலைகள்', அதாங்க, ஓட்டல்கள் எக்கச்சக்கம்.

பாகற்காய், வாழைக் காய், அவரை, வழுதுணங் காய் (கத்தரிக்காய்), முந்திரி, வாழை, பழங்கள், கீரை வகை, நூறைக் கிழங்கு, வள்ளிக் கிழங்கு, கோரைக் கிழங்கு, குழம்பு வகைகளும் கறி வகைகளும், தயிரும், மோரும், போதாது என்று கடைசியில் சூடான பால் சோற்றையும் போடுவார்களாம். கூடவே பலாச் சுளை, மாம்பழம், எல்லாம்

சோழன் நலங்கிள்ளி காலத்தில வயல்ல ஆலோலம் பாடி, காவல் இருக்கறவங்க கொஞ்ச நேரம் கீழே இறங்கி, பனை மட்டையில் கழனி மீனைச் சுட்டுத் தின்னுவிட்டு, மினரல் வாட்டர் மாதிரி, இளநீராப் பறிச்சு குடிப்பாங்களாம்.

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனோட சோழ நாடு, சாப்பாட்டு விஷயத்தில் ரொம்ப ரிச். வரகரிசியை எடுத்துச் சலித்து, தண்ணீர் விடாம, பாலைவிட்டு சோறு பொங்கி, கொழுத்த குறுமுயலைப் பிடிச்சு காரமான கறி சமைச்சு, இனிப்புக்குத் தேன் கலந்து சாப்பிடுவாங்க.

என்ன ஒரே ஒரு முக்கிய விஷயம்னா, அப்போ யாருக்கும், ஷுகர், பி.பி, கொலஸ்ட்ரால் எதுவுமே இல்லை. ஏன்னா எல்லாம் இயற்கையா கிடைச்ச பொருள்கள். கூடவே எல்லாருக்கும் கடுமையான உழைப்பும் இருந்தது. இப்போ, இயற்கையும் இல்லை, உழைப்புமில்லை.

சரி விடுங்க, அந்தப் பக்கம் புதுசா ஏதோ ஃபாஸ்ட் ஃபுட் திறந்திருக்கான். போய்ப் பார்த்துட்டு வரலாம் வாங்க!

— வி




# பச்சை டீ!

அடிக்கடி தேநீர் அருந்தும் 'டீ எஞ்ஜின்' பார்ட்டியா நீங்கள்? கப் கப்பாக சாலையோரக் கடைகளில் தேநீர் அருந்துவது, எத்தனைப் பெரிய தப்பு என்பதைத் தெரிந்து கொள்ளும் முன், தேயிலை பற்றிய புதிய ஆராய்ச்சி முடிவைத் தெரிந்து கொள்ளுங்கள். தினசரி ஒரு கப் தேநீர் அருந்தினால் போதும். புற்று நோய்த் தடுப்பு, நீரிழிவு நோய் எதிர்ப்பு, இதய நோய் தடுப்பு, உடல் எடை குறைப்பு, நோய் எதிர்ப்புச் சக்தி அதிகரிப்பு ஆகிய ஐந்து மருத்துவக் குணங்களை நீங்கள் பெற முடியும். ஆனால் இந்த நன்மைகள் நாம் தினசரி பயன்படுத்தும் பதப்படுத்தப்பட்ட கறுப்புத் தேயிலையில் ஒப்புக்குச் சப்பாணிதான்.

ஆனால் கிரீன் டீ எனப்படும் பச்சைத் தேயிலையில், இந்த வினைச் சத்துக்கள் சிந்தாமல் சிதறாமல் அப்படியே இருக்கின்றன. ஏன் தெரியுமா? பச்சைத் தேயிலையைப் பறித்து, சத்து இழப்பின்றி நிழலில் உலர்த்திப் பயன்படுத்துவதே கிரீன் டீ!

நோய் எதிர்ப்புத் திறன் கொண்ட சத்துகள், பச்சைத் தேயிலையில் நிறைந்திருப்பதை ஏற்றுக் கொண்டு, 'சர்வதேச மூலிகை' என்ற அங்கீகாரத்தை உலக சுகாதார நிறுவனம் பச்சைத் தேயிலைக்கு வழங்கி இருக்கிறது.

ரேடியேஷன், கீமோதெரபி சிகிச்சை செய்து கொள்ளும் புற்று நோயாளிகளை, பச்சைத் தேயிலை அருந்தச் செய்து மேற்கொண்ட ஆய்வில், இவர்களுக்கு நோய் எதிர்ப்பு சக்தி கணிசமாக உயருவதையும் கண்டு பிடித்திருக்கிறார்கள். தவிர, இரத்தக் குழாய்களில் படிந்துள்ள கொழுப்பையும், வயிறு, பின் முதுகில் குவியும் உபரிக் கொழுப்பையும் கரைக்கும் கில்லாடி வேலையையும் கிரீன் டீ செய்கிறதாம்.



• இளவரசு

சரி! கிரீன் உட்கொள்வதால் பக்க விளைவுகள் உண்டா? "தினசரி நான்கு முதல் பத்துக் கோப்பைகள் வரை சாப்பிட்டால் ஓ.கே. அதற்கு மேற்பட்டால் தூக்கமின்மை ஏற்படலாம்" என்றார் சென்னையைச் சேர்ந்த ஜி டீ பொட்டானிக்கல் எக்ஸ்ட்ராக்ட் நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர், டி. இளவரசு. ஊட்டி ஜே.எஸ்.எஸ். பார்மஸி கல்லூரியில் - முதுகலை பட்டம் பெற்ற தேயிலை ஆராய்ச்சியாளர் இவர். பச்சைத் தேயிலையை ஜிடாக்ஸ் என்ற பெயரில் கேப்ஸ்யூல் வடிவத்திலும், ஜிடீ என்ற பெயரில் சேஷே பாக்கெட்டுகளில் டிப்-டீயாகவும் விற்பனைக்குக் கொண்டு வந்திருக்கிறது இவரது நிறுவனம்.

பச்சைத் தேயிலை, புற்று நோய் வராமல் தடுப்பது ஒரு புறம் இருக்க, பெரும்பாலான ரோட்டோரக் கடைகளில், நிறம், மற்றும் அடர்த்திக்காக இரசாயனப் பொருள்கள் கலக்கப்பட்ட கலப்படத் தேயிலையைப் பயன்படுத்துவதால், புற்று நோய் மற்றும் குடல் நோய்கள் தாக்குதல் அதிகம் என்பதையும் கண்டு பிடித்திருக்கிறார்களாம்.

- ஜெய்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05* Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05
* Registered as a Newspaper in Srilanka Supplement to the Kalki issue Dated 30.5.2004

# SABOLS
PACKAGED DRINKING WATER

ஹா சபோல்ஸ்!

## நம்பகமானது சபோல்ஸ்!
## நாடே சொல்லுது சபாஷ்!

330 மிலி, 500 மிலி, 1 லிட், 2 லிட் & 5 லிட் பாட்டில்கள் மற்றும்
20 லிட்டர் பப்பிள்டாப் கேன்கள் என பல்வேறு அளவுகளில் கிடைக்கின்றன.

IS 14543

CM/L - 63238 62

இப்பொழுது சபோல்ஸ்
பாதுகாப்பு சீல்
ஹோலோகிராம்
முத்திரையுடன்!

SABOLS
PACKAGED DRINKING WATER

**Asheerwath Enterprise** P-48, 17th Street, 6th Avenue, Anna Nagar, Chennai - 40
Ph : **55692383 / 26203567 / 98403 - 77767 / 98401 - 55922**